# சிலப்பதிகாரக் காட்சிகள்

வித்வான் விசு. திருநாவுக்கரசு




ஸ்டார் பிரசுரம்

திருவல்லிக்கேணி மேலக்கோபுரத்தெரு

சென்னை-5 மதுரை

# முன்னுரை

---

1949-ம் ஆண்டில் 'பொன்னி' இதழில் 'சிலப்பதி காரக் காட்சிகள்' என்னும் தலைப்பில் 'அறிமுகம்' என்ற முதல் கட்டுரை வெளியாயிற்று. பின்னர் இருபத்திரண்டு கட்டுரைகள் தொடர்ந்து வெளி வந்தன. 'பொன்னி யின்' புற அட்டையில் கட்டுரைகளுக்கேற்ற வண்ண ஓவியங்கள் நிலவின.

தமிழ்க் காவியத்திலும்—கவிதையிலும் மோகம் கொண்ட வாசகர்கள் பலர் கட்டுரைகளைப் படித்துத் தம் அன்பை வடித்துக் கடிதமெழுதி ஊக்கினார்கள். அதன் பின் சென்ற ஆறு ஆண்டுகளாக ஓய்வு கிடைத்த பொழுதெல்லாம் — சிலப்பதிகாரத் தோடு கொண்ட உறவே இந்நூலாக உருக்கொண்டது.

சிலப்பதிகாரத்தின் அருமை அறியாப் பருவத்தே— பள்ளியில் சிறுவனாய்ப் பயின்ற நாளிலே—ஆன்ற புலமை வாய்ந்த பெரியவர் ஒருவர், தம் பேச்சிடையே வெளிப்படுத்திய 'சிலப்பதிகாரம்' என்ற தொடர் மொழி யிலும் அதில் நிரம்பிக் கிடக்கும் ஓசை நயத்திலும் என் உள்ளம் கட்டுண்டது.

தோழி சுதமதியிடம் மாதவி கோவலனுற்ற கொடுந் துயர் கூறிய நாளில், அருகிருந்து கேட்ட மணிமேகலை போல் இக்காவியக் கதையைப் பிறரிடம் நான் கேட்ட பொழுதெல்லாம் கண்ணீர் விட்டிருக்கிறேன். பின்னர் தமிழ்ப் புலமைத் தேர்வின் பொருட்டு நான் பயின்ற நாளில் இக்காவியத்தைப் படிக்கும் வாய்ப்பு 1939-ம் ஆண்டு எனக்கு ஏற்பட்டது. அதுமுதல் 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தின்' இயல்பைப் பலவாறு உணர்ந்து வருகிறேன்.

இக்காவியக்கதை எழுதிய இளங்கோவடிகளை—அவர் நுண்ணிய புலமையை நாளும் எண்ணுவதற்கு அவரது வண்ணப்படம் ஒன்று வேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தே பிறந்தது. அதன் பயனாய் நூலில் கிடைக்கும் சான்றுகளைக் கொண்டு ஒருவாறு கற்பனை செய்யப்பட்டது. அக்கற்பனை உருவத்தை வண்ணப்படமாக மூன்று நிறங்களில் தக்க ஓவியர் ஒருவர் எழுதினார். அப்படத்தைக் காலஞ்சென்ற மாண்புசால் செட்டி நாட்டு அரசர்—மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்களைக் கொண்டு என் பிறப்பிடமாகிய கோனாபட்டில் திறக்கச் செய்து 1943-ல் அடிகளுக்கு, கோநகர் வாசிகளால் சிறப்பொடு விழாவும் செய்யப்பட்டது.

இவ்வாறு அடிகளின் புறப்படத்தை வரைவித்தது போல அவரது அகப்படமாகிய சிலப்பதிகாரத்தின் பல்வகைச் சிறப்புக்களைக் காட்டவேண்டும் என்ற பிறிதொரு எண்ணமும் நீண்ட நாளாகவே என் உள்ளத்தில் வேர் விட்டு வந்தது. தமிழன்னையின் கடைக் கண்ணோக்கினாலும்—என் இனிய நண்பர்கள் காட்டிய ஆர்வத்தாலும் இப்பொழுது அது நிறைவேறுகிறது.

மாடமதுரைக்கு நான் செல்லும்பொழுதெல்லாம் என் உள்ளம் கீழ்த்திசை வாயில் வழிப்புகுந்த கண்ணகி-கோவலனை எண்ணி ஏங்கும். கணவனை இழந்த நிலையில் கண்ணகி தனியளாய்ப் பிரிந்த மேற்றிசை வாயிலைக் கண்டு சோகமுறும். இவ்வாறு இக்கதையிலே வரும் நாடக மாந்தர் உறவினராகி என்னுள் நிற்கின்றனர். இத்தகைய உள்ளத்தோடும்—உணர்ச்சியோடும் இந்நூலை அணுகியிருக்கிறேன். இலக்கிய அழகு—உரையாடல் நுணுக்கம் — நாடகப் பண்பு — புனைந்துரையாற்றல்—நாடக மாந்தர் இயற்கை—இவைகளை யெல்லாம் புலப்படுத்துவதன் மூலம் காவியக் கவிதையின் சுவையை—உரை நடையில் கொண்டுவர முயன்றிருக்கிறேன். மூலத்தைப் படிக்கவேண்டும் என்ற எண்ணத்தை இவை தூண்டுமென்று நம்புகின்றேன். சிலப்பதிகாரத்தின் சிறந்த நிகழ்ச்சிகள் எல்லாம் கதைத் தொடர்பு விடாமல் காட்டப்பட்டுள்ளன. **தமிழகத்தின் ஒரே ஆதி காவியமான** இந்நூலை ஒவ்வொருவரும் பண்பாடு அறியப் படிக்கவேண்டும்-பயனுறவேண்டும் என்ற என் எண்ணம் இதன் மூலம் நிறைவேறு மென்று எண்ணுகிறேன்.

இந்நூலை என் அருமை **அலர்மேல்** அன்னையாரின் பொன்னடிகளுக்கு உரிமையாக்கி இருக்கிறேன். பெண்ணின் பெருமை பேசும் இந்நூலை அன்னையார்க்கு உரிமையாக்குவதிலுள்ள தொடர்பை உவப்புடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கோனுபட்டு
12—4—1958

**விசு. திருநாவுக்கரசு.**

## உரிமை

என் கண்ணையும் கருத்தையும் விட்டு அகலாது என்னுள் நின்று மலர்முகம் காட்டும் அலர்மேல் அன்னையாரின் பொன்னார் திருவடிகட்கு.

# உள்ளுறை




# 1. அறிமுகம்

தமிழன்னையின் பொன்னன திருவடிகளை அலங்கரித்து நிற்கும் அரிய பெரிய காவியம், சிலப்பதிகாரம். வழிவழிச் செங்கோலோச்சிய சேர வேந்தர் மரபிலே, தோன்றிய துறவி இளங்கோவடிகள் கடைச் சங்கமிருந்த கி. மு. மூன்றும் நூற்றுண்டின் முற்பகுதியிலே, முத்தமிழ் நலம் கனிந்த புத்தம்புதிய இந்நூலை, உரை நடையாலும், கவிதையாலும் புனைந்து, பாரதியார் கூறுவதுபோல நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரமாய், தமிழ் நாட்டின் மணியாரமாய்த் தொடுத்துச் சூட்டுவாராயினர்.

சிந்தாமணி, மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி போன்ற காவியப் பெருநூல்களில் எவற்றுக்கு மில்லாத தனித்த, சிறப்பியல்புகள் பலவற்றைச் சிலப்பதிகாரம் தாங்கி நிலவுகிறது. காலத்தால் முற்பட்ட இந்நூல், கவிதை—கன்னிளமைத் திறங்களால் மேம்பாடு பெற்று மிளிர்கிறது. இன்னிசைப் பாவாலும், நுண்ணிய கலைப் பண்பின் செறிவாலும், மேற்கொண்ட கதையாலும் இணையற்றதாகி நிற்கிறது.

இயற்கை, மெய்ம்மை இரண்டிலிருந்தும் வழுவாது பாட்டெழுதிக் குவித்த் சங்ககாலப் பரம்பரையிலே காவிய நாடக அமைப்பில், முதன் முதலாய் எழுந்த பெருநூல் இதுவேயாகும். தமிழ்மொழியில் வடமொழிக் காவியக் கதைகள் மொழி பெயர்ப்பாய், வழிநூலாய் வந்த வண்ணமிருந்த நிலையில், தமிழ் நிலத்தில் பிறந்த கதை, சிலப்பதிகாரமாகும். வேந்தர் குலத்தில் பிறந்து வளர்ந்த துறவி இளங்கோவடிகள், மன்னர் குலக்கதை யொன்றை ஆக்க விரும்பாமல், மக்கள் தம்முள் ஒருவனைக் கதைத் தலைவனாகக் கொண்டதும், கரிகாற் சோழனை முடிமன்னனாக ஆக்காமல் குடிமக்களுள் ஒருவனாகக் காட்டியதும், குடியரசு நாட்டில் வாழும் நமக்கெல்லாம் வியப்பாய் அமைந்துள்ளது. கதை நிகழ்ந்த நாளில் அதைக் கண்ணுற் கண்டும், அறிவால் உணர்ந்தும் ஆசிரியர் ஒருவரால் எழுதப்பட்ட சிலப்பதிகாரம் தமிழ் இலக்கிய வானில் இணையற்று மிளிர்கிறது.

அரசர் நீதியில் சிறிது தவறினும் அவரை அறக் கடவுள் கொல்லும், கற்புடை மகளிரை உயர்ந்தோர் ஏத்துதல் இயல்பு, ஊழ்வினை செய்த முறையே செய்தவரை நாடிவந்து தன் பயனை அளிக்கும் என்ற மூன்று சிறந்த குறிக்கோள்களை நிலைக்களனாய்க் கொண்டு இக்காவிய மாளிகை எழுப்பப்படுகிறது. இம்மாளிகையின் மஞ்சத்திலும், நிலாமாடத்திலும் உலாவிவரும் நாடக மாந்தருள் முதன்மை வாய்ந்தோரும் மூவரே! அவர் — கோவலன் — கண்ணகி — மாதவியாவர். சோழநாடு, பாண்டியநாடு, சேர நாடுகளிலும், முறையே பூம்புகார்—மதுரை—வஞ்சி நாட்டின் தலை நகரங்களிலும் இக்காவியக் கதை நிகழ்ந்திருக்கிறது. அந்நாட்டின் முடிமன்னர் மூவரும் கதையிடையே வருகின்றனர். கதையின் ஒரு நிகழ்ச்சி அளவிலேயே அவர்கள் மறைந்துவிடுகின்றனர். சாதாரண

குடிமக்களில் ஒருத்தியாகிய கண்ணகியே கதை முழுதும் நீக்கமற நின்று நிலவுகிறாள்.

இந்நூல் விரிக்கும் மூன்று காண்டங்களும் மூன்று சுவைகளைப் புலப்படுத்துகின்றன. பூம்புகார் நிகழ்ச்சிகள் இன்பமாய், மதுரை நிகழ்ச்சிகள் துன்பமாய், வஞ்சி நிகழ்ச்சிகள் வீரமாய் முடிகின்றன. மாதவியின் இன்பக் களிப்பு, கோவலனின் சோக முடிவு, கண்ணகியின் கற்பிலே உதயமாகும் வீரவாழ்வு—பவளமாலையின் ஊடே செல்லும் பொற்சரடுபோல கதை இடையே நுட்பமாய் ஊடுருவிச் செல்லக் காணுகிறோம். கண்ணகி வாழ்வில் சோகமுண்டு. நிரம்ப வீரமுண்டு. இன்பம்—அவள் அறிந்தனளோ இல்லையோ என்று ஐயம்கொள்ளுமாறு மறைந்து விட்டது. மாதவி காதலில் மயங்கிய கோவலனைக் கண்ணகி வனப்பு கவர்ந்ததில்லையே! கோவலனை மகிழ்விக்கின்ற அளவிற்குக் கண்ணகியிடம் திறமில்லை என்பது உண்மைதான். அதற்குக் காரணம் பருவமும்—ஏற்பட்ட மிகச் சிறிய அனுபவமுமேயாகும். கண்ணகிக்கு மணம் முடிக்கும் நாளில் வயது—பன்னிரண்டு. கோவலனுக்கு வயதோ பதினாறு. ஆண்மையாலும் அரிய கலையுணர்வாலும் ஆண்டிற்கு மேற்பட்ட அநுபவம் கோவலனுக்கு இருந்தே வந்தது. இதற்கொப்பான பண்புகள் கண்ணகியிடமிருந்ததில்லை என்பது புலப்படும். இருவரது தாயும் தந்தையும் மணக்கோலம் காணவே விரும்பினர். இச்செய்தியை அடிகள்: 'இருபெருங்குரவரும் ஒரு பெருநாளான், மணவணி காண மகிழ்ந்தனர்' எனக் கூறுவாராயினர். இவைகளிலிருந்து கதைவிரிந்த அமைப்பை ஆராய்ந்தால் பேருண்மை ஒன்று புலப்படும். கணவன் அன்பைத் தொடக்கத்தில் பெறமுடியாதுபோன கண்ணகியின் உள்ளத்தில்—காலப்போக்கில் வளர்ந்து உருவாகி வந்த பெண்மை அறமும், பொறுமை உணர்வும்,

வருங் காலத்தில் அவள் செய்யவிருக்கும் புரட்சிக்கு உரம் தந்து வளர்த்தன என்று உணரலாம். கோவலன் முடிவு கேட்ட கண்ணகி உயிர்எனத் தான் இதுவரை நினைத்து வந்த ஒன்றை — இழந்த நிலையில் பிறந்த கோபமும்— இணைந்து வளர்ந்த ஏக்கமும் கொண்ட வடிவினளாய் மாறிப்போகிறாள். ஆறாத துன்பத்திலும் — அடங்காத சினத்திலும் எழுந்த மறத்தீ, நீறுபூத்த நெருப்பாய் வஞ்சி மலை நாட்டில் அடங்கி விடுகிறது.

இனி இவைகளை ஆராய்வதன்மூலம் ரசனை குன்றாது அமையும் பகுதிகளைக் காண்போம்.

காவியக் கதை அமைப்பிலே வரும் நாடக மாந்தருள் தலைவனும்—தலைவியுமே சிறந்தோராவர். கோவலன் கதை முழுதும் தொடர்ந்து வருவதாய்ச் சொல்வதற்கில்லை. ஆனால் கோவலன் நிழல் கண்ணகியைத் தொடர்ந்தே கதை முழுதும் பரவுகிறது. கதையின் முற்பகுதியில் பெரும்பகுதியைக் கண்ணகி மாதவிக்கு வழங்கி, அவர்களது இன்பக் களிப்பிலே தானொரு ஏக்கமான பாத்திரமாய்த் தனியளாய் நிற்கவே காணுகிறோம். இந்நிலையில் வளர்ந்து விரிந்தோடும் கதையிலே கண்ணகி முதன்மை முழுதும்பெற்ற குணச் சித்திரமாக நிலவுகிறாள்.

காவியத் தலைவியாகிய கண்ணகியை முதன் முதலாக ஆசிரியர் எவ்வாறு அறிமுகப்படுத்துகிறார்? இனிக் காண்போம்.

தலையிலிருந்து தொடங்கி கால்வரை வருணிப்பதுண்டு. அதைக் 'கேசாதிபாதம்' என்பர். அவ்வாறே காலிலிருந்து தொடங்கி, தலைவரை வருணிப்பதைப் 'பாதாதிகேசம்' என்று கூறும் மரபொன்று உண்டு.

இவைபற்றிய விரிவுகள் 'இலக்கண விளக்கத்துள்' கூறப் பட்டுள்ளன. இந்நெறிவழிப் புகுந்து அங்கே, காவியத் தலைவியையோ தலைவனையோ அறிமுகப்படுத்தும்போது, ஆசிரியர் சிலர் பண்பிழந்து போவதுமுண்டு. பலர் மனம் போனபோக்கில் கற்பனைத்திறன் எல்லை காட்டும் வரை யில், எத்தனை எத்தனையோ பாடல்களை எழுதிக் குவித் திருக்கிறார்கள். கம்பரும்-பிறகவிஞரும் இதில் சளைத்த தில்லை. (கம்பன்—கிஷ். காண்டம் - நாட விட்ட படலம் - செய்யுள் 33 முதல் 66 முடிய). ஆனால் இளங்கோவடி கள் தம் காவியத் தலைவியாகிய கண்ணகியை முதன் முத லாய் அறிமுகப்படுத்துவதைப் பாருங்கள்:

மாகவாணிகர் வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்
ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண்டக வையாள்
அவளுந்தான்,
போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெரிங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னும் கண்ணகியென்பாள் மன்னோ.

கண்ணகியின் தந்தை பெயர் அவன் இயல்பொடு இணைந்து வருகிறது. மேகம்போல அள்ளி வழங்குகின்ற கை 'வாணிகர் வண்கை' என்ற ஆற்றல் வாய்ந்த இச் சொற்களால், நம் கண்ணெதிரே கண்ணகியின் தந்தை கொண்டுவரப் படுகின்றான். அவன் வழிவந்த குலக்கொடி யாகிய கண்ணகி தோற்றத்தால் பொற்கொடியாகிறாள். அவள் மணப்பருவ மடைந்து விட்டாள். கணவனொரு வனது கைப்பிடித்து வாழவேண்டிய வயது வந்தவள் என் பதை இளங்கோ 'கொம்பர்' என்ற சொல்லின் முகமாகப் புலப்படுத்தக் காணுகிறோம். படர் பருவம் வந்த அக்

கொடிக்குக் கொழு கொம்புபோல வாய்த்தான்கோவலன். கண்ணகியின் வடிவழகுபற்றிப் பேசிய கவி, இனி அவளது குணவழகு பற்றியும் கூறுகின்றார். அறிஞர் கூட்டத்தால் ஒருவன் அறிவாளன் என்று அழைக்கப்படுவதே அவனுக்குத் தரும் உண்மையான சிறப்பாகும். அதைப் போலவே அறிவொடு அழகமைந்த மாதர்கள் தம்மினத்துக் கண்ணகியை எங்ஙனம் புகழ்ந்து பேசுகின்றனர் என்பதை நம் காதுகொண்டு கேட்க வைக்கின்றார் ஆசிரியர். திருமகள் போன்ற அழகினள். அருந்ததி போன்ற கற்பினள் எனக் கண்ணகியின் அழகும், ஒழுக்கமும் மகளிரால் பேசப்படுவதோடல்லாமல் அவர்கள் கண்ணகியை நினைத்து வணங்கவும் செய்கிறார்கள். துறவியாகிய ஆசிரியர், ஒரு பெண்ணின் பேரழகைத் தம் துறவறத்திற்குச் சிறுமாசும் நேராதவாறு புதிய நெறியிலே கண்ணகியின் அழகை — அருங்கற்பை, பெண்களைக் கொண்டே பேசவைத்த அருமையை, ஆழ்ந்த புலமையை, இரண்டாலும் வந்த புதுமையை உணர்ந்து நாம் வியக்கின்றோம்.

இத்தகைய கண்ணகிக்கு வாய்த்த கணவன்—கதைத் தலைவன்—கோவலன் :

மண்தேய்த்த புகழினன் மதிமுகமடவார் தம்
பண்தேய்த்த மொழியினர் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேள் என்று இசைபோக்கிக் காதலால்
கொண்டேத்தும் கிழமையான் கோவலனென்பான் மன்னோ

என்று பேசப்படுகின்றான். மாசாத்துவான் மகனாகிய கோவலனுக்கு மணப்பருவம் வந்தது. வயது பதினாறு. அவ்வயதிலேயே உலகத்தைச் சிறிதாக்கித் தன் புகழைப் பெரிதாக்கிய புகழ்ச் செல்வன் கோவலன் என்கின்றார் கவி. பேதை மடவார் பெருங்கூட்டம். ஆங்கே, கோவலனின் பேரழகு அடிக்கடி பேசப்படுவதுண்டு. 'இனிய

சொல்லும்' மிக்க அழகும் வாய்ந்த அம்மகளிர் 'கண் டேத்தும் செவ்வேள்'—அதாவது: முருகனைப் போன்ற அழகுடையவன் கோவலன் என்று கூறுவராம். இவ்வாறு கூறுவதன் மூலம் அம்மகளிரது உள்ளத்தில் கோவலன் காதல் வடிவில் காணப்பட்டதாய்க் கொண்டால் தவறு இணையற்றதாகிவிடும். மகளிர்களது கூட்டத்திலே கோவலன் அழகு பாராட்டப்பட்டது. அவன் அழகுக்கு ஒரு எடுத்துக்காட்டாக முருகன் கூறப்படுகிறான். முருகன்—அழகன்—அவன் கடவுளாக வழிபடப்பெறுகிறான். மகளிர் முருகனை ஒப்பிட்டதின் மூலம் வணங்கத்தக்க அழகு உடையவன் என்ற பொருளுணர்ச்சியில் கோவலன் பால் ஒரு தெய்வ அழகு இருந்தது என்றும், அது வணங்கத் தக்கதாய் அவனுக்கு வாய்த்தது என்றும் ஆசிரியர் உணர்த்தக் காணுகிறோம். இத்தகைய மன உணர்வில் நின்றே அம்மகளிர் பேசுவதாய்க் கவி காட்டுவது, நம்மை வியப்பிடை ஆழ்த்துகின்றது.

கண்ணகியின் கற்பைத் 'தீதிலா வடமீனின் திற மிவள் திறம்' என மாதரால் பேசவைத்த ஆசிரியர், அவள் பேரழகிற்கு மாசு நேராத கற்பை உணர்த்தத் 'தீதிலா' என்றொரு அடைமொழியால் பிறர் நெஞ்சு புகாக் கற்பு என ஒன்றால் மற்றொன்றைச் சிறப்பித்தார். இத்தகைய கண்ணகிக்கும் கோவலனுக்கும், பூம்புகார் நகரிலே திருமணம் நிகழ்ந்தது. நீலவிதானத்து நித்திலப் பூம்பந்தர்க் கீழ் மணமக்கள் இருவரும் வீற்றிருக்கின்றனர். உற்றாரும், உறவினரும் புதுமலர் தூவி வாழ்த்துகின்றனர். கோவலன் கை, கண்ணகியின் மணித்தோளைவிட்டு நெகிழாது இருக்கட்டும் என்பது அவர்களது உள்ளார்ந்த எண்ணம்.

★

## 2. மாதவி காதல்

பூம்புகார் நகரத்திலே, கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் முடிந்தது. மனையற வாழ்க்கைக்குரிய தனிமனையும், பணியாளரும், பிற செல்வமும் வழங்கி இருவரையும் வாழ்வு நடத்துமாறு செய்தனர் பெற்றோர். கோவலன் கண்ணகியின் வனப்பிலே ஈடுபட்டுப் பலபடியாக, அவள் நலம் பாராட்டினான். கண்ணகியோடு கோவலன் கொண்ட வாழ்க்கை நீடிக்கவில்லை. கண்ணகிபால், கோவலன் கொண்ட காதலோ, சூரியன் வருகை முன்னே அழிந்தொழியும் பனித்துளிபோல, மாதவியின் கலையழகின் முன்னே மறைந்துபோய் விடுகிறது. கண்ணகியின் வனப்பு ஒன்றுமட்டுமே, கோவலன் உள்ளத்தில் வாடாத காதலை வளர்த்துவிட முடியுமா? அல்லது, குழலும் யாழும், அமிழ்தும் குழைத்த கண்ணகியின் கனிமொழி தானும், கோவலன் உள்ளத்தில் கோபுரமாய் எழுந்துவரும் கலையுணர்வுக்கு விருந்தாகிவிடுமா? அழகிலும், ஆடலிலும், பாடலிலும் ஆகிய மூன்றிலுமே உள்ளத்தைப் பறிகொடுத்த கோவலனுக்குக் கண்ணகியிடமிருந்து கிடைத்ததெல்லாம் அழகொன்றுதான். மற்றிரண்டையும் கோவலன் உள்ளம் நாடியே வந்தது.

புகார் நகரில், நாடகக் கணிகையர் குலத்திலே வந்த சித்திராபதியின் மகளாய்த் தோன்றிய மாதவியோ, ஆடலும், பாடலும், அழகும் நிரம்பியவளாய்த்தன் பன்னிரண்டாம் பருவத்தே, வீரக்கழல் புனைந்த திருமாவளவன், முன்னிலையிலே அரங்கேறி நடனம் ஆடினாள். அவளைப் பாராட்டிப் பரிசு தருமுகமாக மன்னன், பச்சை மாலையையும் 'தலைக்கோல்' என்ற பட்டத்தையும் உவந்தளித்தான். இதை யெல்லாம் கண்டுகளித்த கோவலன் மாதவி காதலில் மயங்கியவனாய்த் தேனில் விழுந்த வண்டெனச் சொக்கிப் போகிறான். அக்கால வழக்கப்படி, மன்னன் மாதவிக்கு வழங்கிய மாலையைப் பெற்றுக் கொண்டு ஆயிரத்து எண்ணூறு கழஞ்சு பொன்னைக் கொடுத்து மாதவி காதலனாய்க் கண்ணகியை மறந்து, கோவலன் மாதவி இல்லத்தில் வாழ்ந்து வருகின்றான்.

ஒருநாள். அந்தி மயங்கிவரும் மாலைப்பொழுது, கணவனைப் பிரிந்து வாழும், கண்ணகிபோல்வார்க்குத் துன்பமாய், காதலனைச் சேர்ந்து மகிழும் மாதவி போல்வார்க்கு இன்பமாய் வருகை புரிந்தது. அதன் வருகையை, முல்லை நிலத்து ஆயர்கள் குழலில் வாய் வைத்து ஊதிக்காட்டினர். வளையலணிந்த மகளிர்கள் மணிவிளக்கேற்றினர். அவர்களது கருங் கூந்தற் பின்னலிலே, மலர்ந்த முல்லையிலே, தங்கிய வண்டுகள் இன்னிசை எழுப்பின. பாதச் சிலம்பு ஒலித்தன, கைவளை குலுங்கின, மாலைப் பெண்ணை மகளிர் வரவேற்றனர்.

நீலவானத்தில், வெண்ணிலவு மிதந்து வந்தது. மாதவி இல்லத்துச் சாளர வழியே, தென்றலும் புகுந்தது. கோவலனுக்கும், மாதவிக்கும் அது மலர் மணத்தை வாரிவழங்கியது. நிலாமுற்றத்திலிருந்து கோவலனும்,

மாதவியும் இன்பம் துய்த்தனர். இவ்வாறு நாட்கள் சென்றன.

பூம்புகார் நகரிலே, இந்திரவிழாத் தொடங்கியது. அறிவுக்கும் அரிய கலைகட்கும் விழாவாய், இவற்ருல் புகார் நகர மக்கட்குக் கலை விருந்தாய், இருபத்து எட்டு நாட்கள், அவ்விழா நடந்தது. விழா முடியும் கடைசி நாளில், நகரமக்கள் எல்லோரும், கடலாடிக் காவிரி நீராடி இன்புறுதல் இயல்பு. அவ்வாறே கோவலனும் மாதவியும் தேர் ஏறிக் காவிரி கடலொடு கலக்கும் கடற்கரையை நாடிவந்தனர். நீலத்திரைக்கடலின் பேரொலியும், காவிரி அன்னையின் அலையொலியும், பல்வேறு மக்களின் பேச் சொலியும் ஆகிய எல்லாம் ஒன்று கலந்து ஓரே ஆரவார மாய் இருந்தன.

கடலும், கரையும், மணலும், மடல்விரி தாழையும் இயற்கையின் எழிலை அள்ளிக் காட்டின. அம்மட்டோ! கடல்மீனின் புலால் நாற்றத்தைத் தடுத்து, மடல் விரி தாழை மணம்பரப்பி, வருவோரை வரவேற்றது. புன்னை மரம்; புதுமணல் பரப்பு; சித்திரத் திரைகளால் அழகு செய்யப்பட்ட பாடிமனை; அங்கே நீலவிதானப் பந்தர். அதன் கீழ், அமளிமிசை வந்தமர்ந்தான் கோவலன். அருகி லிருந்த மாதவி எழுந்தாள். வசந்தமாலை தந்த யாழை வணங்கி வாங்கிஞள்.

கடற்புலவு கடிந்த மடற்பூந் தாழை
சிறைசெய் வேலி அகவயின் ஆங்கோர்
புன்னை நீழல் புதுமணற் பரப்பில்
ஓவிய எழினி சூழவுடன் போக்கி
விதானத்துப் படுத்த வெண்கால் அமளிமிசை
வருந்துபு நின்ற வசந்த மாலைகைத்
திருந்துகோல் நல்யாழ் செவ்வனம் வாங்கி

கோவலன் தன்னெடுங் கொள்கையின் இருந்தனள்
மாமலர் நெடுங்கண் மாதவி.

மாதவி கைக்கொண்ட யாழோ, சித்திர வேலைப்பாடமைந்த உரையால் வனப்படைந்து, செழுமலர் மாலை புனைந்து, மைத்தடங்கண் மணமகளிர் கோலம் போல் அழகமைந்து விளங்கிற்று. அழகார்ந்த யாழை அழகரசியான மாதவி கையில் ஏந்தினாள். இசைத் தெய்வம் ஒலி வடிவ ஆடல் புரிந்தது. யாழின் இசை உறுப்புக்கள் எல்லாம் குற்றமற இருந்தன. இசைப் பகுதிகளை மாதவி சோதித்தாள். சுருதிகளைத் தூய்மையாய்ப் பேசவைத்தாள். தலைவனுக்குப் பெருமை தரும் நிலையிலே கோவலன் கையிலே யாழைக் கொடுத்தாள். வாங்கிய கோவலன் வரிப்பாடல்களை இனிமையாய்ப் பாடத் தொடங்கினான். தெய்வத்தையும், மக்களையும் பொருளாய்க் கொண்டு பாடுவதே, வரிப்பாடலாகும். கோவலனோ கண்கண்ட தெய்வமாகிய காவிரி அன்னையை, உள் நினைந்து பாடினான்.

கரிகால் வளவன், காவிரி நதிபாயும் சோழ நாட்டையும், கங்கை நதிபாயும் வடநாட்டையும் கட்டி ஆளுகிறான். இதனால் வட நாட்டிலும் சோழர் அரசியல் பரவிக் கிடந்தது என்பது அறியப்படுகிறது. இந்த அரியபெரிய வரலாற்றுக் கருத்தையே, கவிதைக்கு அடிப்படையாக வைத்துக் காதற் பாட்டு இசைக்கிறான் கோவலன் :

திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி செங்கோல் அதுஓச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி!

காவிரியாகிய பெண்ணே ! உன் கணவனாகிய கரிகால் வளவன் கங்கையாகிய வடவர் நாட்டுப் பெண்ணை மணந்தா

லும், நீ பிணக்கங்கொள்ளாது வாழ்கின்ருய். எதுபற்றி நீ இவ்வாறு ஊடாது கூடி வாழ்கிருய் என நான் பலகாலும் எண்ணிப்பார்த்ததுண்டு. அதன் காரணம் எனக்கு இப்பொழுதுதான் புலனுகின்றது.

கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாதொழிதல் கயற் கண்ணுய்
மங்கைமாதர் பெருங் கற்பென்(று)
அறிந்தேன் வாழி காவேரி.

வடவர் நாட்டுக் கங்கையாகிய நங்கைக்குத் தன் கணவன் காதலனுவதா? என்று பிணங்காது இருப்பது உன் கற்பின் மேன்மையைத்தான் காட்டி நிற்கிறது. இவ்வாறு கோவலன் பாடினுன்.

இந்தியப் பெருநிலத்தின் வடபால் எல்லையாய் வானைத்தொட்டு நிற்கும் இமயமும், தென்பால் எல்லையாய், கன்னி தவம் செய்யும் குமரியும், இன்றும் நின்று நிலவுகின்றன. இத்தகைய பெருநிலப் பரப்பை ஆண்ட பெருமையனைத்தும், கரிகாலனுக்கு வாய்த்துவிட்டது. காவிரியை வாழ்த்துவதன் வாயிலாக, கோவலன் வாய்மொழியாய், ஆசிரியர் இளங்கோ காவிரி நாடனின் புகழை, அது புலப்படுத்தும் வீரத்தை, உச்சிக்கே ஒருபடி உயர்த்தி விடுகின்ருர் புகார் நகரின் சிறப்பைத் தோழியின் வாக்கிலே வைத்துத் தொடர்பு காட்டுகின்ருர். அதைக் காண்போம் :

அலைபாடும் கடல். நெய்தல் நிலம். அங்கே சிறுமிகள் மணல் வீடு கட்டினர். சிறுசோறு சமைத்தனர். கற்பனையில் பெருவிருந்து செய்தனர். ஓடியும் ஆடியும் விளையாடினர். பொழுது சாய்ந்து வந்தது. கையால் முயன்று கட்டிய மணல் வீட்டைத் தம் காலாலேயே அழித்துவிட்

டுத் தாயரை நினைத்துத் தம் இல்லம் நோக்கி ஓடினர். யாருமே இல்லாத அந்தத் தனியிடத்திலே, தலைவன் ஒருவன் வருகிறான். அவ்வழியே தலைவியும் வருகிறாள். முடிவாக, அவளை நோக்கி அவன்: 'அலை கடல், அழியாப் பெருங்கடல், சாட்சியாய்' உன்னை மணந்து கொள்ளுகிறேன், என்று கூறினான். வஞ்சியேன் என்றவன் வஞ்சித்தான். தவறேன் என்றவன் சொல் தவறினான். இவ்வாறு சொல் தவறுபவர் இப்புகார் நகரில் உள்ளனரா? என்று தோழி கேட்கின்றாள். புகார் நகரினர் வாய்மை தவறாதவர் என்பதையும், அதனால் அத்தலைவன் அந்நகரத்தைச் சார்ந்தவன் அல்ல என்பதையும், வேறொரு நாட்டையோ, நகரத்தையோ சார்ந்தவன் என்பதனையும் நுணுக்கமாய் இளங்கோ அறியவைத்துள்ளார். இத்தகைய மற்றொரு காட்சியையும் இளங்கோ காட்டக் காணுகிறோம்.

நெய்தல் நிலம். அதன் பக்கமெல்லாம் புன்னை மரம். அதன் பூந்தாதுகள் — அள்ளித்தெளித்த பொன் துகள் போல், உதிர்ந்த மலர்கள் — வீசி விழுந்த முத்துப் போல் கண்ணகலாக் காட்சிதந்தன. இத்தகைய, பூங்கானற் பரப்பிலேதான் தலைவனொருவன், தலைவியொருத்தியைக் காணுகிறான். அவளது குளிர்ந்த இனிய திருமுகம், ஆங்கே ஓடித் திரும்பும் அந்தப் பொல்லாத கண்கள் — அதனிடமுள்ள பலவகைப்பட்ட இயல்புகள் — அவன் உள்ளத்தில் விதவிதமான எண்ண அலைகளை எழுப்புகின்றன. ஒரு சமயம் கயல்போல் பிறழ்ந்த அந்தக்கண்கள் சிறிது நேரம் செல்ல அம்புபோல் கூர்மையாய், அவன் உள்ளத்தைத் தைக்கின்றன. கார்காலத்து மேகம்போல் இருண்ட கண்கள் காமன் படுத்துகின்றபாடெல்லாம் செய்கின்றனவாம்.

கயல் எழுதி வில்லெழுதிக் கார்எழுதிக்காமன்
செயல் எழுதித் தீர்ந்தமுகத் திங்களோகாணீர்.

அதிசயம்! அதிசயம்! வாருங்கள். ஓடிவாருங்கள், வந்து காணுங்கள் என்று கூவி அழைக்கின்றான். மீனின் செயலும், வில்லின் செயலும், காமனின் செயலும் ஆகிய மூன்றின் செயலுமே இந்த வியப்பான சந்திரனிடமுள்ளது. வான் நழுவி வந்த திங்களிது. ஏன் வந்தது? காரணம் சொல்ல வேண்டும். எங்கே வந்தது? இடம் கூறவேண்டும். இரண்டையும் அவனே சொல்லுகின்றான்.

திங்களோ காணீர் திமின்வாழ்நர் சீறூர்க்கே
அங்கணேர் வானத்து அரவஞ்சி வாழ்வதுவே.

சந்திரனை நாகம் வந்து பற்றுவதைச் சந்திர கிரகணம் என்பார்கள். வானத்தில் இருந்தால் நாகம் வந்து கவர்ந்து கொள்ளுமே என நினைத்து அஞ்சி இச்சிற்றூரில் இச்சிறு பெண் முகமாக ஆகிவிட்டது என்கிறான் தலைவன். இது அத்தனை வியப்பாக நமக்குப் புலப்படவில்லை. அஞ்சிச் சரணடைந்த திங்கள் இத்தலைவனை அஞ்சவைத்த அதிசயம்தான் நமக்கு வியப்பாய் இருக்கிறது.



## 3. மாதவி மனமாற்றம்

மாதவி, காதலுடன் வழங்கிய யாழிலே, காதற் கவிதைகள் பல பாடினன் கோவலன். அவை அனைத்தும், சிலப்பதிகாரத்தின் தனிச் சிறப்பைப் புலப்படுத்தி வருகின்றன.

அவ்வரிசையில், தலைவன் — பாங்கன் கேட்கும் வினவுக்கு விடையாகப் பேசுவது 'முரிவரி' என்று கூறப் படும். பெண்ணொருத்தியின், பேரழகிலே நெஞ்சைப் பறிபோகவிட்ட தலைவன் ஒருவன் அவள் நலங்களை எல்லாம் பலபடியாக, நயம் தோயப் பேசுவது இப்பகுதி யின் பாற்படும். தன்னை (தலைவியை)ப் பல நாளாய்ச் சேய்மையில் நின்று பார்த்தும், நாட்கள் பல செல்ல, அணிமையில்வந்து பார்த்தும், அருகே வந்து கண்ணேச்சி யும் சென்றவன் — இப்போது நேருக்கு நேராக நின்று அவள் பேரழகைப் பாராட்டத் தொடங்கிவிட்டான். அவ ளைக் காண்பதில் தான் ஆர்வம் காட்டுவதுபோல — தன் னைக் காண்பதில் அவள், ஆர்வமுடையவளாய் இருப்பதை, அவன் மிக எளிதாய்க் கண்டு கொள்ளுகிறுன். ஆனல் தான் பேசுவதுபோல, அவளொன்றும் பேசுவதில்லையே, என்பதில் ஏக்கமடைந்து அதனல், உள்ளமுடைந்து

உடல் நலிந்து போகிருன். அவனைக்கண்ட தோழனுக்கு, அவன் நிலையொன்றும் புரிவதாயில்லை.

தலைவன் தன்னைவிட்டுச் சில நாளாய்த் தனியே செல்லுவதிலும், செல்லுமுன் இருந்த மலர்முகம் சென்று வந்தபின் மாறிப்போவதையும், குறிப்பாய்க் கவனித்து வந்திருக்கிருன். இதற்கெல்லாம் காரணம் என்ன? என்று எண்ணி, ஒருநாள் தலைவனிடமே, இதுபற்றி வினவுகிருன். தலைவன் அதற்கு மறுமொழியாகச் சொல்லுகிருன்: நானடைந்த துன்பம் என்ன? துன்பத் திற்குக் காரணமானவர் யார்? என்றெல்லாம் வினவுகிருய். இனியும் நான் அதை மறைப்பதில் பயனில்லை. கேள்; கடற்பெண், தான் பெற்றெடுத்த, வெண்மையான சங்கு களை அலையாகிய தன் கைகளால் கொண்டுவந்து குவிப் பாள். அக்கரையருகே, என் உள்ளம் கவர்ந்த அவள் (தலைவி) உலாவிவருவாள். மெல்லிய நுண் மணல் பரப்பிலே, அவள் பாதச் சிலம்புபாட, நடந்துவருவாள். மணம் நிறைந்த மலர்ச்சோலையிலே, மயிலெனச் சாயல் காட்டி மறைவாள். கடற்கரையிலே, மணல் பரப்பிலே, சோலைதனிலே, அவள் நிழல் போல் என் உள்ளம் அவளைத் தொடர்ந்தே சுற்றி வருகிறது.

திரைவிரி தருதுறையே, திருமணல் விரியிடமே
விரைவிரி நறுமலரே, மிடைதரு பொழிலிடமே
மருவிரி புரிகுழலே, மதிபுரை திருமுகமே
இருகயல் இணைவிழியே, யெனையிடர் செய்தவையே

கடற்கரையும், மணல் பரப்பும் காண்பதற்கு, இனிய காட்சியுடையனவே. என்ருலும், அந்த இடங்களில் எல்லாம் அவளை, அவன் காணவில்லையாஞல், அவை அனைத்தும் அவனுக்குச் சூயனிமாய்த் தோன்றி

வெறுப்புணர்ச்சியை, உண்டாக்கி விடுகின்றன. அவளைக் காணவில்லையானால், வருந்தும் இயல்பமைந்த இத்தலை மகன், அவளைக் கண்ட பின்பும் வருந்தவே செய்கிறான். காற்றால் கலைந்து விரிந்த கருங் கூந்தல் — நண்பகற் பொழுதிலும் வெம்மை தணிக்கும் மதி போன்ற குளிர் முகம் — கயல்போலும் கருங் கண்கள் — இவைகள் செய்த துன்பமே இதற்குக் காரணம் என்று கூறுகிறான் தலைவன்.

நாடகப் பண்பொன்றின் நயப்பாட்டினை ஆசிரியர் இளங்கோ, இங்கு நுட்பமாய் அமைத்திருக்கின்றார். திருமுகத்திலே இருகயல் விழிகள் எனத் தலைமகன் அவள் எதிரே, அவள் நலம் பாராட்டியபோது, நாணம் தாங்காது அப்படியே முகம் திருப்பிக் கொள்ளுகிறாள் தலைவி. ஆம். புறமுதுகுதான் காட்டுகிறாள். அதை ஒரு நல்ல வாய்ப்பாக வைத்துக்கொண்டு அவள் கூந்தலை வருணிப்பவனாய் 'மருவிரி புரிகுழலே' என ஆரம்பித்து விடுகிறான். முகம் காட்ட முடியாமலும், முதுகு காட்ட முடியாமலும், அவளைத் திணரவைத்து விடுவதிலே, அவன் திறமை, கலை மெருகு பிடித்துவரக் காணுகிறோம்.

இத்தகைய திறம் படைத்தவனின் காதலி, பவளத்தாலான உலக்கை பிடித்தால், நெல்லைப் போட்டா குற்றுவாள்? அல்ல, முத்துக்களையே அள்ளிக் கொட்டினாள், அதைக் குற்றுகிறாள்.

பவள உலக்கை கையால் பற்றித்
தவள முத்தங் குறுவாள் செங்கண்

என்று தொடங்கிய தலைவன் தொடரை முடிக்காமல் சிறிது ஆலோசித்தான். தோழன் ஆர்வமாய்க் கேட்பதற்கு, அறிகுறியாய் முகமலர்ந்து,

தவள முத்தங் குறுவாள் செங்கண்,.....

என்று தலைவன் மேலும் சொல்லத், தொடர்பு கூட்டினான். நிதானமாக அந்தச் 'செங்கண் — குவளை அல்ல'என்றான். அப்படியானால்...என்று கேட்டான் தோழன். "கொடிய கொடிய" என்று ஒருமுறைக்கு, இருமுறை அழுத்தமாகத் தன் உள்ளுணர்ச்சியைப் புலப்படுத்தினான் தலைமகன். வடிவத்தினால், தலைமகளின் கண்கள் குவளை மலர் போல் இருந்தாலும்—செயலால், மிகவும் கொடுமை வாய்ந்தன. ஆம். குவளையிலுள்ள குளுமை இல்லை. ஆனால் குவளையிலில்லாத, கொடுமை உண்டு என்று உணர்த்துகிறான்.

காதல் வசப்பட்ட தலைவன் ஒருவன், தன் காதலியைப் பலவாறு பாராட்டு முறையில், அமைந்தன போலுள்ள, இப்பாடல்களைக் கோவலன் மாசற்ற தூய உள்ளத்தோடு, உவந்து பாடினான். இந்நிலையில் கோவலன் மாதவி வாழ்விடையே, விதி புகுந்து கொண்டது இருவரும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிய வழிகாட்டி அழைத்தது. அதனால், கண்ணகியின் கண்ணீரைத் துடைத்தது. மறந்துபோன கண்ணகியை நினைக்கவைத்தது. இதன் விளைவுதான் மாதவியின் மனமாற்றம். மற்றொரு, பெண்ணின் மீது கோவலன் மையல்கொண்டு பாடியதாய் மாதவி எண்ணினாள். ஆராய்ந்து பார்க்க அவள் உள்ளத்தில் அப்பொழுது அமைதியில்லை. ஆத்திரமிருந்து அவள் உள்ளத்தை ஆட்டிப்படைத்தது. தானும் மற்றொரு தலைவனை (பொய்யாக) விரும்புவதாய்க் காட்டிக் கோவலனை நிலை கலங்கவைக்க எண்ணினாள் யாழை வாங்கி மீட்டினாள். கோவலன் பாடியது போலவே, காவிரியைப் பாடுகிறாள்.

மருங்குவண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூவாடை அதுபோர்த்துக்

கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழிகாவேரி.

காவிரியின் புதுவெள்ளப் பெருக்கிலே, பலநிறப் பூக்கள் படிந்து செல்லுகின்றன. அவை உலர்ந்து உதிர்ந்த மலர் கள் அல்ல. புதுப் புனல் பெருக்கிலே—பரவிய குளிர் பூங்காற்றிலே, உதிர்ந்த தேன் நிறை மலர்கள். அவற்றோடு ஆடிப் பாடித் தேனுகரும் வண்டுகள். இத்தகைய பூவா டையால் காவிரிப்பெண் பொலிவு பெறுகின்ருள். மீனுகிய கண்களால், மெல்ல, கண்ணேச்சுகிருள். பெண்மைக் குரிய நாணத்தால், ஒதுங்கி நடந்து செல்லுகின்ருள். இவள் வருகையை, மயில் ஆடி வரவேற்கிறது. குயில் பாடி அழைக்கிறது.

பூவார் சோலை மயிலாலப்
புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய
நடந்தாய் வாழி காவேரி,

இவ்வாறு, நீ கவலை எதுவுமின்றி மிகுந்த களிப்போடு செல்லுவதற்குக் காரணமொன்று இருக்க வேண்டுமல் லவா? அதை, நான் ஆராய்ந்தபோது எனக்கொன்று தோன்றியது.

காமர் மாலை அருகசைய
நடந்த வெல்லாம் நின்கணவன்
நாம வேலின் திறங்கண்டே
யறிந்தேன் வாழி காவேரி.

காவிரி நாடனுகிய உன் கணவன் (சோழன்) மாசற்ற மனத்தோடு செங்கோல் புரிவதால், நீ இவ்வாறு மாலை அசைய மகிழ்ந்து செல்லுகின்ருய். காவிரியை மாதவி

இவ்வாறு பாடியபின், கோவலனைப்போலவே பூம்புகார் நகரத்தையும் புகழ்ந்து பாடுகின்ருள்.

தலைவனைப் பிரிந்து, அவன் வருகை நினைந்து வருந்தும் தலைவி நிலையில், தன் கருத்தை மெல்ல வெளிப்படுத்துகிருள் மாதவி. கடற்கரையிலே ஆணும் பெண்ணுமாய் அருகே விளையாடும் காதல் நண்டுகள் இரண்டு. அவைகளை ஒருகணம் பார்த்தார். பார்த்த கண்களால் என்னை நோக்கினர். அந்த நோக்கிலே, விதவிதமான எண்ணங்கள். அவர் இயல்பனைத்தையும் என்னுல் அறிந்துகொள்ள முடியவில்லை. நான் என்ன செய்வேன் தோழி என்று கேட்கின்ருள் :

புணர் துணையோடு ஆடும்
பொறியலவ னேக்கி
இணர் தகையும் பூங்கானல்
என்னையும் நோக்கி
உணர்வு ஒழியப் போன
ஒலிதிரை நீர்ச்சேர்ப்பன்
வணர்சுரி யைம் பாலோய்
வண்ண முணரேனல்.

இந்த ஊமை நாடகத்திலே நண்டையும் பார்த்து, நங்கையையும் பார்த்து—அதிலே தன் எண்ணத்தையும் வார்த்துவிடுகிருன் தலைவன். ஏங்குகின்ற தலைவியையும்—அவளுக்கு, இரக்கப்படுகின்ற தோழியையும், சோக வடிவத்திலே காணுகிருேம்.



## 4. காதலர் பிரிவு

நெய்தல் நிலம். கடல் சார்ந்த பக்கமெல்லாம் இயற்கை அன்னையின் களிநடனம். புன்னை மரத்தின் அருகே, ஏக்கமே வடிவாய்த் தலைவி அமர்ந்திருக்கிருள். காதலனைப் பிரிந்த பெருந்துன்பம் உள்ளத்திலே பெருகிப் பொங்குகிறது. அதை வெளிப்படுத்தினுலன்றி, அவளுக்குத் துன்பம் குறையாதுபோலத் தோன்றியது. 'சொல்லத் தொலையும் துன்பம்' என்பதை அவள் நினைத்தபோது தோழியிடம் சொல்லச் சற்று, நாணமாயிருந்தது. எனவே, அந்த எண்ணத்தை விட்டுவிடுகிருள். உயிருக்கு உயிரான தோழியிடமே, சொல்லமுடியாத ஒன்றை வேறு யாரிடம் சொல்ல முடியும் என்று ஒரு கணம் அவள் நினைத்துப் பார்த்தபோது, அவள் உள்ளமே விம்மி வெடித்துவிடும்போல் இருந்தது. சொல்ல முடியாமலும், உள்ளத்திலே இனி வளரவிட முடியாமலும் வந்த காதல் நோய், தணிவதாயில்லை.

இவ்வாறு துயர்ப்படும் தலைவிமார், ஞாயிறை நோக்கியும், திங்களை விளித்தும், கடலை, கானலைக் கூவியும், விலங்கு, மரங்களைப் பார்த்தும், பொழுதை புட்களை அழைத்தும், தாம்படும் துன்பத்தைச் சொல்லி ஆறுதல்

பெறுவதுண்டு. இவ்வாறே தலைவி தன்னருகே—கண்ணெதிரே நிற்கும் அன்னத்தை நோக்குகிறாள்.

குதிரை பூட்டிய தேரிலே வந்து, கருணை காட்டிய காதலர், நம்மை மறந்துவிட்டார்போலும். அவர், நினைவிலிருந்து நம்மை, நீக்கிவிட்டாலும், நம் நினைவிலிருந்து அவர் அகலாது இருக்கிறாரே!

தம்முடைய தண்ணளியும் தாமுந்தம் மான்தேரும்
எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க
அம்மென் இணர அடும்புகாள் அன்னங்காள்
நம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்

ஆசை முகம் மறக்க, அவளால் ஆவதில்லை. புரிந்த காதலும், காட்டிய கருணையும், நினைவிலே எழுந்து மறையாது நிற்கின்றன. கடந்த நாட்களில், காதலர் உண்டு வழங்கிய இன்பங்கள், நினைவுத் திரையிலே ஓடோடி வந்து மறைகின்றன. அன்னங்களையும், பூங்கொடிகளையும், தன்னோடு சேர்த்துக்கொண்டு நம்மை மறந்தாரை, நாமறக்க மாட்டோம் என்கிறாள் தலைமகள். அவளும், அவள் காதலனும் துய்த்த இன்பம், மிகுதற்குக் காரணமான இடத்தை, அங்குள்ள, பூங்கொடி, அன்னம் முதலிய பொருள்களை அவன் மறந்துவிட்டதை நினைந்து வருந்துகிறாள். நன்றி மறவாத ஒரு நற்பண்பு, தன்னிடத்தே மட்டுமன்றி, தன்னைச் சார்ந்துள்ள பொருள்களிடத்தும் அக்குணம் அமைந்திருப்பதை 'நாமறக்கமாட்டோம்' என்ற சொற்களில்தான் அவள் எவ்வளவு அழுத்தமாய் வெளியிடுகிறாள்! அதே சமயத்தில், தலைவனிடம் அப்பண்பு இல்லாமையைச் சொல்லாமல் சொல்லிவிடுகிறாள் அல்லவா? மையுண்ட தன் கண்களைப்போல், மலர்ந்துள்ள நெய்தல் மலர்களைப் பார்க்கிறாள். நீண்ட தன் கண்ணுக்கும், நெய்தல் மலருக்கும் நிறத்தால் வந்த தொடர்பை,

ஒரு கணம் நினைத்துப் பார்க்கிருள். 'ஆ! எத்தனை நெருங்கிய ஒற்றுமை! செவ்வரி படர்ந்த என் கண்களைச் சிவந்த நிறக் கீற்றுக்கள் பரவியுள்ள, நெய்தலில் காணுகிறேன்' எனப் பேசுகிருள். மற்ருெருகணம்: 'மலர்ந்த என் கண்களோ, மலர்ந்த வண்ணம் நீரைச் சொரிகின்றன. காலையில் மலர்ந்த நெய்தல், மாலையில் அயர்ந்து குவிகிறது. நிறத்தால் ஒன்றுபட்ட நெய்தல், செயலால் மாறுபடுகிறதே' எனக் கூறுகிருள். மாலைப் பொழுதிலே, காதலன் பிரிவால், தான் கண்ணுறங்காது வருந்த, நெய்தல் துன்பமறியாது தூங்குகிறதாம்! நனவில் காணமுடியாதுபோன காதலரை, கனவில் கண்ணுறங்கியாவது காணலாம்! அவள் மனம்போன வழியிலே, கண்போக மறுக்கிறது. 'நீ, கண்ணயர்ந்து கண்ட கனவிலாவது என் காதலரைக் கண்டாயா?' என்று நெய்தலை நோக்கிக் கேட்கிருள். துன்பம் மிகுந்து போனதால் தலைவிக்குத் தூக்கம் வரவில்லை. கண்ணாலும், கனவாலும் அவளால், காதலரைக் காண முடியாதுபோயிற்று. கனவில் மற்றவை, கண்டதாய்ச் சொன்னாலும் அவளுக்குத் துன்பம் குறைந்துவிடும் போலும். தலைவன் வராதுபோன நிலையை நினைத்தால், அவளுக்குக் கோபம் கோபமாய் வருகிறது. அதனால் 'வன்கணர்' (கொடுமையாளர்) என்கிருள். சினத்திலும் காதலன் என்கின்ற ஆசை எழுந்து 'வன்கண்ணன்' என்று கூறத் துணியாது 'வன்கணர்' என்று சொல்லவைத்து விடுகிறது.

புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்பம் உழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தால்! நீயெய்துங் கனவினுள்
வன்கணர் கானல் வரக்கண் டறிதியோ!

காதலர் சென்ற திசையைப் பார்க்கிருள். ஒரே ஆகாய வெளியாய்த் தெரிகிறது. தேர்போன வழியைப் பார்க்கி

றுள். வெறிச்சென்று காணப்படுகிறது. தேர்க்கால் படிந்த தடத்தைப் பார்க்கிறுள். தடம் மறைந்துவிட்டது. கடல் அலைகள் அப்போதே, அழித்துவிட்டன. அதைக் கண்ட அவள் மனம், அந்தக் கடலைப்போலவே பொங்கு கிறது. பழிதூற்றும் உறவினர்போல—அலை கடலே! இந்தச் செயலைச் செய்துவிட்டு, என்னருகே நீயுமிருக்கின் றுய்! அவர் பிரிந்து சென்றபோது இச்செயல் அடாது என்று நீ தடுக்கவில்லையே! சோலைகளே! அன்னங்களே! நீங்களும் இது தகாது என்று கூறவில்லையே!

நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்தேர்
ஊர்ந்த வழிசிதைய ஊர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடும் அன்னமே
ஈர்ந்தண் துறையே இதுதகாது என்னீரே!

அலைகடலையும், மலர்ச்சோலையையும், மகிழ்ந்தாடும் அன் னங்களையும் நீர்த்துறையையும் நோக்கிக் கூறுகிறுள். அவன் தேர் முதலில் கடற்கரையையும், பிறகு சோலையை யும், அன்னங்கள் உறைகின்ற நீர்த்துறைகளையும், கடந்து சென்றது என்பதை வரிசைப்படுத்துகிறுள். ஒவ் வொன்றையும் கடந்து கடந்து, அவன் தேர் சென்ற போது, இங்கு கூறப்பட்ட ஏதாவது ஒன்று தடுத்திருக்க வேண்டும் என்பது அவள் உள்ளார்ந்த எண்ணம்.

'பிரிவு' என்ற சொல்லை, தலைமகள் சொல்லவும் அஞ்சுகிறுள். 'இது தகாது என்னீரே' என்ற தொடரில் 'இது' என்ற சொல்லால் பிரிவு என்ற பொருளை உணர வைக்கின்றுள். சொல்லையே கூறப்பொருத, அவள் மனம் அச்செயலை எவ்வாறு பொறுத்திருக்குமோ என்பதை நம் சிந்தனைக்கு ஆசிரியர் விட்டுவிடுகிறுர்.

'என் காலிலே பட்ட முள்ளைத் தன் கண்ணிலே பட்டதாய் நினைக்கும் அன்னை, இத் துன்பத்தை அறிந்து

விட்டால் நான் என்ன செய்வேன்' என்று புலம்புகிருள். பொழுது சாய்ந்து விடுகிறது. பிரிவுத் துன்பம் பின்னும் பெருகி வருகிறது. அவளது மன நிலையை உணர்ந்து வரு கின்ற தோழி, அருகே இருக்கிருள். தலைவியின் உள்ளம் பலவாறு தன் துயரை நினைத்து, ஆராயத் தொடங்கியது. 'மாலைப்பொழுது எனக்குத் துன்பமானுல், அவருக்கும் துன்பமாக வேண்டும். துன்பமானுல், அதைப் போக்க என்னை நினைத்து அவர் ஓடோடி வரவேண்டுமே! அவரோ வருவதாயில்லையே! அதனுல், அவர் நாட்டில் மாலைப் பொழுது தோன்றுவதே இல்லையோ? எதற்கும் தோழி யைக் கேட்கலாம்' என்று முடிவு செய்கிருள்.

கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே
எதிர்மலர் புரையுண்கண் எவ்வநீர் உகுத்தனவே
புதுமதி புரைமுகத்தாய் போனுர்நாட்(டு) உளதாங்கொல்
மதியுமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தஇம் மருள்மாலை.

'பகற் பொழுதிலேயே, தாங்கவொண்ணுத துன்பத்தை, இரவுப் பொழுதில் எங்ஙனம் பொறுத் திருப்பேன்! சந்தி ரனை உமிழவும், சூரியனை விழுங்கவும் முடியுமானுல், அத் தகைய மாலைப் பொழுதின் முன்னே, என்னுல் யாது செய்யமுடியும்? காதலர் வருகை புரிந்தால், மாலைப்பொழு தைப் பார்த்து நகையாடலாம்! இல்லையானுல், துன்பத் தைப் பொறுப்பதல்லாமல், எதிர்ப்பது எவ்வாறு?' என் றெல்லாம் எண்ணி எண்ணிக் கண்ணீர் வடிக்கிருள். 'மறைந்தனனே', 'பரந்ததுவே', 'உகுத்தனவே', என முடி யும் அவள் சொற்களிலே, அவள் உள்ளத்தில் பரவிப் பொங்கும் சோகம் ஓலமிடக் காணுகிறோம்.

தனக்கு வந்த துயரைத் துடைப்பார் யாருமில்லாத காரணத்தால், கண்முன்னே காணும் இயற்கைப்பொருள் களிலெல்லாம், வெறுப்படைகிருள். நெய்தல் நிலச்சோலை

யிலே, மாலைப்பொழுதினிலே, சிறகு வீசிவரும் நாரைகளைப் பார்க்கின்றாள். சினம் பெருகிவிடுகிறது. 'நாரைகளே! இங்கே வந்து இனித் தங்காதீர்கள். நன்றிகெட்ட நாரைகள் நீங்கள். காதலரிடத்து நானடையும் துன்பத்தை எடுத்துச் சொல்லத் தவறிவிட்டீர்கள். நீங்கள் இங்கே வராதீர்கள்!'

அடையல் குருகே அடையலெங் கானல்
அடையல் குருகே அடையலெங் கானல்
உடைதிரைநீர்ச் சேர்ப்பற்(கு) உறுநோய் உரையாய்
அடையல் குருகே அடையலெங் கானல்.

'எம்கானல்' என்று தன்னுரிமை — தன்னுடைமை தோன்றப் பேசுகிறாள். 'நாரைகளே' என்று தொடங்கி 'அடையல்' என்று கூறினால் தன் உள்ளுணர்ச்சி சரியாக, வெளிப்படாது என்பது தோன்ற 'அடையல் குருகே, அடையலெங்கானல்' என அச்சுறுத்தி ஓட்டுகிறாள்.

இத்தகைய காதற் பாடல்களை, மாதவி—பெயரளவுக்குப் பாடினாள் என்று சொல்லமுடியாதவாறு சொல்லிலும், பொருளிலும் தோய்ந்து யாழொடு இழைந்து பாடினாள். தன்னை நீக்கித் தலைவனொருவனை மனம்கொண்டு வஞ்சனையாகப் பாடினாள் என எண்ணினான் கோவலன். மாதவி தன்னை மறந்து பாடப் பாட, அவன் உள்ளத்தில் வளர்ந்துவந்த மாதவி காதல், சினமாய் மாறி, பிரிவாகிய செயலிலே முற்றுமழிந்து போகிறது. யாழிசைக் காதல் பாட்டிலே, ஊழ்வினை உருவெடுத்து வந்த காரணத்தால், மாதவியின் தளிர்மேனியில், பொருந்திய கோவலன் கை நெகிழ்ந்தது. 'பொழுது கழிந்தது போகலாம்' என்ற சொல் வெளிவர, கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்து செல்கின்றான்.

# 5. மாதவி காதற் கடிதம்

கடற்கரையிலே, காதலனை விட்டுப் பிரிந்த மாதவி, துன்பமும் தானுமாய்த் தன் இல்லம் புகுந்தாள். இள வேனில் காலம் தொடங்கிவிட்டது. நீர் நிலைகளிலும், வாவிகளிலும், செந்தாமரைகள் இதழ் விரிந்து மலர்ந்தன. மாமரங்கள் பசுங்கொழுந்துவிட்டுத் தளிர்த்தன. அழகு குடிபுகுந்த அசோக மரத்திலே, இளம் துளிர் மெல்ல அசைந்தது. பூங்கொடிகள் ஆடி, பூமணம் பரப்பின. தென்றல் கூறிய காதற் கவிகளைப் பூங்குயில்கள் பசுங் கிளைகளிலிருந்து மெல்ல இசைத்தன. கூடிய காதலர் தம்மை மறந்தனர்; ஊடிய காதலர் வருந்தினர்.

கோவலனைப் பிரிந்த துன்பம் மாதவி உள்ளத்தில் வளர்ந்தது. நேரம் செல்லச் செல்ல நீண்ட உருவம் எடுத்தது. துன்பம் வெப்பமாய்ப் பரவி உடலை வருத்தியது. அதைத் தணிக்கப் பொதிகை மலையிலே பிறந்த சந்தனம், தென்கடலிலே எடுத்த முத்து, இரண்டையும் மாதவி தன் மார்பிலே அணிந்தாள். சகோட யாழை ஏந்தினாள்— பாடினாள். மருதப் பண் இசைத்தாள். இவற்றால், பிரிவுத் துன்பத்தை மறக்கலாம் என்று எண்ணினாள். இவை

யனைத்தும் இவ்வளவு விரைவில் பயனின்றிப் போகும் என அவள் எண்ணவில்லை. காலையும், மாலையும் காதலனை எதிர்பார்த்து, எதிர்பார்த்து அயர்ந்துபோகிறாள். இறுதியாக, அவள் உள்ளத்தில் ஒரு அமைதி. அந்நிலையில் ஒரு எண்ணம். ஆம், அவருக்கு நம் உள்ளத்தையே வடித்து வடித்து ஒரு கடிதம் எழுதினால்... என்று முடிவு செய்தாள் மாதவி. கடிதத்தில் எதை எழுதுவது? எவ்வாறு எழுதுவது? கடிதம் எவ்விதம் அமைய வேண்டும் என்றெல்லாம் சிந்தித்தாள். கோவலருக்கு நான் எழுதும் முதற் கடிதம்—ஆம்—காதற் கடிதம் இதுவே என்று மாதவி எண்ணியபோது, ஒரு கணம் — அவள் மனம் — இன்பக் கடலாடியது. எழுதும் வாசகமும், எழுதப்படும் பொருளும், சார்பான பிறவும் அவளது காதல் உணர்வைக் கோவலனுக்குத் தெளிவாய்க் காட்ட வேண்டும். அதேசமயத்தில், அவன் உள்ளத்திலும் அவ்வுணர்வை எழுப்பவேண்டும். பிரிவுக்குக் காரணமான நிகழ்ச்சிகள்—ஐயத்தின்பாற்பட்ட எண்ணங்கள் — இவையனைத்தும் மறைந்தொழிய வேண்டும். இத்தகைய மனம், கொண்டு செலுத்தக் கோவலன் தன்னை வந்து காணவேண்டும் என்றெல்லாம் மாதவி எண்ணமிட்டாள்.

சண்பகம், குருக்கத்தி, பச்சிலை, கருமுகை, வெண்பூ, மல்லிகை, செங்கழுநீர் ஆகிய மலரும், தளிருமாய், ஒரு மாலை தொடுத்தாள் மாதவி. ஆயகலைகள் அறுபத்து நான்கில்—பூத்தொடுப்பதும் ஒரு கலை. இந்த ஆடல்மகள், அதிலும் வல்லவள். முதிர்ந்த தாழம்பூ—அதன் வெண்மயமான இதழ்—எழுதுவதற்குரிய கடிதமாக, அதை எடுத்துக்கொண்டாள். எழுது கருவியாகப் பித்திகை அரும்புகளைத் தேர்ந்தெடுத்தாள். செம்பஞ்சுக் குழம்பாகிய மையிலே, அரும்பாகிய எழுதுகோலைத் தோய்த்து, முத்துமுத்தாய் எழுதுகிறாள்.

மன்னுயிர் எல்லாம் மகிழ்துணை புணர்க்கும்
இன்னிள வேனில் இளவர சாளன்
அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் செவ்வியன் அல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படினும்
தணந்த மாக்கள் தந்துணை மறப்பினும்
நறும்பூ வாளியின் நல்லுயிர் கோடல்
இறும் பூது அன்று இஃதறிந் தீமின்!

காதலரை மகிழ்விக்கும் இளவேனில் வந்தது. பொழுது சாய்ந்துவரும் நேரத்திலே, காதலனைப் பிரிந்த காதலியும், காதலியைப் பிரிந்த காதலனும், காதலால் மெலிந்து துன் புறுவர். அப்போதுவானத்தில் மிதந்துவரும் வெண்ணிலவு, அத்துன்பத்தை மிகுதியாக்கும். கூடினர், பிறகு ஊடினு லும், பிரிந்தவர் பிறகு மறந்தாலும் இளவேனில் என்னும் அரசன், மலர் அம்பு தூவி, அவர் உயிரை வருத்துவான். நீங்கள் இதை அறிந்து உதவுங்கள். இதுதான் மாதவி எழுதிய கடிதம். தேனெனப், பாலெனப், பாகெனத் தித் திக்கும் மொழிகளால், பலகால் சொல்லிச் சொல்லி எழுதி னுள்—இல்லை தன் உள்ளத்தையே அதில் வடித்தாள்.

மாதவி காதல் வசப்பட்டு எழுதிய, எழுத்திலே அதைத் தாங்கிவரும் தாழை மடலிலே — அதற்கு உறையிட்டார்போலக் கட்டிய மலர் மாலையிலே, அத் தனையிலும் மாதவி காதல் மணக்கிறது. காதல்தேன்— கைபடாத—கண்படாத—கொம்புத்தேன் சொட்டுகிறது; அவள் எழுதிய கடிதத்தைப் பாருங்கள்; வெண்ணிற மான தாழைமடல்; கூர்மையான அரும்பு; செந்நிறமான குழம்பு—காதலை, நாகரிகமாய், நுணுக்கமாய்க் காட்ட, இதனினும் சிறந்த கருவிகளும் உளவோ? நம் முன்னோர், காதல் இருவரை ஒன்று படுத்தும் நிகழ்ச்சிக்கு, மணம்

என்றனர். மணத்தை மலரிடமிருந்து பெறுவதுபோல, இன்பத்தை ஒருவர் மற்ருெருவரிடமிருந்து பெறுகின்றனர். அதைக் கூட்டுவிக்கும் கடிதமும் பூமடலாய், அது பரப்பும் நறுமணமாய், அமைந்துவிடுமானல் அதைத் தெரிந்தெடுத்த அறிவுக்கு நாம் எதை ஒப்பிடுவது!

மாதவி தான் எழுதிய கடிதத்தில், கோவலனை 'வருக' என வெளிப்படையாய், எழுதினளில்லை. காலத்தைக் காட்டினுள். அக்காலம் கொள்ளுகின்ற கோலத்தைக் கூறினுள். இதனை நீ அறிக என்ருள். எவ்வளவு நாகரிகமாய்த் தன் இதயத்தையே எடுத்துக் காட்டி இருக்கிருள்.

மாதவி, இத்தகைய காதற் கடிதத்தை எழுதித் தோழி வசந்தமாலையிடம் கொடுத்தாள். கோவலனை அழைத்து வருமாறு கூறினுள். அவ்வாறே தோழி வசந்தமாலை, கடிதத்தைப் பெற்றுக்கொண்டு வணிகர் வீதி வழியே வந்தாள். கோவலனைக் கண்டு வணங்கி, கடிதத்தைக் கொடுத்தாள். வாசம் கமழ் கடிதத்தை வாங்கினுன். பிரித்தான். முத்து முத்தாய் விழுந்த எழுத்திலே, அவன் கண்கள் ஓடின. மாதவிமுன்னுளில், தன்னேடு இணங்கியும்,பிணங்கியும் வாழ்ந்த வாழ்வனைத்தையும், ஒரு கணம் நினைத்துப் பார்க்கிருன். அவனது மனமாகிய நாடக அரங்கிலே, காலமெனும் திரையின் பின்னே, காட்சிகள் ஒன்றன்பின் ஒன்ருய் ஓடிவருகின்றன. புயல்போல் எழுந்த கூந்தல்; வில்போல் வளைந்த புருவம்; அதன் கீழ்,நீல மலர்போல் விரிந்த கண்கள்; கொவ்வைக் கனிபோல் சிவந்த திருவாய்; இவை நிலவும்காதல் முகம்; கோவலனிடத்தில் காதல் காட்டிக் கனிமொழி பேசின. பவளச் செப்பிலே, பாகு அமைந்தது போல—அவள் வாயிலே அமைந்த சொற்கள் இனிமையமாயிருந்தன.

பாகுபொதி பவளந்திறந்து நிலா உதவிய
நாகிள முத்தின் நகைநலங் காட்டி
வருகென வந்து போகெனப் போகிய
கரு நெடுங் கண்ணியின்

முதல் சந்திப்பிலே ஏற்பட்ட காதல் நினைவுகள், ஓடி ஓடி மறைந்தன. இங்ஙனம் பலவாறு நாடகமகள் என்பதற்கேற்ப, தன்னிடமே நடித்துக்காட்டியது, அவள் இயல்புக்கு எவ்வாறானும் பொருந்துமென எண்ணினான். மாதவியின் காதலை — அதுகமழும் கடிதத்தை ஏற்காது மறுத்துவிடுகிறான். மாலை புனைந்த மடலும், தோழி வசந்தமாலை மனமும் ஒருங்கேவாடின. நலிந்த மனத்தோடு தோழி வசந்தமாலை மாதவியை வந்தடைந்தாள். நிகழ்ந்தன கூறினாள். மாதவிக்கோ துன்பத்தின்மேல் துன்பமாயிற்று. ஆசை வெட்கமறியாது என்பதுபோல, அவர் மனம் திரும்பி வருவர் என ஆசையோடு எண்ணினாள் மாதவி.

மாலை வாரா ராயினும் மாணிழை
காலை காண்குவமெனக் கையது நெஞ்சமொடு
பூமலர் அமளிமிசைப் பொருந்தாது வருந்தினள்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்

மாலை நேரத்திலே அவர் வராவிட்டாலும், காலையிலே வருவார் என்ற சொற்கள் மாதவியிடமிருந்து வந்தன. அவள் உள்ளத்தில் பெருகிய சோகம், வெளியிலும் இருள் வடிவமெடுத்து வந்தது. பூமலர்ப் படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தாள். குவிந்த பூ மலரலாம். மலர்ந்த பூ குவியுமா? மாதவியின் மலர் விழிகள் அந்த இயல்பில் தான் இருந்தன.



## 6. காவலன் போலும் கோவலன்

மாதவியை விட்டுப்பிரிந்த கோவலன், கண்ணகியை நினைத்துத் தன் இல்லம் நோக்கி வருகிறான். பூம்புகாரின் ஒரு பகுதியான பட்டினப்பாக்கத்தில், மாலைப்பொழுதை வரவேற்று, மகளிர் மணிவிளக்கேற்றினர். தம் காதலரை மகிழ்விக்க எண்ணிய மகளிர் பகற்பொழுது அணிந்த பட்டாடைகளை மாற்றி, இரவுக்குப் பொருந்திய மெல்லிய, புதிய ஆடைகளை அணிந்து தம்மை ஒப்பனை செய்து கொண்டனர்.

அகனக ரெல்லாம் அரும்பவிழ் முல்லை
நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகல்மாய்ந்த
மாலை மணிவிளக்கங் காட்டி இரவிற்கோர்
கோலம் கொடியிடையார் தாம் கொள்ள.

இவ்வரிகளில் தமிழகத்தின் சிறந்ததொரு பண்பாட்டைக் காணுகிறோம். 'இரவிற்கோர் கோலம் கொள்ளுகின்ற கொடியிடையார்' முன்னாளிலுமிருந்தனர். இன்றைய நாகரிகம், பண்டைய நாகரிகத்தினும் எவ்வாறு உயர்ந்த தாகுமோ? நாமறியோம். 'இரவிற்கு ஓர் கோலம்' என்று கூறுகிறார் கவி. 'கோலம்' என்பது உடுத்துதல், புனைதல்

ஒப்பனை செய்தல் மூன்றாலும் பொருந்தும் அழகு. மெல்லிய ஆடை, மெல்லிய அணிகலன், கவர்ச்சியான ஒப்பனை ஆகிய இவை, இரவுவரக் காதலரை மகிழ்விக்கின்றன.

இரவிற்கோர் கோலம் கொள்ளும், மகளிர் கூட்டத்தில், கண்ணகி கண்ணீர் வடித்து வந்தாள். ஆடையும், அணிகலனும், ஒப்பனையும் கணவர் பொருட்டே என, அவள் நினைத்த காரணத்தால் வாடிய இயற்கை அழகோடு வாழ்ந்து வந்தாள். தேவந்தி அவளது தோழி, அந்தணர் குலத்துப் பிறந்தவள். கண்ணகி, கணவனது பிரிவால் வருந்துவதை அவள் உணர்ந்து வருகிறாள். ஒரு நாள் தேவந்தி கண்ணகியைப் பார்த்து, 'நின் கணவனை விரைவில் அடைவாய்' என்று கூறினாள். கேட்ட கண்ணகி, 'உன் வாய்ச்சொல் பலிக்கப்போவது உண்மை தான். என்றாலும், நேற்றிரவு நான் கண்ட கனவை நினைத்தாலும் ஐயோ! நெஞ்சம் நடுங்குகிறது. கணவர் வந்து என் கையைப்பிடித்து உடனழைத்துப்போகக் கண்டேன். ஊரைவிட்டே வேறு ஊருக்குப் போகிறோம். அவ்வூரார் பொருந்தாத பழியொன்றை, என்மீது சுமத்தினர். அதனால் கணவருக்குப் பெருந்தீங்கு வந்தது. அரசன் முன், சென்றறியாத நான் எதிர் நின்று வழக்காடினேன். அதனால், அரசனும் அவன் நகரமும் தீமையுற்றன. இவ்வாறு துன்பமடைந்த நான், கணவனோடு அடைந்த சிறப்பினைக் கேட்டால் நீ நகையாடுவாய். ஆகையால், மேலே சொல்ல மாட்டேன்' என்று கூறினாள். கேட்ட தோழி: 'கண்ணகி, நீயோ கணவனால் வெறுக்கப் பட்டவளுமல்ல. கணவன் பொருட்டுக் காக்க வேண்டிய நோன்பொன்றை, முற்பிறப்பில், நீ செய்யத் தவறி விட்டாய். அதனால் வந்த தீங்கு நீங்குவதாக. காவிரி கடலொடு கலக்கும், சங்கமத் துறையிலே, சோம

குண்டம், சூரியகுண்டம் என்ற இரண்டு புண்ணியப் பொய்கைகள் உண்டு; அவற்றின் துறைகளில் மூழ்கி, மன்மதன் கோவிலை வலம்வந்து வழிபட்டால், மகளிர் தம் கணவரைப் பிரியாதிருந்து இவ்வுலகத்தில் மகிழ்வர். மறுமையிலும் கணவரொடு இன்புறுவர். ஆகையால், நாம் ஒரு நாள் போய் நீராடி வருவோம்' என்று கூறினாள். இவ்வாறு தன்னையும் உளப்படுத்தி, தேவந்தி கூறக் காரணமுண்டு. கண்ணகியைப் போலவே தோழி தேவந்தியும் கணவனைப் பிரிந்து வாழ்பவள். கணவனோடு கூடிவாழ எண்ணுபவள். அதனால்தான் 'யாமொருநாள் ஆடுதும்' என்று தன்னோடு கண்ணகியையும் உளப்படுத்திப் பேசுகிறாள்.

இது கேட்ட கண்ணகி, 'அவ்வாறு நீராடித் தெய்வம் தொழுவது எங்கட்கு இயல்பல்ல,' என்று கூறி மறுத்து விடுகிறாள்.

பொற்றொடிஇ,

கைத்தாயு மல்லை கணவற்கொரு நோன்பு
பொய்த்தாய் பழம்பிறப்பில் போய்க்கெடுக உய்த்து
கடலொடு காவிரிசென் றலைக்கும் முன்றில்
மடலவிழ் நெய்தலங் கானல் தடமுள
சோமகுண்டம் சூரியகுண்டம் துறை மூழ்கிக்
காமவேள் கோட்டம் தொழுதார், கணவரொடு
தாமின் புறுவர், உலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர், யாமொருநாள்
ஆடுதும் என்ற அணியிழைக்கவ் ஆயிழையாள்,
பீடன்(று) எனவிருந்த பின்னர்

தோழி தேவந்தி, தம்முடைய குல, மரபுக் கோட்பாடுகளைக் கண்ணகியிடம் புகுத்த, நளினமாய், மெல்ல முயலுவதைப் பார்க்கிறோம்.

தன்னை மணந்த கணவனினும், மற்ருெரு தெய்வம் இல்லை என்பது தமிழர் கோட்பாடு. இது திருவள்ளுவர் வகுத்த அறம். இதற்கொரு எடுத்துக் காட்டாய், கண்ணகி இங்கே காட்சி அளிக்கின்ருள். தெய்வம் தொழாள் கணவனையே தொழுவாள் என்றுகூறுகிருர். கணவனையே தொழுவாள் என்ற நிலையிலும், மற்றவற்றைத் தொழ மாட்டாள் என்றே பொருள்தரும். அழுத்தமாக, இக் கருத்தை வலியுறுத்த எண்ணியே, 'தெய்வம் தொழாள்' என்று எதிர்மறைப் பொருளில் வைத்துக் 'கணவனைத் தொழுதெழுவாள்' என ஆசிரியர் அமைத்திருக்கக் காணுகிரும். இன்னது செய்க, இன்னது செய்யற்க. செய்வதனுல் நன்மை, தீமை இவை என்ற அளவில் நீதிநூல் கூறும். இதையே ஒரு காவியம் எப்படிக் கூறும் என்பது

யாமொருநாள்,
ஆடுதும் என்ற அணிஇழைக்(கு) அவ் ஆயிழையாள்
பீடன்று

என்று பதிலிறுத்த சிலப்பதிகாரத்தில் தெளிவாகிறது. கற்புடைக் கண்ணகியோ, அங்ஙனம் நீராடித்தெய்வம்தொழுதல் எங்கட்குஇயல்பன்று என்றுகூறுகின்ருள். தோழியின் மனம் நோவாமலும், தன் கொள்கை நழுவாமலும், கதைபோகும் வேகத்தில், 'பீடன்று' என்ற ஆற்றல் வாய்ந்த மறுமொழி ஆணித்தரமாய் வந்து விழுகின்றது. இது சொற் செட்டாய், சிறிதும் சுவை குன்ருமல், காவியக்கதை அமைப்பில் வந்தமைகிறது. இதுபற்றி மேலும் உரையாட இடமின்றி, கதை ஓட்டம் தடைபடாது செல்ல அடுத்த சம்பவம் ஆரம்பமாகிவிடுகிறது. இந்நிலையில், கண்ணகியிடம் இளம் தோழி ஒருத்தி ஓடிவருகிருள். அரசரைப்போல ஒருவர், நம் வீட்டருகே வந்துள்ளார். அவர் நம் கோவலரே, என்று கூறுகின்ருள். சேய்மையில்

கண்டபோது, அரசனே என்ற ஐயம், அணிமையில் வந்ததும் நீங்கிப்போகிறது.

அவள் சொல்லி முடிவதற்கு முன்னே, கோவலனே அங்குவந்துவிட்டான். நேராகப் பள்ளி அறையில் புகுந்தான். கண்ணகியின் வாடிய மேனியை, வருந்திய உள்ளத்தைக் கண்டான். 'இவை எல்லாம் வஞ்சம் பொருந்திய, பொய்யான ஒருத்தியோடு, கூடி வாழ்ந்த காரணத்தால் நேர்ந்தன. முன்னோர் தேடிவைத்த மலைபோலும் செல்வமெல்லாம் கரைந்துபோயின. அதனால் வந்த வறுமை எனக்கு நாணத்தை உண்டாக்குகிறது' என்று கூறினான். இவ்வாறு கூறியதைக் கேட்ட கண்ணகி, மாதவிக்குக் கொடுக்கப் பொருள் இல்லாத, காரணத்தால் இங்ஙனம் கோவலன் கூறியதாய் எண்ணினாள். தன் முகத்தில் புன்முறுவலை, உண்டாக்கிக் கொண்டு 'இன்னும் இரண்டு சிலம்புகள் உள்ளன. இதோ கொள்ளுங்கள்.'

நலங்கேள் முறுவல் நகைமுகம் காட்டிச்
சிலம்புள கொண்மென...

என்று கூறுகின்றாள். இந்த வரிகளில் கண்ணகியின், பண்பட்ட உள்ளத்தை இளங்கோ காட்ட, நாம் காணுகிறோம். கோவலனோ தவறான ஒழுக்கத்தை நேற்றுவரை மேற்கொண்டவன். மணந்த மனைவியை மறந்தவன். மனைவி அழுது துடிக்க, நாளும் மற்றொருத்தியோடு கூடி வாழ்ந்தவன். அவனை நேராகக் கண்ட மனைவியிடம் வசவு தவிர, வணங்கிய சொல்லையோ, இணங்கிய குறிப்பையோ எதிர்பார்க்க முடியுமா? இத்தகைய இயல்புக்கு முற்றிலும் மாறாகக் கண்ணகி நடந்துகொள்வதை நாம் காணுகிறோம். சிந்திய கண்ணீரைத் துடைத்து, சிரித்த முகமும், ஏந்திய சிலம்புமாய்க் கணவன் முன்னே நிற்கும் கண்ணகியைப் பெண்டிர் குலத்தின் மேலான

பேறெனவே சொல்ல வேண்டும். சிலம்புதவிர, ஏனைய செல்வமெல்லாம் போய்விட்டதை, ஆசிரியர் நுணுக்க மாய்ப் புலப்படுத்துகிறார்.

இந்தச் சம்பவம், கோவலனை மேலும் புத்துணர்வு கொள்ளத் தூண்டுகிறது. தன் நிலையை, அவன் இப்பொழுது நன்கு அறிந்துகொண்டான். கண்ணகியை நோக்கி, 'இச்சிலம்பை முதலாகக் கொண்டு, இழந்த பொருளை எல்லாம் ஈட்டுவேன். அதற்குத் தகுதிவாய்ந்த நகர் மதுரையேயாகும். என்னுடன் நீயும் வருக! எழுக! பொழுது புலர்வதற்குமுன் நாம் செல்லுவோம்' என்று கூறினான்.

சேயிழை, கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனொடு
உலந்தபொருள் ஈட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாடமதுரை அகத்துச் சென்றுஎன் னேடிங்கு
ஏடலர் கோதாய் எழுக.

கோவலனிடம் எல்லையற்ற செல்வமிருந்தது. இன்று இருப்பதெல்லாம் 'ஊக்கம்' ஒன்றுதான். இதை ஆராய வேண்டும். செல்வத்தை ஈட்டுவதற்கு அடிப்படை — ஊக்கந்தான். செல்வத்தை இழந்த நிலையில் எஞ்சி நிற்பது, சோர்வு. அதன் முடிவு, தோல்வி. இந்தச் சோர்வும், தோல்வி மனமும், ஒரு சிறிதும் கோவலனிடமில்லை. மாறாக, சிலம்பை முதலாகக் கொண்டு, இழந்த பொருளை ஈட்டுவேன் என்ற ஊக்கத்தின் உச்சியில், அவன் உள்ளம் நிற்கிறது. 'ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும், அசைவிலா ஊக்கம் உடையா னுழை' என்பது குறள். துன்பங்கண்டு தளராத, ஊக்கமுடையவனிடம், செல்வமானது, தானே வழி விசாரித்துக்கொண்டு சென்றடையும் என்கிறார் குறளாசிரியர். செல்வத்தை இழந்துவிட்டாலும் ஊக்கமிருந்

தால் அதனைப் பெறலாம். ஊக்கம் போய்விட்டால் இழந்த செல்வத்தை ஈட்ட முடியாது. ஆகவே, செல்வத்தைப் பார்க்கிலும் சிறந்தது, ஊக்கம் என்று உணருகிறேம். அத்தகைய ஊக்கம், கோவலன் உள்ளத்தே, குடிபுகுந்து நிற்கிறது. அதுவே, பிடர் பிடித்து மதுரைக்கு இழுத்து வருகிறது.

இவ்வாறு கோவலன் மதுரை செல்வதுபற்றிக்கண்ணகியிடம் கூறவே, இளங்கோ அடிகள் இதற்குக் காரணம் கூறுகிருர். முற்பிறப்பில், கோவலன் செய்த தீவினை நெடுங்காலம் வளர்ந்து, அவன் நெஞ்சில் பழுவாய் இருந்து வந்தது. அது வெளிப்படும் காலம் இதோ வந்துவிட்டது. வரவே, அது இட்ட கட்டளைக்குக் கோவலன் பணிகிருன் என்கிருர் கவி. கணவன் கூறியன கேட்ட கண்ணகி, மறுக்காது, மறுசொல் பேசாது, உடன் புறப்பட்டாள்.



# 7. மதுரையை நோக்கி மூவர்

ஆழ்ந்த உறக்கத்திலிருந்து மாந்தர், கண் விழிக்கின்ற புலர்பொழுது. நீல வானத்தில் மின்னிப் பொலிந்த நட்சத்திரங்களும், குளிர்ந்த கதிர்களால் இனிமையாய்த் துயிலவைத்த வெண்மதியும், இருந்தவிடம் தெரியாமல் மறைந்து போயின.

அந்நேரத்தே, பதியெழுவறியாப் பழங்குடி வந்த, கோவலன் கண்ணகி இருவரும், ஊழ்வினை காட்டிய நெறியிலே, மதுரை நோக்கி வழி நடந்தனர். பூம்புகார் நகரத்து, வழியிடையேயுள்ள திருமாலையும், புத்தனையும், அருகனையும் வழிபட்டு, நகர் வாயிலைக் கடந்தனர். புகார் நகர் நோக்கிப் புகுவாரை, வரவேற்று, வழிநடைச் சோர் வகற்ற, இயற்கை அன்னை வழங்கியதுபோலும், சோலையொன்று உண்டு. இச்சோலையிலிருந்து அரசாளும் மன்மதன், சோழ நாடாளும் வேந்தர்க்கு, திறைப் பொருளாக இளவேனிலையும், இனிய தென்றலையும் வழங்கி வருகின்றான். இத்தகைய தண்பூஞ்சோலையிலே தங்கி, கோவலனும், கண்ணகியும் கொழும்புனல் காவிரியின் விழுமிய, வடகரையை அடைந்தனர்.

காவிரி நதியின் கரை அருகே உள்ள சோலை, அதன் இனிய வளர்ப்பால் அடர்ந்து, ஆகாயம் நோக்கி உயர்ந்து நின்றது. கனிபழுத்த மரங்கள்கிளை படர்ந்த காரணத்தால், கோவலனும் கண்ணகியும் தலைகுனிந்து உள் நுழைந்து போயினர். அங்கே ஒரு தவப்பள்ளி. கவுந்தி அடிகளின் வாழ்விடம். இருவரும் அதை அடைந்தனர். புகார் நகர் விட்டுப் புறப்பட்ட கண்ணகி, இதுவரை ஒரு காத தூரம் வந்துவிட்டாள். இந்நிலையில் அவளது கொடியிடையும், பூவடியும் வருந்தின. விற்புருவங்கள் முத்து முத்தாய் வியர்த்தன. அவள் வாழ்விலே, மேற்கொண்ட வழி நடைப் பயணம் இதுவே, என்பதுபோல், வாய்விட்ட பெருமூச்சுக் காட்டியது. சிறு தூரம் வந்த அளவிலே, கண்ணகி நெடுந்தூரம் வந்ததாய் எண்ணினுள்.

குடதிசைக் கொண்டு கொழும்புனல் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழில் நுழைந்து
காவதங் கடந்து கவுந்திப் பள்ளிப்
பூமலர்ப் பொதும்பர்ப் பொருந்தி ஆங்கண்
இறுங்கொடி நுசுப்போடு இணைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல உயிர்த்து
முதிராக் கிளவியின் முள்ளெயிறு இலங்க
மதுரை மூதூர் யாதென வினவ

என்கின்றுர் கவி. கண்ணகியைக் கூறிவருகின்ற தொடர்களிலே, அடைமொழிகளிலே, அவளது இளமை, இனிமை, இவை கலந்த பெண்மை காட்டப்படுகின்றது. இங்கே மழலை மாருத சொற்களால், கண்ணகி, மதுரை மூதூர் இன்னும் எவ்வளவு தூரம் என்று, கோவலனை நோக்கிக் கேட்கின்றுள். 'முதிராக்கிளவியும்' [முதிர்ச்சி அடையாத சொற்கள்] 'முள்ளெயிறும்' [முள்முனை போன்ற பற்கள்] கண்ணகியின் இளமையைப் புலப்படுத்தப் போது

மானவை. இத்தகைய, கண்ணகியின் கேள்விக்குக் கோவலன் கூறிய விடையோ, அற்புதமான பொருள் வடிவம் பெறுகிறது. அதுவே மனோதத்துவத்திற்கு, மாருததாகவும் அமைந்து விடுகி றது. 'ஆறைங் காதம் நம் அகநாட்டும்பர், நாறைங்கூந்தல், நனித்தென நக்கு'— இதுவே கோவலன் கூறிய மறுமொழி. நமது நாட்டிற்கு ஐந்தாறு காத தூரத்தில், மதுரை உள்ளது; சமீபந்தான் என்று சிரித்துக்கொண்டு கூறுகின்றான். அவன் விடையில் சொற்செட்டும், சிந்திக்கத் தூண்டும் நிலையில் பொருள் விரிவும், பெற்று மிளிரக் காணுகிறோம்.

ஒருகாத தூரம் நடந்த நிலையிலேயே, களைப்படைந்து போன கண்ணகியிடம், மதுரை இன்னும் முப்பது காத தூரமிருக்கிறது என்று கூறினால் அதன் விளைவு யாதாகும்? துன்பத்தில் இதுவரை உழன்ற கண்ணகிக்கு மேலும் துன்பம் செய்ததாகுமல்லவா?

கணவனை அடையாத துன்பத்திலும், அடைந்த துன்பம் பெரிதாகத் தோன்றும். செயலில்தான் துன்பமென்றால், சொல்லிலாவது இன்பம் வேண்டாமா? மதுரை நகரம் இன்னும் முப்பது காத தூரம் உள்ளது என்று கோவலன் கூறினனா? இல்லை. கண்ணகியின், அறிவின் விரிவுக்கு ஏற்பப்பொருள் கொள்ளுமாறு பேசி இருக்கிறான். அதற்கான திறம் கோவலன் வாக்கிலே நிரம்பிக் கிடக்கிறது. ஐந்து ஆறு—முப்பது—என்ற பொருளும், ஐந்தும் ஆறும், பதினொன்று-என்ற பொருளும் கொள்ளத்தக்கன வாயினும், இங்கே, ஐந்து, அல்லது ஆறு காத தூரம் என்று, அவள் அஞ்சி ஏங்காமல் இருக்க அமைதியாய், ஆறுதலாய்க் கூறுகிறான். இவ்வாறு பேசுகின்ற கோவலன் சிரித்துக்கொண்டே கூறுகிறான் உலகியல்போடு இதைச் சற்று இணைத்துப் பார்க்க வேண்டும். இம்மாதிரி

யான ஒரு நிலையில் கேட்ட ஒரு கேள்விக்கு, ஒருவன் சிரித்துக்கொண்டே விடை கூறினல், கேட்பவர்க்கு, அதில் ஐயம் தோன்றிவிடும். அந்நிலையில் 'சிரிக்காமல் உள்ளதைச் சொல்' என்றும், சிரிப்பதன் காரணமாக, அது உண்மை அன்று என்றும் எண்ணி விடுகிருேம். இம்மாதிரியான ஒரு செயலாலும் கோவலன் சிறந்தவனுகக் காணப்படுகிருன்.

கண்ணகியின் மனே நிலைக்கு ஏற்பவே கோவலன் கூறிய விடை அமைந்திருக்கிறது. ஊரை விட்டு, ஒரு காத தூரம் வந்தவுடனேயே, மதுரை வந்துவிடப் போவதாய் நினைத்த கண்ணகியின் பேதமையை நினைத்தால், கோவலனுக்குச் சிரிக்கத்தானே தோன்றும். அவள் அஞ்சிவிடாமல் பொய்யும் சொல்லுகிருன். இந்த இருவரிடையே, இளங்கோ 'முதிராக் கிளவியின், முள்ளெயிறு, இலங்கக்' கண்ணகியாகிப் பேசியும், 'ஆறைங்காதம், நணித்தெனக்' கோவலனுகி விடை பகர்ந்தும் செல்வது கதை ஓட்டத்தின் போக்கிலே, சோர்வின்றி நாம் தொடர்ந்து செல்ல இயலுகிறது.

இத்தகைய கண்ணகியும் கோவலனும் பொழிலிடையேயுள்ள தவப்பள்ளியிலே, கவுந்தியடிகள் என்னும் பெண்பால் துறவியைக் கண்டு, அவர் திருவடி வணங்கினர். 'நீங்கள் இவ்வாறு வரக் காரணம் என்ன?' என்று அடிகள் கேட்டபோது, 'மதுரை நகர் போய், பொருள் திரட்டும் எண்ணமே இதற்குக் காரணம்' என்று கோவலன் கூறினன். இவர்கள் இருவரும் மதுரைக்குச் செல்வதில், தமக்கு வருத்தமில்லையாயினும், கண்ணகியின் பாடகமமைந்தமலரடிகள், பருக்கைக் கற்களிலே பட்டு வருந்துமே, என அடிகள் வருந்துகிருர். இருவரோடு தாமும் மதுரைக்கு வருவதாய்ச் சொல்லிய சொற்களிலே

கோவலன் கண்ணகியின் வழி நடைத் துன்பமனைத்தும் துடைக்கப்பட்டுப் போனதாய் எண்ணினன். வழித்துணையாக அடிகள் வாய்த்ததை, எண்ணி மகிழ்ந்தான். மாட மதுரை நோக்கி, மூவரும் புறப்பட்டனர். செல்லும் வழியில் நிகழும் துன்பங்களை, அடிகள் இருவருக்கும் எடுத்துக் கூறுகிறார். இங்ஙனம் கூறுமுகமாக, சோழ நாட்டின் நீர்வளமும், நிலவளமும் கூறப்பட்டு விடுகின்றன. ஒரு செயலில் இரு பயனும் விளையுமாறு இப் பகுதி உருவாகிறது. இனி இதைக் கவுந்தி அடிகள் வாக்கிலே காண்போம்.

கண்ணகியின் மெல்லிய இயல்பு வாய்ந்த உடல், வெயிலின் கொடுமையைப் பொருது, மலரென வாடி விடும். எனவே, சோலை வழியேதான் நாம் செல்ல வேண்டும். அதிலும் ஒரு துன்பம் உண்டு. அங்கங்கே, வள்ளிக்கிழங்குகளைப் பெயர்த்தெடுத்த பள்ளங்கள் உண்டு. வாடிய சண்பகப்பூக்கள் நிரம்பி, அவற்றை மறைத்துவிடும். கவனமாக நாம் செல்லத்தவறினல் அப்பொய்க் குழிகளிலே, விழுந்துவிட நேரும்.

வெயில் நிறம் பொருஅ மெல்லியல் கொண்டு
பயில் பூந் தண் தலைப் படர்குவம் எனினே
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பகம் நிறைந்த தாதுசேர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்று மாக்கட்குக்
கையறு துன்பம் காட்டினும் காட்டும்

இத்துன்பங்களை நினைத்துப் பள்ளங்களை விட்டு ஒதுங்கி, பலாமர நிழல்வழியே செல்லலாம். சென்றால் சுமை தாங்காது, தாழ்ந்த கிளைகளிலே தொங்கும் பலாப்பழங்கள், நம்மைப் பகையாக நினைத்துத் தலையிலே முட்டும்.

'தலை பணிந்து போ' எனக் கட்டளையிடுவதுபோல் காட்சி தரும்.

உதிர்பூஞ் செம்மலின் ஒதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினும் முட்டும்

இத்தகைய பலாப் பழங்களுக்கு, அஞ்சி விலகினால் இவைகளின் இனமான பலாவிதைகள் எங்கும் பரவி பாத்தி பாத்தியாய், விதைக்கப்பட்டுள்ள மஞ்சளுடன் விரவி, காலை உறுத்தி வருத்தும். நம் முடியை (தலையை) முட்டுகின்ற பலாப்பழங்களையும், நம் அடியை வருத்துகின்ற பலா விதைகளையும் பார்த்தால் இயற்கை அன்னை, நம்மைத் தண்டிக்கத்தக் இத்தகைய அதிகாரங்களை, இவைகளுக்கு வழங்கி இருப்பதாகவே தோன்றுகிறது.

இதை விடுத்து, வயல் வழியே செல்லலாம் என்றாலோ, பூமணக்கின்ற பொய்கையிலே, நீர்நாய் கவ்விய வாளைமீன்கள், துள்ளிக் குறுக்கே பாய்வதைக் கண்டு, கண்ணகி அஞ்சுவாள்.

வயலுழைப் படர்குவம் எனினே ஆங்குப்
பூநாறு இலஞ்சிப் பொருகயல் ஓட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயின்
கலங்கலும் உண்டுஇக் காரிகை

எனவே, கரும்பு பயிர் செய்த தோட்டத்தே நாம் போகலாம். ஆனால், கரும்பிலே கட்டிய தேன் கூடுகள் சிதைந்தால், கசிந்துவரும் தேன் துளிகள் கலந்த நீரைக் கண்ணகி அடங்காத நீர் வேட்கையால், அறிவு சோர்ந்து, குடங்கையால் மொண்டு குடிக்கவுங் கூடும். ஊனைப்போலவே நீக்கவேண்டிய ஒன்று தேன் என்று கூறுகிறார்.

கரும்பில் தொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கும்
அடங்கா வேட்கையின் அறிவஞர் எய்திக்
குடங்கையான் மொண்டு கொள்ளவுங் கூடும்

அதிகமான வேட்கையிலே, அறிவு தன் இயல்பை இழந்து விடுகிறது. இது நல்லது, இது தீயது என்பதை உணரும் ஆற்றலை இழக்கின்ற நிலை, மிதமிஞ்சிய வேட்கையிலே பிறக்கிறது. இதை, அடங்கா வேட்கையின், அறிவு 'ஆரஞர் எய்தி' என்பதில் அழுத்தமாய்க் கவி பேசக் காணுகிறோம். வயல் வழியே போக முடியவில்லை, வரப்பு வழியே போகலாம் என்றாலோ, களை எடுப்பார் பறித்த குவளை மலர்கள், வரப்பிலே கிடந்து, தாம் இறக்கும் நிலையிலும் தம்மிடம் இரக்கும், வண்டுகளுக்குத் தேன் நல்கும். அந்த சோகக் காட்சியை, நாம் கூர்ந்து நோக்காது போனால் தேனைப் பருகிய வண்டுகள், நம் காலிலே பட்டு, அழிந்துவிடும். இது பெரும்பாவம். வயல் வழியும், வரப்பு வழியும் இங்ஙனமானால், வாய்க்கால் வழியே போகலாம். ஆனல், அதன் குளிர் கரையிலே உயிர்வாழும் நண்டும், நத்தையும் நம் காலிலேபட்டு மடியும்.

குறுநர் இட்ட குவளையும் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தந்து நீரஞர் எய்தி
அறியாது அடிஆங்கு இடுதலும் கூடும்
எறிநீர் அடைகரை இயக்கந் தன்னில்
பொறிமாண் அலவனும் நந்தும் போற்றாது
ஊழடி ஒதுக்கத்து உறுநோய் காணில்
தாழ்தரு துன்பம் தாங்கவும் ஒண்ணா

எனவே, எவ்வழியில் போவதாயினும், எந்த உயிருக்கும் ஏதம் இல்லாமலும், நமக்குத் துன்பமின்றியும் செல்ல

வேண்டும். நீ உன் மனைவிக்கு அந்த அந்த இடங்களில், குறிப்பாக உணர்ந்து, கூறத்தக்கன கூறிப் பாதுகாத்து வருவாயாக எனக் கவுந்தி அடிகள் உருக்கமாய்க் கூறுகிறார். இப்பகுதியில் சோழ நாட்டின் ஈடுஇணையற்ற வளங்களைக் கூறுவதாக மட்டும் நாம் கொண்டுவிட முடியாது. அதே சமயத்தில் 'கொல்லாமை', 'பிறஉயிர்க்குத் துன்பம் செய்யாமை', 'அடங்கா வேட்கையால் ஏற்படும் அறியாமை'—இன்னபல வற்றிற்கும், அறவுரைகள் இவையனைத்திலும், உள்ளார்ந்து மிளிர்கின்றன. 'அறவினையாதெனில் கொல்லாமை' என அறங்கள் எல்லாவற்றுள்ளும் தலைமையானதாய், இதனை வள்ளுவர் கூறுகிறார். இந்த அரிய நீதியை, நீதி நூல் வழி உணர்வதினும், வண்ணனைக் காட்சியிடையே வைத்து, வழங்குவதில் பெரும்பயன் விளையும் எனக் கவிஞன் கொண்ட எண்ணம், நம் உள்ளத்திலும் புகுந்து கொள்ளுகிறது. கோவலன், கண்ணகி இருவரும் இத்தகைய அரிய பயனுடைய பேச்சிலும், இதை நேருக்கு நேராய்க் காட்டி வரும் இனிய காட்சிகளிலும், சோர்வு நீங்கித் துன்பம் மறந்து நடந்தனர். அன்றியும், ஆற்றங்கரையிலே, வயல் வெளியிலே, உழவர்கள் உவந்து பாடும் ஏர் மங்கலப் பாட்டையும், முகவைப் பாட்டையும் கேட்டு வழிநடை வருத்தம் மறந்தனர்.

இவ்வாறு, நாளொன்றுக்குக் காதவழி நடந்து திருவரங்கம் (சீரங்கம்) வந்து சேர்ந்தனர். சோலையொன்றிலே, தங்கிச் சாரணரது உபதேசம் பெற்றனர். பின்னர் அமைதியாய் ஓய்வு மேற்கொள்ள எண்ணினர். அச் சமயம், வம்பன் ஒருவனும் பரத்தையொருத்தியும் அங்கே வந்தனர். கோவலனையும், அவன் அருகே அமர்ந்திருக்கும் கண்ணகியையும் கண்டனர். சற்று விலகி, கவுந்தி அடிகள் இருக்கப் பார்த்தனர். இந்நிலையில் அவர்கள்

இருவருக்கும் ஒரு ஐயம் ஏற்பட்டது. ஆண்டவனைப் பார்த்தால் காமனைப் போலிருக்கிறான். பெண்மகளைப் பார்த்தால் ரதிபோலிருக்கிறாள். மற்றொருவர் காவி யாடை புனைந்த துறவியாகக் காணப்படுகிறார். முற்றி லும் முரண். காணக்கிடைக்காத காட்சியாய் இது அவர் களுக்குத் தோன்றியது. எனவே, இதைத் தெளிவாக உணர்ந்துகொள்ள விரும்பினர். கவுந்தி அடிகளை அணுகி "உங்களோடு வழிநடை வந்த இவர்கள் யார்?" என்று கேட்டனர்.

அது கேட்ட கவுந்தி அடிகள்: 'என் மக்கள் காணீர்' என்கின்றார். நீங்கள் நினைப்பது போலக் காமனுமல்ல, அவன் தேவி ரதியுமல்ல என்று உள்ளெழுந்து வெளிப் படாத அவர்களது ஐயத்தையும் உணர்ந்து கொண்டு பேசுகின்றார். உரையாடலை மேலும் வளர்த்த விரும்பாமல் ஒரு முடிவுக்குக் கொண்டுவர எண்ணியவராய், 'வழி நடந்த வருத்தத்தால் (கோவலன் - கண்ணகி) இருவரும் சோர்ந்துள்ளனர். அவர் பக்கம் செல்லாதீர்' என்று பணித்தார். இதன் நோக்கம், நீங்கள் வந்த வழி நோக்கிச் செல்லுங்கள் என்பதாகும். இந்த உபதேசம் அவன் காதிலே படுமா? வலிய வந்து வார்த்தையாடித் துன்ப முறும் வம்பனுயிற்றே — அவன்? எனவே, அடிகள் கூறிய விடை, அவனுக்கு மேலும் ஐயத்தையே உண் டாக்கி விட்டது. அருகே, கணவனைப் போலவும், மனைவி யைப்போலவும் அமர்ந்திருக்கப் பார்த்தால் அவனுக்கு, ஐயம் வராமற்போகுமா? அடிகளை மேலும் அணுகி, 'என் மக்கள்' என்று சொல்லுகிறீர்கள். அடிகளே! ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள், கணவனும், மனைவியுமாய் வாழ் வதுமுண்டோ? என்றொரு கேள்வியை எதிர்பாராதவித மாய்ப் போடுகிறான்.

வம்பன் இவ்வாறு கேட்பதற்குக் காரணமுண்டு 'என் மக்கள்' என்று கூறும் கவுந்தி அடிகளோ இல்லறத்தை வெறுத்த துறவி. இத்தகைய ஒருவருக்கு மக்களுமுண்டோ என்பது முதல் ஐயம். 'ஒருதாய் வயிற்றுப் பிள்ளைகள் இருவர், கணவனும், மனைவியுமாய் வாழ்வதுமுண்டோ என்பது இரண்டாவது ஐயம். இந்த இரண்டாலும், அவர்கள் இருவரும், அண்ணனும் தங்கையுமல்ல. அடிகளின் மக்களுமல்ல என்று எண்ணுகிறான். கவுந்தி அடிகளைத், 'தவத்தீர்' என்றும் 'கற்றறிந்தீர்' என்றும் கூறுகிறான். அந்தச் சொற்களில்தான் எத்தனை விதமான கிண்டல் குறிப்பும், இகழ்ச்சிப் பொருளும் தொனிக்கின்றன!

தவத்திற்கு முரணான, இல்லறத்து இருவர் கூட்டுறவைத் 'தவத்தீர் உடன் ஆற்று வழிப்பட்டோர் யார்?' என்ற தொடர்களில் கூறுகிறான். கற்றவர், கற்றதை அறிந்தவர்—அத்தகைய ஒருவர் 'என் மக்கள்' என்று கூறியது எத்துணைப் பொய் என்பதை இகழ்ச்சி புலனாகச் சொல்லி நகையாடுகிறான்: 'நீர் கற்ற நூல்களில் ஒரு தாய் வயிற்றுப்பிள்ளைகள் கணவனாய், மனைவியாய், வாழ்ந்த கதையுண்டோ?' என்று கேட்கின்றான். இத்தகைய ஒருவனை இடையிலே புகுத்தி, அவனுக்கு 'வம்பன்' என்றொரு பெயரையும் வழங்கி, பெயருக்கு ஏற்பப் பேசவும் வைத்துக் கதைச்சுவை குன்றாமல், இடையில் இத்தகைய நகைச்சுவை தோன்ற அமைத்த கவியின் இயல்பு பாராட்டும் வண்ணமிருக்கிறது.

வம்பன் மொழிந்த சொற்கள், கவுந்தி அடிகளின் உள்ளத்தை வருத்திவிட்டன. அதனால் கடுஞ்சினம் கொண்ட அடிகள் 'பிடிசாபம்' என்றார். அதே சமயத்தில்

நறுமலர்க் கோதையும் நம்பியும் நடுங்கி
நெறியின் நீங்கியோர் நீரல கூறினும்
அறியாமை என்று அறிதல் வேண்டும்

எனக் கண்ணகியும் கோவலனும், அந்த வம்பனும் பரத்தையும் நரியாகி ஊளையிடுவது கேட்டு, நடுங்கிக் கவுந்தி அடிகளை நெருங்கி, நல்லொழுக்க நெறியில் நீங்கியவர்கள், நீர்மை அல்லாததைக் கூறினாலும், அது அறியாமையால் கூறியது என நினைத்து, மன்னிக்க வேண்டும் என்று கூறினர். ஓராண்டுக்குப் பிறகு அவர்கள் இருவரும் மானுடம் பெறுவர் என்று சாப விமோசனம் செய்தார் அடிகள். இவ்வாறு இல்லறத்து இருவர் (கோவலன்—கண்ணகி) துறவறத்து முனிவர்க்கு, பிழை பொறுக்கின்ற நெறி கூறுமாறு இந்நிகழ்ச்சி அமைந்திருக்கிறது.

## 8. மாசகற்றிய மறுகடிதம்

சோழ நாடாளும் வேந்தரின் மற்ெருரு தலைநகரம் உறையூர். இந்த உறையூரைப் பற்றி அரிய செய்தி யொன்று உண்டு. இந்நகரத்தின் பண்டைப் பழம்பெயர் கோழியூர். யானை யொன்றை, இவ்விடத்துக் கோழி யொன்று சமர்புரிந்து வென்றதாம். எப்படி? இதை 'முறஞ்செவி வாரணம், முன் சமமுருக்கிய, புறஞ்சிறை வாரணம் புக்கனர்' என இளங்கோவடிகள் கூறுகிறார். கோழி யானையை வெல்வதா? இது எப்படி முடியும்? என்று கேட்கத் தோன்றும். யானையின் சாட்டை போன்ற வாலிலே, தும்பிக்கை வீச்சிலே, உரல் போன்ற காலடியிலே, அகப்பட்டால்...?—எளிதாய்க் கேட்டுவிடு வோம். காலமும், இடமும் பொருந்தினல்—அவை தக்க சமயத்தில் உதவி புரிந்தால், ஏன் முடியாது? வள்ளுவர், 'காலாழ்களரின் நரியடுஉம், கண்ணஞ்சா, வேலாள் முகத்தகளிறு' என நரியானது யானையை வெல்லும் என்று காரணத்தோடு கூறவில்லையா? எனவே, கோழி யானையை வெல்வது முடியாததல்ல; இயல்வதே.

இத்தகைய கோழியூர், பின்னளில் உறையூராயிற்று. இந்த உறையூரைக் கண்ணகி, கோவலன், கவுந்தி அடிகள்

மூவரும் வந்தடைந்தனர். அசோக மரத்து அடி நிழலிலே, ஞானப்பிழம்பாய் வீற்றிருக்கும் அருகதேவனை வழிபட்டு, வணங்கினர். மூவரும் சிராவகர் இல்லத்தில் தங்கி, இராப்பொழுதைக் கழித்தனர். பொழுது புலர்வதற்குச் சிறிது முன்னே எழுந்து மூவரும் தெற்கு நோக்கி வழி நடந்தனர். கடும் வெயில் தோன்றும் நடுப்பகல். மூவரும் வளம் நிறைந்த வயலும், வாவியும் அருகமைந்த, இளமரச் சோலையொன்றிலிலே, அயர்வு தணிய வந்தமர்ந்தனர். 'தீதுதீர்த்து நாடாளும் தென்னவர்கோன் வாழியவே' என்ற வாழ்த்தொலி கேட்டு, மூவரும் திரும்பினர். கோவலன் இவ்வாறு கூறிய அந்தணனை நோக்கி, எந்த ஊர்? வந்த காரணம் என்ன? என்று கேட்டான். தம்மூர், குடமலை நாட்டு மாங்காடு என்றும், திருப்பதியிலும் திருவரங்கத்திலுமுள்ள திருமாலை, வழிபட்டு வருவதாகவும், மதுரையில் பாண்டிய வேந்தரின், செங்கோலாட்சியின் சிறப்பைக் கண்டதாகவும் அந்தணன் கூறுகிறான். அப்படியானல் மதுரைக்குப் போகத்தக்க நல்லவழியை எங்கட்குச் சொல் என்று கோவலன் கேட்கின்றான். மதுரைக்குச் செல்ல மூன்று வழியுண்டென்றும், அவற்றுள், அழகர்மலையை அடைந்து, ஆங்குள்ள, புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி என்ற மூன்று பொய்கைகளிலும் மூழ்கி எழுவோர், வானவர் வாழ்த்தும் பெருமையும், முற்பவ உணர்ச்சியும், நினைத்தன பெறவும் முடியுமென்றும், தம்முடைய மதக் கோட்பாடுகளைச் சொல்லி, மூவரையும் நீராடிச் செல்லுமாறு கூறுகிறான்.

இவை யனைத்தும் கவுந்தி அடிகளின், மறுமொழியிலே, காரணம் கூறி மறுக்கப்படுகின்றன.

> கவுந்தி ஐயையோர் கட்டுரை சொல்லும்
> பிலம்புக வேண்டும் பெற்றிஈங் கில்லை





கப்பத்(து) இந்திரன் காட்டிய நூலின்
மெய்ப்பாட்டு இயற்கையின் விளங்கக் காணுய்
இறந்த பிறப்பின் எய்திய எல்லாம்
பிறந்த பிறப்பில் காணு யோநீ
வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு
யாவது முண்டோ எய்தா அரும்பொருள்
காமுறு தெய்வம் கண்டடி பணிய
நீபோ—

நீ கூறியபடி, வரம்பெறவேண்டிய அவசியம் எங்கட்கு இல்லை. ஏனெனில், எங்கள் அருகதேவன் அருளிய 'ஐந்திரம்' என்ற நூலைப் படித்தால், நீ கூறும் 'புண்ணிய சரவணத்தில்' புகுந்து, நீராடத் தேவையில்லை. முற் பிறப்பில் செய்தன எல்லாம், நாம் இப்பிறப்பில் காணு கிறோம். ஆதலால் நீ கூறிய 'பவகாரணியில்' மூழ்கவும் வேண்டாம். மன்னுயிரைத் தன்னுயிர்போல் மதித்து ஒழுகினுல், எய்தாத அரிய பொருளும் உண்டோ? ஆதலால் 'இட்ட சித்தியில்' நீராடவேண்டியதும் இல்லை என்று கூறுகிறுர்.

முன்பு கண்ணகிக்கு, தேவந்தி கூறியதுபோல, இங்கே வேதியன் மூவர்க்கும் கூறுகிறுன். வாய்ப்புக் கிடைக்கின்ற பொழுதெல்லாம், தம் கோட்பாடுகளை வலியுறுத்தி, இவர்கள் பேசி வருவதைக் காட்டியும், அவற்றை, மனம் நோகாமல், மறுத்துரைத்தும் சம்ப வங்கள் தடைபடாது செல்லுகின்றன. அன்றியும், தேவந்தி என்ற தோழிக்குக் கண்ணகி 'பீடன்று' என்று மறுத்துக் கூறியதும், இங்கே கவுந்தி 'பிலம்புகவேண்டும் பெற்றி ஈங்கில்லை' என்று கூறுமுகமாக, மறுத்துரைப் பதும், கண்ணகி, கவுந்திபால், நிறைந்துள்ள கருத்தொரு மைப் பாட்டையே, தெற்றெனக் காட்டிச் செல்லுகிறுர்.

கோவலன் மதுரைக்கு வழிகேட்க, அதனோடு முத்திக்கும் வழி சொல்லுகின்ற மறையோனின் இயல்பை, நகையாடி மறுத்துரைப்பது, கதையின் சிறப்புக்கு ஒரு காரணமாகி நிற்கிறது.

மறையோன் கூறிய, இடைநெறியிலே மூவரும் போய்க்கொண்டிருந்தனர். கோவலன் நீர் வேட்கையால் வருந்தி, கண்ணகி, கவுந்தி இருவரையும் விடுத்துப் பொய்கை யொன்றை நாடிப் போகிறான். வேதியன் கூறியதுபோலவே, மயக்குந் தெய்வம், வசந்தமாலை வடி வெடுத்து வந்தது. கோவலன் கூறிய மந்திர மொழியிலே, அது அஞ்சி நடுங்கியது. 'யான் இவ்வனத்திலே வாழ் பவள்; உன்னை விரும்பி, மாயம் செய்தேன்; கண்ணகிக்கும் கவுந்திக்கும் இதைக் கூறாதே!' என்று வணங்கிச் சொல்லி மறைந்தது.

வனசா ரினியான் மயக்கம் செய்தேன்
புனமயில் சாயற்கும் புண்ணிய முதல்விக்கும்
என்திறம் உரையாது ஏகு—

என்று அது கூறியது. தவம் சிறந்ததா? கற்புச் சிறந் ததா? என்ற கேள்விக்குத் திட்டமான விடை இங்கே கிடைக்கிறது. மயக்கும் தெய்வம், செய்த குற்றத்தைக் கண்ணகியிடமும், கவுந்தி அடிகளிடமும் கூறவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறது. துறவறமிருந்து நோற்ற தவம், கவுந்திபால் நிரம்பிக்கிடக்கிறது. வாழவும் சபிக் கவும் வல்ல ஆற்றல் கவுந்தியிடமிருப்பதை, முன்பொரு நிகழ்ச்சியில் காட்டப்பட்டது. அத்தகைய கவுந்தி அடிகளையே இங்கு முதலில் கூறியிருக்க வேண்டும். அதாவது 'புண்ணிய முதல்விக்கும் புனமயில் சாயற்கும்' என்று கூறவேண்டும், அங்ஙனம் கூறாது 'புனமயில்

சாயலை' (கண்ணகியை) முன்பும் 'புண்ணிய முதல்வியை' (கவுந்தியை) பின்பும் கூறப்படுகிறது. தவத்தினும் சிறந்தது கற்பு என்பதும், இந்நூல் கற்பின் இணையற்ற ஆற்றலை உணர்த்துகின்ற நோக்க முடையது என்பதும் தோன்றவே, துறவியும் தூய தவத்தினருமான இளங்கோ அடிகள் இங்ஙனம், அமைப்பாராயினர்.

கண்ணகியின் உண்ணீர் வேட்கையைத் தவிர்க்க எண்ணிய கோவலன், தாமரை இலையிலே பொய்கைநீரை மொண்டு வருகிறான். உண்ட கண்ணகி சோர்வு நீங்கினாள். சூரியவெப்பம் மிகவே, இக்காட்டைக் கடத்தல் அரிது என எண்ணிய மூவரும் எதிரே காணப்பட்ட சோலையிலே வந்து புகுந்தனர். அதன் நடுவே ஒரு கொற்றவை கோவில் உண்டு. இக்கொற்றவையே மறவர்க்குத் தெய்வம். மறவர்கள், தங்கள் குலத்தில் பிறந்த பெண்ணொருத்தியைக் கொற்றவைபோல, அலங்கரித்தனர். தெய்வக் கொற்றவையின், திருமுன்னே அவளைக் கொண்டுவந்து நிறுத்தினர். 'சாலினி' என அவளை அழைப்பர். தெய்வம் வரப்பெற்ற அச்சாலினி — கணவனுடன் அங்கிருந்த, கண்ணகியைக் கண்டு, ஆவேசமாய்:

கணவனோடு இருந்த மணமலி கூந்தலை
இவளோ கொங்கச் செல்வி குடமலையாட்டி
தென் தமிழ்ப் பாவை செய்தவக் கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய
திருமா மணியெனத் தெய்வமுற்று உரைப்ப

இவ்வாறு எல்லோரும் அதிசயப்படுமாறு சாலினி கூறினாள். கண்ணகியின் எதிர்காலம் எத்தகையது என்பதை, சாலினி வாக்கு இங்கே எடுத்துக் காட்டுகிறது. கொங்கு நாட்டின் தெய்வமாய், குடமலை நாட்டினை ஆளத்

தக்க செல்வியாய், பாண்டிய நாட்டின் பாவையாய், தமிழ் நாட்டின் பத்தினித் தெய்வமாய்க் கண்ணகி விளங்கப் போகிருள். அன்றியும், அவளது வாழ்வறியப் போகும் வையகத்திலே, திருமாமணியாய்த் திகழப்போகின்ருள் என்று கூறுகின்ருள். முன்பு கானுறை தெய்வத்தால் கண்ணகியின் கற்பிற்கு முதன்மை தந்த இளங்கோ, தெய்வம் வரப்பெற்ற சாலினி வாக்காலும், அதை வெளிப்படுத்தி உறுதி யாக்குகின்ருர்.

இத்தகைய சாலினியின் சொற்களைக் கேட்ட கண்ணகியோ, தன் வாழ்வில் இதற்குமுன் இவ்வாறு தன்னை இத்துணை உயர்வு தோன்றப் பிறர் பேசக் கேட்காத புத்துணர்விற் பிறந்த எண்ணத்தில், சாலினி ஆவேசமாய் மயங்கி இவ்வாறு கூறினுள் என்றே சொல்லுகிருள். 'தன் புகழ் கேட்டார் தலை—நிலம் நோக்கும்' என்பர். அவ்வாறே கோவலன் முதுகுபுறத்தே போய்க் கண்ணகி மறைந்து கொண்டு, நாணத்தால் நிலம் நோக்கி, புன்முறுவல் பூத்து நிற்கின்ருள்.

கொற்றவை கோவில் முன்னே, பலவகைக் கூத்துகள், சிறப்புகள் நிகழ்ந்தன. கடும்பகல் வேளையில் நெடுந்தூரம் போவதால், கண்ணகிக்கு வரும் துன்பங்களை அறிந்த கோவலன், கவுந்தி அடிகளை அணுகி நிலவிலேயே இனிப் பயணம் தொடங்கலாம் என்றுகூற, அவரும் உடன்படுகின்ருர். அவ்வாறே மூவரும் வழி நடந்து பார்ப்பனச் சேரிவந்து அடைந்தனர். கோவிலின் புறத்தே வந்து தங்கினர். காலைக் கடன்களை முடித்துவர நினைத்த கோவலன், கண்ணகியையும் கவுந்தி அடிகளையும் அங்கே அமர்த்திவிட்டுத் தானொரு நீர்த்துறையை நாடிச் சென்ருன். இந்நிலையில் அந்தணன் ஒருவன் கோவலனைச் சந்திக்கின்ற காட்சியொன்றைக் கவி இங்கே காட்டுகிருர்.

அவ்வாறு காட்டுதற்கு முன்பே, மூவரும் பார்ப்பனச் சேரி வந்து தங்கினர் என்று, இச்சந்திப்பு நிகழப் போவதற்கு இயைபான பின் புலனை, முன்னே காட்டி நிறுத்துவது சிறந்த நாடக உத்தியாகவே தோன்றுகிறது.

கோவலனைத் தேடி அலைந்து திரியும் கௌசிகன் என்ற அந்தணன், மாதவி, கோவலனுக்குக் கொடுத்தனுப்பிய கடிதத்தோடு அங்குவந்து சேர்ந்தான். அவன் முன்பு பலமுறை, கோவலனைக் கண்டு பழகியவனாயினும், மனம் வருந்தி உடல் நலிந்து, நிறம்மாறிக் கோவலன் காணப்பட்டதால், கோவலனோ அன்றி மற்றொருவனோ என்று துணிய முடியாதவாறு வருந்தினான் எனக் கூறப்படுகிறது. அந்தணனுக்குத்தான் இந்த ஐயப்பாடு எழுந்தது என்றால், கோவலனுக்காவது அவன் 'கௌசிகன்' என்று தெரிந்திருக்கவேண்டுமே என்று கேட்கப்படுமானால், கௌசிகனுக்குக் கோவலன் அடையாளம் தெரியாமல் போனதுபோல—பல காததூரம் நடந்து சோர்ந்த கௌசிகனையும் கோவலனுக்கு அடையாளம் தெரியாமல் போயிற்று என்று, சுலபமாகச் சொல்லி விடலாம். கௌசிகனுக்குக் கோவலனைத் தெரிந்தாகவேண்டும். கோவலனுக்கோ அவ்விதமில்லை. எனவே, கௌசிகன் தந்திரமொன்றால் தன் சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளக் கருதினான். அங்கே ஒரு பொய்கை காணப்படுகிறது. அதன் கரைகளில் பலவிதமான மலர்ச் செடிகள்; அவற்றிடையே படர்ந்து கிடக்கும் குருக்கத்திக் கொடியைப் பார்த்தான். அதன் மறுபெயர் மாதவி என்பது அவன் நினைவுக்கு வந்தது. உடனே அம்மாதவியை நோக்கி:

> கோவலன் பிரியக் கொடுந்துயர் எய்திய
> மாமலர்நெடுங்கண் மாதவி போன்றிவ்

அருந்திறல் வேனிற்கு அலர்களைந்துடனே
வருந்தினை போலுநீ மாதவி...

என்று கூறினன். கோவலன் பிரிவால் மிகுந்த துன்ப மடைந்த மாதவியைப்போல, வேனில் காலத்து வெயிலால் மாதவிக் கொடியே நீயும் வருத்தமடைந்தாய் போலும்! என்று கூறி, ஐயத்திற்குக் காரணமான, அந்த மனிதனை (கோவலனை)ப் பார்த்த வண்ணம் நின்றான்.

கேட்ட கோவலன், தன்னையும் தன் காதலியையும் இணைத்துப் பேசிய இவன் யார் என அறிந்து கொள்ள எண்ணினன். கௌசிகனை நோக்கி, நீ யார்? நீ, கூறிய தற்குப் பொருளென்ன? என்று கேட்டான். தன் னைத் தெரிந்துகொள்ள முயலும் கௌசிகனைத் தான் தெரிந்துகொள்ள விரும்பினன். கண்டேன் கோவலனை என்றும், தன் தந்திரம் எண்ணியவாறே பலித்தது என்றும், மகிழ்ந்த கௌசிகன், கோவலனை நோக்கி, ஐய, பெருஞ் செல்வனுகிய உன் தந்தை மாசாத்துவானும் உன் தாயும் பெறற்கரிய மாணிக்கத்தைப் பெற்றிழந்த நாகத்தைப் போல் அலமறுகிறார்கள். உறவினரோ, உயிர்பிரிந்த உடல் போல செயலிழந்து போயினர். ஏவலாளரோ, திசை திசை சென்று தேடுகின்றனர். புகார் நகரோ, அரசனைப் பிரிந்த அயோத்திபோலப் பொலிவிழந்து கிடக்கிறது எனக் கோவலன் பிரிவுக்குப் பிறகு, ஏற்பட்ட நிலையை எடுத்துக் கூறினன். எடுத்த எடுப்பிலே மாதவியைப் பற்றி, அவன் ஏதும் பேசவில்லை. தந்தையிலிருந்து தொடங்கி, படிப்படியாய் நகரமாந்தர் வரையிலும், ஏற் பட்ட சோக நிலையைக்கூறி அந்நிலையில், கோவலனிடம் காணும், முகபாவ உணர்ச்சிகளை ஊகித்து உணர்ந்து, இனி மாதவிபற்றிப் பேசலாம் என மேலே தொடர்கிறான். வசந்தமாலைவாயிலாய் அனுப்பிய கடிதத்தை, நீ மறுத்

தாய் எனக்கேட்டு, மாதவி உன்னையே நினைத்துக் கண்ணீர் பெருக்கினாள். அந்நிலையில் என்னை அழைத்துத் தன் மலர்க்கையால் எழுதிய கடிதத்தை, என்னிடம் தந்து 'என் கண்மணி அனைய கோவலரிடம் சென்று கொடுப்பாயாக' என்று கூறினாள். அதுவே இக்கடிதம், பெறுக எனக் கொடுத்தான்.

வாங்கிய கோவலன், மாதவியின் கூந்தல் இலச்சினையின் நறுமணம் கமழக்கண்டு பிரித்தான். ஆர்வமாய்ப் படித்தான் :

அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்
வடியாக் கிளவி மனம்கொளல் வேண்டும்.
குரவர் பணியன்றியும் குலப்பிறப் பாட்டியோடு
இரவிடைக் கழிதற்கு என்பிழைப் பறியாது
கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்
பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி

'அடிகள்' என்று தொடங்கி 'போற்றி' எனமுடிகிறது கடிதம். காதலி காதலனுக்கு எழுதுவது போலில்லை. அப்படியானால்? ஆம் : அடியவனொருவன் ஆண்டவன் முன்னே, தான்செய்த தவறை எல்லாம் மன்னிக்க வேண்டுகின்ற மனம் - ஏங்கி உருகுகின்ற உணர்வு - அப்படியே, வரிவடிவம் தாங்கி வந்திருக்கிறது.

கடிதத்தின் வாசகத்தை இனிப்பார்க்கலாம். 'பெரியோய்' நும் திருவடிகளைத்திசை நோக்கி வணங்கினேன். தெளிவற்ற சொல்லாயினும் பேதை உரைப்பதை மனங்கொள்ள வேண்டும். தங்கள் தந்தையும் தாயும், பருவத்தால் முதிர்ச்சி அடைந்தனர். தளர்ந்த பெற்றோர்க்கு, அவர்களது முதிர்ந்த பருவத்தில், தனயன் அருகிருந்து உதவக் கடமைப் பட்டவன். அதை நீங்கள் செய்ய முடியாமல் போய்விட்டது. மேலும் நற்குடிப்

பிறந்த கற்பரசியாகிய கண்ணகியோடு, இரவுப் பொழுதிலே, ஊர்விட்டு ஊர் போகும்படியாக, நான் தங்கட்குச் செய்த குற்றம்தான் என்ன? அதனுல் என் உள்ளம் அலமறுகிறது. அதனைத் தாங்கள் போக்க வேண்டும்.' இதைக் கோவலன் படித்தான். மாதவி குற்றமற்றவள் என்பதை உணர்ந்து கூறினன்.

மாதவி எழுதிய வாசகங்கள், கோவலன் உள்ளத்தை மாற்றிவிட்டன. மாயப்பரத்தையாக எண்ணப்பட்ட மாதவி, தூய உள்ளத்தினளாய்த் தோன்றுகிருள். கோவலன் கொண்ட தவருன எண்ணங்களெல்லாம், இதனுல் மறைந்துபோயின. என்ருலும், தான் கொண்ட குறிக்கோளிலிருந்து மாறவோ, தொடங்கிய பிரயாணத்திலிருந்து திரும்பவோ, கோவலன் எண்ணவில்லை. அம்மாதிரியான ஒரு சூழ்நிலையை, அக்கடிதம் உண்டாக்கும் நோக்கத்துடன் எழுதப்படவுமில்லை. அந்த எண்ணம் மாதவிக்கே இல்லை என்ருல், கோவலனுக்கு ஏற்பட நியாயமில்லை. இனித்தாம் கூடிவாழ்தல் இல்லை என்பதை இருவரும் மிகத்தெளிவாய் அறிந்திருந்தனர். மாதவி எண்ணமெல்லாம் கோவலர் உள்ளத்தில், தன்னைப் பற்றிய தவருன எண்ணமிருப்பதை, அகற்றியாக வேண்டும் என்பதில் அழுந்தி நின்றதை—ஆற்றல் வாய்ந்த சொற்கள் அப்பட்டமாய்க் காட்டி நிற்கின்றன.

கடிதத்தில், மாதவி கோவலனிடம், 'வடியாக் கிளவி மனங்கொளல் வேண்டும்' என்று கூறுகின்ருள். இவ்வாசகத்தால் பெண்டிர் பிழைபட மொழிதலுண்டு. அதைப் பொருட்படுத்தாது, கூறுவன கொள்ள வேண்டும் என்ற பணிவுடமை, தோன்ற காலத்தவறுகளை வெகுவாக, மாற்றிவிடுகிறது. என் பொருட்டு இல்லையாயினும், தாய் தந்தை மனைவி பொருட்டேனும், ஊர் விட்டு, ஊர் புறப்

பட்டிருக்கக் கூடாது என்பதை, வாசகங்கள் நன்கு அறிய வைக்கின்றன.

பெற்ருேரைப் பற்றிக் கோவலன் மனத்தில் கடமை தவறிய நிலையையும், தன் பிரிவால் அவர்கள் மனம் சோக முற்றுக் கிடப்பதையும் எண்ணத் தூண்டுகிறது, மாதவி கடிதம். ஆறுதலாக ஒரு கடிதம் எழுதி அவர்கட்கு அனுப்ப வேண்டும், என்று விரும்புகிருன் கோவலன். அதே கடிதத்தைப்பலமுறை படித்தான். தந்தை தாயர்க்கு ஒரு கடிதம் எழுதவேண்டும் என்ற எண்ணத்தோடு படித்தான். அந்த எண்ணத்திற்குப் பொருத்தமான சொற்களோடு—அவர்கட்கு, எழுதத்தக்க விதத்திலும், மாதவி கடிதம், அமைந்திருப்பதை நுட்பமாய் உணர்ந்து கொண்டான். எனவே தாய் தந்தையர்க்குத் தான் எழுதிய கடிதமாக, அதைக் கௌசிகனிடம் கொடுத்தனுப்புகிருன்.

கடிதத்தின் வாசகங்கள் பெற்ருேர்க்குப் பொருந்துவதைக் காண்போம். ‘தாய்தந்தையர்களே, நும் திருவடிகளைத் திசைநோக்கி அஞ்சலி செய்தேன். தெளிவில்லாத என் புன்சொற்களைப் பொறுத்தருள வேண்டும். நான் இரண்டு குற்றங்களைச் செய்துவிட்டேன். தளர்ந்த பருவத்தில் தங்கள் அருகிலிருந்து பணிவிடை செய்யாதது, கற்புடையாளோடு ஊர்விட்டு ஊர் வந்தது, இதனல் வந்த பிழையினை உணராது, என் பிரிவால் நேர்ந்த துன்பத்தை நீக்கவேண்டும்—இது உருக்கமான ஒரு மன்னிப்புக் கடிதமாகவே, மறு உருவம் அடைகிறது.

காதலி காதலனுக்கு எழுதிய கடிதம், காதலனின் பெற்ருேர்க்கும் அனுப்பத்தக்கவாறு, சொற்களை ஆராய்ந்து அறிந்து அமைத்திருக்கும் ஆசிரியரின் மேதை நம்மை வியக்கவைக்கிறது.

★

## 9. வைகைக்காட்சி

மாதவி அனுப்பிய கடிதத்தையே, பெற்ருேர்க்குத் தான் எழுதிய கடிதமாய்க் கௌசிகன் வாயிலாக அனுப்பிய கோவலன், கண்ணகியும் கவுந்தியுமிருக்கு மிடம் திரும்பினுன். அங்கு கொற்றவையின் வெற்றிச் சிறப்பை வியந்துபாடும் பாணருடன், அளவளாவினுன். அவர் கையிலிருந்த செங்கோட்டு யாழை வாங்கினுன். அரும் பாலேப் பண்ணை அற்புதமாய் மீட்டிப் பாடினுன். இசைக் கலேயிலே, கோவலனுக் குள்ள, ஈடுபாட்டை இச்சிறு நிகழ்ச்சி மீண்டும் நமக்கு நினைவுபடுத்திக் கதையிடையே ஓடுகிறது.

பின்னர் பாணர்களே நோக்கி 'மதுரை இங்கிருந்து இன்னும் எவ்வளவு தூரத்திலுள்ளது?' எனக்கேட்டான். அதற்குப் பாணர்கள்:

புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பின்
பொதியில் தென்றல் போலா(து) ஈங்கு
மதுரைத் தென்றல் வந்தது காணீர்
நனிசேய்த்(து) அன்று அவன் திருமலிமூதூர்

மதுரை, சமீபத்தில்தானுள்ளது. அதைத் தெற்றெனக் காட்டி நகர்ந்து வருகிறது தென்றல். மலர்க் காட்டிலே

புகுந்து, கொள்ளை கொண்ட மணத்தை எல்லாம் பரப்பி வருகிறது. பொதிகைத் தென்றலினும் புகழ்மிக்கது, இம்மதுரைத் தென்றல் என்று கூறுகின்றனர். 'கூடற்காவதம் கூறுமின்' என்ற கோவலன் சொற்களிலே, இன்னும் நெடுந்தூரத்தில் மதுரை உள்ளதோ என்ற சோர்விருப்பதை 'நனி சேய்த்து அன்று' (மிகத்தூரத்தில் இல்லை) என்ற பாணர் மறுமொழி, நீக்கிவைக்கிறது. அங்கிருந்து புறப்பட்ட மூவரும், வையையாற்றைவந்து அடைந்தனர்.

வையைக் கரையிலே நின்ற, கவின்தரு குரவம், வகுளம், கோங்கு, வேங்கை, வெண்கடம்பு, சுரபுன்னை, மஞ்சாடி, மருதம், பவளமல்லிகை, செருந்தி, செண்பகம், பாடலம் எனும் மரங்கள் உதிர்த்த மலர்கள், வையைப் பெண்ணின் பூந்துயிலாயின. குருக்கத்தி, செம்முல்லை, கொடிமல்லிகை படர்ந்து அப்பெண்ணரசியின் மேகலையாய் வளைந்தோடி அழகு செய்தன. ஆற்றிடைக் குறையின் எதிர் எதிரே காணப்படும் மணற்குன்றுகள், அவளது மார்பகமாய்க் காணப்பட்டன. அவள் முல்லை மலர்களால் சிரித்தாள். கயல் கண்களால் பார்த்தாள். கருமணற் கூந்தலை, ஒய்யாரமாய் நெளியவிட்டு, பாண்டிய நாட்டின் குலக்கொடியாய்க் காட்சி தந்தாள்.

அருவி முல்லை அணிநகை யாட்டி
விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கயல் நெடுங்கண்
விரைமலர் நீங்கா அவிர் அரல் கூந்தல்
உலகுபுறந் தூட்டும் உயர்பேர் ஒழுக்கத்துப்
புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி

அலங்கரித்துவிட்ட மணப் பெண்போல — நாணத்தால் நெளிந்து ஒதுங்கிச் செல்லுகிறாள். கண்ணகிக்கு, வர

விருக்கும் கரைகாணுத்துயருக்கு, முதல் முதல் கண்ணீர் வடிக்கின்ற உறவை, வைகைப் பெண்ணுக்குக் கவி வழங்கி இருக்கின்றார். பூவாடையால் தன்னுடல் முழுவதையும் போர்த்தியவளாய்த் தன் கண்ணிலிருந்து, வழியப் போகும் கண்ணீரை மறைத்துக் கொள்ளுகிருள்.

> தையற் குறுவது தானறிந் தனள்போல்
> புண்ணிய நறுமலர் ஆடை போர்த்துக்
> கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கிப்
> புனல்யாறு அன்றிது பூம்புனல் யாறென
> அனநடை மாதரும் ஐயனும் தொழுது

எனப் பேசப்படுகிறது. தண்ணீர் மட்டும் ஓடிவரும் ஆறல்ல; புனலும், மலரும் பொருந்திய ஆறு என்று சொல்லி, கண்ணகியும் கோவலனும், கைகூப்பி வைகையை வணங்கினர். மரத்தாலான புணையொன்றிலே, மூவருமேறி மதுரையை, வலம்வந்து உள்ளே புகுந்தனர். அகழிகளிலும், தடாகங்களிலும் குவளையும், ஆம்பலும், தாமரையும் நெருங்கிக்கிடந்து, காற்றிலே அசைந்து மெல்லிய அலையிலே படிந்து ஆடின. இக்காட்சி கோவலனுக்கு வரவிருக்கும் கொடுந்துயர் நினைந்து நடுங்குவது போலத் தோன்றியது. மலர் இருந்து, தேன் பருகும் வண்டுகள் பாடின. அவைகளும் பரிவுகாட்டி அழுவது போலப் பட்டன. மதில்களில், ஆங்காங்கே, கொடிகள் பெருமிதமாய்க் காற்றில் ஆடின. அவை கண்ணகி கோவலனை நோக்கி 'இங்கே உங்கட்குத் துன்பம் காத்திருக்கிறது வாராதீர்கள்' என முன்னறிந்து கையசைத்துத் தடுப்பது போலக் காட்சி தந்தன.

> கருநெடுங் குவளையும் ஆம்பலும் கமலமும்
> தையலும் கணவனும் தனித்துறு துயரம்

ஐய மின்றி அறிந்தவை போலப்
பண்ணீர் வண்டு பரிந்தினைங் தேங்கிக்
கண்ணீர் கொண்டு காலுற நடுங்கப்
போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
வாரலென் பனபோல் மறித்துக்கை காட்ட

மதுரை நெருங்க நெருங்கக் கோவலன் கொலைக்களம் நோக்கி வருவதாய், இளங்கோ உணருகிருர். மலர் சுமந்து வரும் வைகை, கண்ணீர் மறைப்பதாய், மலர்க்கூட்டம் அஞ்சி நடுங்குவதாய், வண்டினம் வருந்தி அழுவதாய், மெல்ல மெல்ல, குறிப்பாய்த்தம் உள்ளுணர்வை வெளியிட்ட ஆசிரியர், 'ஆரெயில் நெடுங்கொடி வாரல் என்பன போல், மறித்துக்கை காட்ட' என்பதன் மூலம், குறிப்பாய்ச் சொல்லி இனிப் பயனில்லை. காரியம் மிஞ்சிவிடும் போல் தெரிகிறதே என உள்ளுணர்ச்சியால் உந்தப்பட்டு கைகொண்டு வழிமறிப்பதுபோல், கொடி ஆடக் காட்டுகிருர். சோகத்தைப் படிப்படியாய் உயர்த்துகின்ற அற்புதமான காட்சி இது.

கோவலனும் கண்ணகியும் புகார் நகர் விட்டு, நீங்க நீங்க, இன்பத்தை இனிக்காண முடியாததாகவே கவி காட்டுகிருர். அவ்வாறே, மதுரையை நோக்கி நெருங்க நெருங்கத் துன்பத்தை நோக்கி வந்து கொண்டிருப்பதாகவே, நம்மை உணரவைக்கிருர்.

இத்தகைய உணர்வை எழுப்பிவரும் கண்ணகியும் கோவலனும் கவுந்தி அடிகளோடு மதுரையின் கீழ்த்திசை வாயிலுக்குச் சமீபத்திலுள்ள புறஞ்சேரியில் வந்து தங்கினர். இரவுப் பொழுதை, அங்கே கழித்தனர். பொழுது புலர்ந்தது. புள்ளினங்கள் இன்னிசைபாடி ஆர்த்தன. பொய்கையிலே பூத்த தாமரை மலர்கள் இதழ்விரிந்து மலர்ந்தன.

கோவலன், காலைக் கடன்களை முடித்துக்கொண்டு வந்து கவுந்தி அடிகளை வணங்கினான். வழி நடைச் செலவில் இதுகாறும், கண்ணகிக்கும் தனக்கும் துணியாகி வந்த கவுந்தி அடிகளை விட்டுப்பிரியும் நேரம், நெருங்கி வருவதை உணர்ந்தான். மதுரை நகருக்குப் போய்த் தக்க இடமறிந்து வரும்வரை, கவுந்திபால் கண்ணகியை விட்டுச் சென்றுவர எண்ணினான். அதைப்பணிவு தோன்ற, உருக்கமாய் வெளியிடுகின்றான்.

'தவத்திர்' நல்லொழுக்க நெறியினின்றும் யான் பிறழ்ந்துவிட்டேன். அதன் காரணத்தால், கண்ணகி வருந்தவும், முன்பின் அறியாத நாடுவந்து துன்புறுவதுமான, சிறுமையை அடைந்துவிட்டேன். பழமை வாய்ந்த இந்நகர் வணிகர்களுக்கு, என் நிலைமை கூறிவரும் வரை, தங்கள் திருவடி நிழலிலுள்ள கண்ணகிக்கு, ஒரு தீங்குமுண்டாகமாட்டாது என்று கூறினான்.

'நெறியின் நீங்கியோர் நீர்மையே னுகி
நறுமலர் மேனி நடுங்குதுயர் எய்த
அறியாத் தேயத்து ஆரிடை உழந்து
சிறுமை யுற்றேன் செய்தவத்தீர் யான்
தொன்னகர் மருங்கின் மன்னர் பின்னேர்க்கு
என்னிலை யுணர்த்தி யான்வருங் காறும்
பாதக் காப்பினள் பைந்தொடி யாகலின்
ஏதம் உண்டோ அடிகள் ஈங்கு

கவுந்தி அடிகள் முதன்முகல், கோவலனைக் கண்ட நிலையில் 'நீங்கள் இவ்வாறு வரக் காரணம் என்ன?' என்று கேட்டபோது, கோவலன் பொருள் ஈட்டும் நோக்கம் ஒன்றுமட்டுமே என்று மறுமொழி கூற, முன்பு பார்த்தோம். அதே கோவலன் உருக்கமான சில சொற்களால்

உள்ளம் திறந்து இங்கே பேசுகிறான். நெறியின் நீங்கிய தன் நிலைமையை, நன்குணர்ந்துவிட்டான். தான் செய்த பிழையால், தன் மனைவியும் வருந்த நேர்வதுகண்டு வருந்துகிறான். கணிகையொடு களித்த வாழ்வால் இல்லறம் வழுவிய, நிலைமையையும், நல்லகுடிப் பிறந்தார், மனைவியோடு நாடுவிட்டு நீங்காமையையும்—தான் நீங்கியதையும் எண்ணி வருந்தி ஏங்குகிறான்.

இந்நிலையில் கவுந்தி அடிகள், ஆறுதலாகச் சில சொல்லவிரும்பியவராய், நீ சென்ற பிறப்பில் அறஞ் செய்தவன். அதுகாரணமாய் அறிவும் செல்வமும் பெற்றாய். ஆனால், தீவினையும் செய்துள்ளாய். அதன் பயனால், உற்றார் உறவினரைவிட்டு, கானகத்தில் காதலியோடு நடந்து வருந்த நேர்ந்தது. அயோத்தியை ஆளவேண்டிய இராமன் காடு புகுந்து, அங்கு காதலியைப் பிரிந்து வருந்தினான். நளன், ஒரு அரசனாக இருந்தும், கானகத்தில் காதலியைக் கைவிட்டுச் சென்றான். நீயோ அவ்வாறு துன்பமெதுவும் இன்றி, மனைவியைப் பிரியாது இருக்க நேர்ந்தது எவ்வளவோ உயர்ந்ததாகும். வருந்துவதை விட்டொழித்து, மதுரை நகருக்குள் சென்று இல்லறமிருந்து தொழில் அறம்புரிதற்கு, ஏற்ற இடமறிந்து வருக என்று பணித்தார்.

இந்திரனுடைய அணிகலப் பேழையைத் திறந்து வைத்ததுபோல, அணியும், மணியும் நிறைந்த அங்காடிகள்; பாலாவிபோன்ற மெல்லிய ஆடைகள் நிறைந்த கடைவீதிகள்; மதுரைமாநகரின் வனப்புவாய்ந்த இத்தகைய பல வீதிகளைக் கோவலன் கண்டு களித்தான். கண்ணகி, கவுந்தியடிகள் இருக்குமிடம் நாடித் திரும்பினான். மாடலன் என்ற அந்தணன் ஒருவன் அப்பொழுது அங்குவந்து சேர்ந்தான். இவன் கோவலனை நன்கறிந்த

வன். கலை நலங்கள் நிரம்பியவன். குமரிக்கடலில் நீராடி வடக்கு நோக்கி வருபவன்; வழியிடையில் பூஞ்சோலையில் இளைப்பாற எண்ணினன். கண்ட கோவலன் வரவேற்று வணக்கங் கூறினன். எதிர்பாராத இடத்தில், கோவலனைக் காண நேர்ந்தமை பற்றி, மாடலனுக்கு வியப்புண்டாயிற்று.

மாடலனது மனத்திரையிலே, கோவலனது சென்ற காலச் சிறப்பியல்புகள், படம் படமாய் ஓடிக்கொண்டிருந்தன. அதில் ஒரு காட்சி: மாதவி பெற்றெடுத்த மகளுக்கு எப்பெயர் இடுவது எனச் சிலர் கேட்டபோது, கோவலன், 'இடுக்கண் வந்த காலத்துத் தன் முன்னோரைக் காத்த, குலதெய்வமான மணிமேகலா தெய்வத்தின் பெயரை இடுக!' எனக் கூறினன். குழந்தைக்குப் பெயர் சூட்டப்பட்ட நாளில், கோவலன் அள்ளி வழங்கிய கொடைப்பொருள்களும், அவற்றின் உயர்வும் தொடர்ந்து அவன் உள்ளத்தே தோன்றின. பழமரம் நாடிப் பறவைகள் வருவதுபோல—இரவலர் பலர், கோவலனை நாடி வந்தனர். அவர்களுள் வந்த அந்தணன் ஒருவன், மதங்கொண்ட யானையின் பிடியிலே அகப்பட்டுக்கொண்டான். அவன் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. அந்நிலையில், மற்றவர்கள் ஐயோ என வாயளவில் இரக்கப்பட்டனர். கோவலன் தன்னுயிரைப் பெரிதென மதியாது, கதுமெனப் பாய்ந்து, யானையின் வாயிலிருந்து அந்தணனை விடுவித்தான். இத்தகைய கருணையும் வீரமும் கலந்த காட்சி ஓடி மறைந்தது.

கீரியைக் கொன்ற பார்ப்பனிக்குத் தீவினை நீங்கப் பெரும் பொருளை, அள்ளி வழங்கிய வள்ளன்மை—நரகன் ஒருவன் உயிருக்குத் தன் நல்லுயிரைத்தர எண்ணிய துணிவு—பிறர்பால் கண்டறியாத இவையெல்லாம்

கோவலன் வாழ்விலே சாதாரணமாய் நிகழ்ந்தவை. காலத்தைப் பின்னேக்கிப் பார்த்தபோது, அந்தணன் உள்ளத்தே, இவை யெல்லாம் ஓடி ஓடி மறைந்தன. குணம் நாடி அவற்றின் மிகை நாடியபோது, கோவலன் மனிதகுல மாணிக்கமாய்த் தோன்றினன். அவன் செய்த பிழை யெல்லாம் சிறிதே என்று, அந்தணன் எண்ணினன். இப்பொழுது வாய்விட்டு அவனே கூறுகிருன்: 'இம்மையில் யானறிந்தவரையில், நீ நல்லனவே செய்துள்ளாய்! கண்ணகியோடு நீ வருந்த நேர்ந்தது, முற்பிறப்பில் நீ செய்த தீவினைப் பயன் போலும்.' இவ்வாறு அந்தணன் கோவலன் நிலைமைக்கு இரக்கப்படுகின்ருன். இதைப் போலவே கவுந்தி அடிகளும் முன்பு கூறியது, இங்கே நினைக்கத் தக்கதாகும்.

இப்பகுதிகளில், ஆசிரியர் இளங்கோவடிகள், கோவலனது இணையற்ற பல மேலான பண்புகளை மாடலன் மூலமாய்ப் பேசவைக்கிருர். தொடக்கத்தில் அவனது பருவம், அழகு, புகழ் இவைகளை மிகச் சில சொற்களால், ஒருவரது உருவத்தைச் சில கோடுகள் போட்டுக்கொண்டு வந்து நிறுத்துவதுபோல—காட்டிய கவி, பிறகு, வண்ணம் தீட்டி முழு அழகையும் முடித்துக் காட்டுவதுபோல—இப்பகுதிகளில் கோவலனின் குணநலங்களை எல்லாம் வைத்து விவரிக்கக் காணுகிருேம்.

கோவலன்—அருங்கலை விநோதன் என்பதை மாதவியோடு வாழ்ந்த வாழ்விலும், துன்பத்திலும் அச்சுவையுணர்வை, மறந்தவனல்ல என்பதைக் கொற்றவை கோயிலில், பாணர் கையிலிருந்த யாழை வாங்கி மீட்டிய செயலிலும், நாம் காண நேர்ந்தது. இங்கொன்றும், அங்கொன்றுமாகச் சில பண்புகளைச் சில சொற்களால், கூறுவதால் மட்டும், கோவலன் ஒரு காவியக் கதையின் முதல் தலைவ

ஞகிவிட முடியாது. இதைத் தவிர்க்கின்ற முறையிலேயே, தொகுப்பான இச்சம்பவங்கள் விரிக்கப்பட்டு, இப்பொழுது மாடலனுல் பாராட்டப்படுகின்றன. என்ருலும் கதைத் தலைவன், சால்புகளைக் காட்டிலும் தலைவியின் குணம் செயல்களே, மிகுதியாகக் கதையை நடத்திச் செல்லுகின்றன என்பது பெரியதொரு உண்மையாகிறது.

மாடலன் பேசிய பின்னர், கோவலன் தான் கண்ட தீய கனவுபற்றிக் கூறுகிருன். கோவலன் வாழ்வின் சோகமுடிவை அக்கனவு தெள்ளத் தெளியக் காட்டுகிறது. இங்கிலையிலும் வந்த குறிக்கோளிலிருந்து, நாடு திரும்ப எண்ணவில்லை என்பது, கோவலன் கொண்ட உறுதியைக் காட்டப் போதுமானதாகி விடுகிறது.

மதுரை நகரில் தங்குவதற்குமுன், கண்ணகியை எங்கு இருக்கச் செய்வது எனக் கோவலன் எண்ணிய போது, ஆயர்குலத்து மாதரி என்பாள் அங்கு வந்தாள்.

## 10. அடைக்கலம்

'நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்'—என்பது சிறந்ததொரு அனுபவ மொழி. அதற்கேற்பவே, கண்ணகியை யாரிடம் அடைக்கலமாக ஒப்படைக்கலாம் என்று கவுந்தி அடிகள் நினைத்தபோது, ஆயர் குலத்து மாதரி என்பவள் அங்கு வந்தாள்.

மலர்போலும் விழியமைந்த, 'இயக்கி' என்ற பெண் தெய்வத்திற்கு, பாற்சோறு படைத்துத் திரும்பிய மாதரி, கவந்தி அடிகளைக் கண்டு, கை குவித்து, வணங்கினாள். பசுக்களை, நோயிடமிருந்து பாதுகாத்து, பசும்புல்லும் நன்னீரும் வைத்து, வளர்த்து அப்பசுவின் பயனை எல்லோர்க்கும் அளிக்கும் ஆயர்களுடைய வாழ்க்கை யானது, தீமையற்ற நல்லறமுடையது. அத்தகைய அறமேற்கொண்டவள் மாதரி. அதனால் குற்றமற்றவள். ஆண்டினால் முதிர்ந்தவள், செம்மையான இதயப் பண்பும், இரக்கமுமுடையவள். எனவே, மாதரியிடம் கண்ணகியை அடைக்கலமாக விடுவதே, சாலச் சிறப்புடையதாகும் என்று கவுந்தி அடிகள் எண்ணினார்.

அடிகள் மாதரியை நோக்கி: 'இம்மடந்தை கணவனது தந்தையின் பெயரைக் கேட்டால், இந்நகரத்து வணிகர்,பெரும்பொருள் பெற்றது போல அகமிகமகிழ்வர். இவர்களை விருந்தாக ஏற்று உபசரிப்பர். அவ்வாறு

ஏற்கும் வரையில், கண்ணகியைத் தக்க ஒருவர் காப்பில் வைக்கவேண்டும். எனவே, உன்னிடமே இவளை அடைக் கலமாகத் தருகின்றேன், கொள்க! என்று கூறினர்.

கண்ணகி, கோவலனது உயர்குடிப் பிறப்பையும், கண்ணகியாரது உயர்தனிச் சிறப்பையும் நன்கறிந்த கவுந்தி அடிகள், அடைக்கலமாக அமர்த்தத் தகுதியான ஒருவரைத் தெரிந்து காண்பதில் மேற்கொண்ட கருத் துக்கள் முன்பே கூறப்பட்டன. அவற்றுள், மாதரியின் இயல்பனைத்தும் துருவி ஆராயப்பட்டன. மாதரி பிறந்த குலம் எத்தகையது? செய்தொழில் என்ன? அதன் சிறப் பென்ன? அவற்ருல் வரத்தக்க, நலங்கள் எவை? என்று ஆராய்ந்து கண்ட வினக்களுக்கு அறியப்பட்ட விடை களால், கவுந்திக்கு மனநிறைவு ஏற்பட்டது. இத்தகைய அடிப்படையான எண்ணங்களிலிருந்து மாதரியின் பண்பு களைச் சீர்தூக்கி ஆராய்ந்த பிறகே, கவுந்தி அடிகள் 'தீதிலள்' என்றும் 'முதுமகள்' என்றும் 'செவ்வியள்' என்றும் 'அளியள்' என்றும் கூறுவாராயினர். வெறும் சொல்லடுக்குகள் என்று பிறர் ஒதுக்கிவிடாதவண்ணம், இவற்றின் பொருள் நுட்பங்கள் தோன்ற, இளங்கோ வரிசைப்படுத்தி வழங்கியுள்ளார்.

தனிமனிதனைப்பற்றி அறிய விரும்புவோர் சுருக்கமாக முதலில் கேட்கும் கேள்வி, 'அவன் நல்லவனு? கெட் டவனு?' என்பதே. இதற்கு விடை தருவோர், அவனது குணத்தையும், குற்றத்தையும் ஆராய்ந்து, எது அளவால் மிகுதியாக இருக்கிறதோ அதையே கூறவேண்டும். அத் தகைய முடிவுக்குக் கவுந்தி அடிகள் வரும்போது மாதரி, 'தீதிலளாய்' எண்ணப்படுகிருள். அன்றியும், மாதரியின் பருவ முதிர்ச்சி நிறைந்த வாழ்க்கை அனுபவம், உயர்ந்த

மனப் பண்பு முதலியவற்ருலும், கண்ணகியை அடைக் கலமாகப் பெறத்தக்க சால்புகள் அவளிடம் உள்ளன.

கொடுப்போர், பெறுவோர் தகுதியை உணர்ந்தோம். அடைக்கலமாகக் கொடுக்கப்படும் பொருளின் சிறப் பையும் கூறினல்தால் இக்கருத்துக்கள் முழு உருவம் பெறும். அன்றியும் மாதரி இதை அறிய வேண்டிய கடப் பாடு உடையவளாகிருள். மாதவக் கவுந்தி இதுபற்றி மாதரிக்குச் சொல்லுகிருர்.

இங்கு,
என்னெடு போந்த இளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையில் காதலன் தனக்கு
நடுங்கு துயர்எய்தி நாப்புலர வாடித்
தன்துயர் காணுத் தகைசால் பூங்கொடி
இன்துணை மகளிர்க்கு இன்றி அமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது,
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்

'என்னெடுவந்த கண்ணகியின் அழகிய பாதங்களை நிலமகளும் அறிந்ததில்லை. சூரியனது கடுமையான வெப் பத்தால், வழியிடையே துன்பமடைந்த, கணவன் — அவன் பொருட்டுக் கண்டவர்களும் நடுங்கத்தக்க, துய ரடைந்தாள் கண்ணகி. நாவும் உலரும்படியாகக் கடும் வெயிலில் நெடுந்தூரம் வழி நடந்து, அத் துன்பத்தை ஒரு சிறிதும் வெளிப்படுத்திக் கூருமல் கணவனைத் தொடர்ந்து வந்தாள். தம்மை மணந்த கணவரது இன்ப துன்பத்தில், துணையாகும் மகளிர்க்கு மிகவும் இன்றியமையாத கற்பா கிய கடமையை மேற்கொண்ட, கண்ணகியாகிய இத் தெய்வமல்லாது, பிறிதொரு தெய்வத்தை நான் கண்ட தில்லை' என்று கூறுகிருர் கவுந்தி அடிகள்.

வீடுவிட்டு, வெளியே வந்தறியாத கண்ணகி, நகர் விட்டு, நாடுவிட்டு, உற்ருர் உறவினரையெல்லாம் விட்டு வந்திருக்கிருள். ஏன்? எல்லாம் கொண்ட கணவனின் பொருட்டாகத்தான். கண்ணகியின் மனத்திட்பத்தை இந்நிகழ்ச்சிகளில், நாம் நன்கு காணுகிருேம்.

'கற்புக்கடம் பூண்ட இத்தெய்வமல்லது பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்' எனப் பேசும் கவுந்தியோ, வாழவும் சபிக்கவும்வல்ல துறவி. முன்பு கோவலனிடம், இல்லறத்தார்க்கு வரும் துன்பங்கள் எதுவும், துறவறத் தவர்க்கு இல்லை எனப் பேசி இல்லற தருமத்தை, ஓரளவு குறைவுபடப் பேசியவர். இத்தகைய மனே நிலையிலுள்ள மாதவக் கவுந்தி, இல்லறத்தில் இருக்கும் ஒரு இளம் பெண்ணைக் கற்புடைத் தெய்வமாய் — அதிலும் — கண் கண்ட தெய்வமாய் எண்ணிக் கூறிய சொற்கள்—கடந்த காலத்தைக் கருதிக் கூறியவையல்ல. எதிர்காலத்தை முன்னுணர்ந்து கூறிய மணி மொழிகளாகவே தோன்று கின்றன.

அடைக்கலமாகத் தரப்படும் கண்ணகியின் உயர்வை, மாதரி உணர்ந்துவிட்டால், அவளைக் காப்பதில் கண்ணும் கருத்துமாய், இருப்பாளல்லவா? அதை உணர்ந்தும், எதிர் காலம் அதை முற்றிலும் உணர்த்தப் போவதை நினைந்தும் கவுந்தி இவ்வாறு பேசினுள். இதன் பின்னர், இத்தகைய கண்ணகியை அவள் எவ்வாறு போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்பதைக் கூறுகிருர்.

மங்கல மடந்தையை நல்நீர் ஆட்டி
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டி
தேமென் கூந்தல் சின்மலர் பெய்து
தூமடி உடிஇத் தொல்லோர் சிறப்பின்

ஆயமும் காவலும் ஆயிழை தனக்குத்
தாயும் நீயே யாகித் தாங்கிங்கு

இதே கவுந்தி அடிகள் 'மண்மகள் அறியா வண்ணச் சீறடி' எனக் கண்ணகியின் மலரடிகளை, முன்பு புனைந்துரை பற்றியோ, உபசாரமாகவோ கூறினரில்லை. அவள் இட்ட வேலையைச் செய்ய அத்தனை ஏவலாளர் என்பதை உணர்த்தவே கூறப்பட்டது. இந்நிலையில் வாழ்ந்த கண்ணகி, உறவாக எவருமில்லையே என்று எண்ணி விடாதவாறு—நீ உதவ வேண்டும் என்று கூறுகின்றார். கண்ணகியைத் தூய நீராட்டி, கயல்போலும் நெடிய கண்களிலே மை எழுதி, கருநாகக் கூந்தலிலே வண்ண மலர் சூட்டி, தூய ஆடைகட்டி, தாயாய்த் தனை வளர்த்த செவிலியாய் தன்னரிய தோழியாயிருந்து நீ இவளைக் காப்பாற்றுவாயாக எனக் கூறுகிறார்.

கண்ணகியின் இளமையையும், அனுபவமற்ற இயல் பனைத்தையுமே இளங்கோவடிகள் முன்பு பலமுறை பேசியவராயினும், மாதரியின் பொருட்டுக் கவுந்தி மூலமாய் இங்கும் பேசியாகவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. ஆகவே தான் நீராடுதல், மையிடுதல், பூச்சூட்டுதல், ஆடை அணிதல்—இத்தனை செயல்களுக்கும் கண்ணகி பிறர் உதவியை நாடவேண்டிய வளாகவே இருக்கின்றாள் என்பதைப்புலப் படுத்தப் பார்க்கின்றோம்.

இனிக் கண்ணகியை அடைக்கலமாகப் பெறுவதால் வரத்தக்க நலத்தையும், கவுந்திகூறுகிறார். தவத்தோர் தந்த அடைக்கலம் மிகப்பேரின்பம் தரும் என்று சொல்லி, இதனை வலியுறுத்த எண்ணி தேவனொருவனது வரலாற்றை, எடுத்துக் கூறி, கண்ணிலும் அருமையாய்க் கண்ணகியைக் காத்துவருமாறு வாழ்த்தி வழியனுப்புகிறார்.

பருவத்தின் மலர்ச்சியைக் காட்டுகின்ற அங்கங்கள், பசுமையான மூங்கிலைப் போன்றதோள்கள், நாணல் முளை போன்ற வெண்மயமான பற்கள், இத்தகைய இயற்கை யோடு பிறந்த அழகும், நிறைந்த அறிவும் பொருந்திய கண்ணகியைக் கோவலனோடு அழைத்துக் கொண்டு மாதரி வழிநடந்தாள்.

கண்ணகியின் அழகு நலங்களை, இளங்கோ இவ்வாறு இங்கு பேசுவதற்கு ஒரு காரணமுண்டு. வழி நெடுகி லும், தெருமருங்கிலும் செல்லும் பெண்டிர் கண்ணகியின் கன்னிளமைத் திறத்தில் வியப்படைந்து — வந்த செயல் மறந்து—பின் தொடர்ந்தமை பற்றியே, இவ்வாறு பேசப் பட்டது.

பொழுது சாய்கின்ற மாலைப்பொழுதிலே, பசுக்கள் தம் கன்றுகளை நினைந்து 'அம்மா' என்று குரல் எழுப்பி வந்தன. அவைகளை மேய்த்துவரும் ஆயர்கள், குழல்ஊதிப் பின்தொடர்ந்து வந்தனர். ஆட்டிடையர், ஒரு தோளில் செம்மறிக் குட்டியையும் மறு தோளில், கோடறியையும் சுமந்துவர, இடைச்சியர் பின்வந்தனர். இயற்கையும், இனிமையும் கைகோர்த்து வரும் கிராமியக்காட்சி.

கோவலனும், கண்ணகியும் மாதரியோடு வரு கின்றனர். ஊருக்குப் புதியவராகவும், அழகுக்கு ஒரு எடுத்துக் கட்டாகவுமிருக்கும் இருவரையும் ஆயர்கள் வியப்பொடு பார்த்த வண்ணம் நிற்கின்றனர்.

★

# 11. ஆயர்பாடியில்

அந்தி புகுந்த நேரத்திலே, ஆயர்பாடிக்கு வந்த கோவலனும், கண்ணகியும் மாதரியின் செம்மண் பூசிய, சிறு மனையொன்றிலே குடிபுகுந்தனர். வேலி சூழ்ந்த அப்புது மனையிலே வெப்பம் தணிக்கவல்ல காவணம் போடப்பட்டிருந்தது.

இயற்கை வாழ்வொடு, எளிய வாழ்க்கை மேற்கொண்ட மாதரி, கண்ணகி கோவலனை உபசரித்தாள். கவுந்தி அடிகள் கூறியவாறு கண்ணகிக்கு ஆயர் பெண்டிருடன் கூடிப் புதுப்புனலாட்டிப் புதுமலர் சூட்டினள்; கண்ணகியின் இயற்கை அழகின் முன்னே, மதுரை நகரத்து மகளிரின் செயற்கை அழகு எல்லாம், நாணிக் கோணி மறைவதை, எண்ணினள். கண்ணகிக்கு, அருமை மகள் ஐயை என்பாளை அறிமுகமாக்குகிறாள். இட்ட பணிசெய்ய இவளையே கண்ணகிக்குப் பணிப் பெண்ணாக அன்புரிமை பற்றி அமர்த்துகிறாள்.

கடுமையான வழிநடந்த, கண்ணகி கோவலனை வழித் துன்பமறியாது அழைத்து வந்த கவுந்தி அடிகள் பின்னும் தம் கடமையைக் குற்றமறச் செய்தவராகிறார். அதை

மாதரி வாக்கால் நாம் நன்கறிகின்ருேம். 'மாதவத்தாட்டி, வழித்துயர் நீங்கி, ஏதமில்லா இடந்தலைப்படுத்தினள்' என்பதே அவ்வாக்கு. பாதுகாப்பான ஒரு இடத்திற்கு நீங்கள் இருவரும் வந்துவிட்டீர்கள். உன்னைப் பற்றி உன் கணவருக்கு இனிக் கவலைவேண்டாம் என மாதரி பேசுகின்ருள்.

மதுரை நகர் மகளிரோடு, கண்ணகியின் அழகை ஒப்பிட்டு, அவளது இயற்கை அழகு கண்டு வியந்து பேசுகிருள். நாகரிகத்தால் சிறந்த மதுரை மகளிரை ஒப்பிட்டது மேலும் தனிச் சிறப் புடையதாகிறது. ஆயர் பாடியின் சிறுமனை யொன்றிலே கண்ணகியும், கோவலனும் தங்கினர் என்று கூறுவதைப் பார்க்கிலும் 'செம்மண் பூசிய சிறுமனை' என்பதனுல் இயற்கை —எளிமை தோய்ந்த காட்சிபுலனுகக் காட்டப்படுகிறது. நம் நினைவிலிருந்து அச்சிறுகுடில், அகலாவண்ணம் முன்னுள்ள ஓலை வேய்ந்த காவணத்தைத் தாம் மறவாது குறிப்பது சிறிய அமைப்பொன்றையும் ஆசிரியர் மறந்ததில்லை என்பதைக் காட்டுகிறது.

பொழுது சாய்ந்து கொண்டு வருவதை அறிந்த மாதரி இரவுப் பொழுதிலே, இவர்கள் உணவு உண்ணமாட்டார்கள் என்பதை அறிந்தாள். பக்கத்தே நின்ற ஆய்ச்சியர்களை ஏவி, உணவுக்கு வேண்டிய காய் கறிகளையும் சமைத்தற்குரிய புதிய மட்கலங்களையும் கொண்டுவருமாறு பணித்தாள்.

கோளிற் பாகல் கொழுங் கனித் திரள்காய்
வாள்வரிக் கொடுங்காய் மாதுளம் பசுங்காய்
மாவின் கனியொடு வாழைத் தீங்கனி

சாலி அரிசி தம்பால் பயனொடு
கோல்வளை மாதே கொள்கெனக் கொடுப்ப

ஆய்ச்சியர் கொண்டுவந்து கொடுத்த பொருள்களிவை. கோளிற்பாகல் கொழுங்கனித்திரள் காய் என்பது பலாக் காய். அதற்குத்தான் எத்தனை அடைமொழி, பாருங்கள் 'பூவாது காய்க்கும் மரமுமுள' என்று கூறுவர். அப்படிப் பூக்காது காய்க்கும் மரமே, பலாமரம். இது சொல்லாமலேயே அள்ளி வழங்கும் வள்ளல்களைப் போன்றது. பலாவைப் பக்குவமாகக் கறிசெய்தால், சுவையில் அதற்கு இணை ஏது? இளம்பிஞ்சு கறிக்குதவாது என்பதை அடைமொழிகளால் உணரவைத்து, முற்றிவிளைந்த வெள்ளரிக்காய் கூறப்படுகிறது. கொம்மட்டி மாதுளை ஆகிய இவைகள் கறி சமைக்கக் கொண்டுவந்த காய்கள். இக்காய்களோடு மட்டுமல்லாமல் கனியும் கொண்டுவந்து கொடுத்தனர். அவை, மாங்கனியும் வாழைத் தீங்கனியுமாகும். காயும் கனியுமல்லாது, தீம்பாலும், நறுநெய்யும், சோறு சமைக்கச் சாலி அரிசியும் தந்தனர். இவைகளைப் பெற்ற கண்ணகி சமையலுக்கு ஆயத்தமாகிறாள். அரிமணையில் வைத்துக் கறிகளை அரிகிறாள். மலர்முகத்தில் வியர்வை முத்துமுத்தாய் அரும்பின. செவ்வரி படர்ந்த கண்கள் சிவந்துபோயின. அடுக்களைக்கு வந்தாள். புகை படிந்த இடங்கள் அவளை முகம் மாறிச் செல்லத் தூண்டின. அதேசமயம் ஐயை ஓடிவந்து, வைக்கோலைப் பற்றவைத்து நெருப்பை மூட்டினாள்.

மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்
கொடுவாய்க் குலத்து விடுவாய் செய்யத்
திருமுகம் வியர்த்தது செங்கண் சேந்தன
கரிபுற அட்டில் கண்டனள் பெயர
வையெரி மூட்டிய ஐயை தன்னொடு

கண்ணகி தன்கைத்திறமை தோன்றக் காதலனுக்கு அடி சில் ஆக்கினாள். கண்ணகிக்குச் சமையல் தொழில் மிகவும் புதியது என்பது இங்கே நயமாகக் கூறப்படுகிறது. காய் கறிகளை அரிந்த அவளது மெல்விரல்கள் சிவந்தன என்றார். இது முன் அநுபவ மின்மையைக் காட்டுகிறது. முகம் வியர்த்தது என்றார். மேலும் அவளுக்குப் பயிற்சி யில்லை என்பதாயிற்று. கைவிரல் சிவந்தன என்றவர் கண்ணும் சிவந்தன என்கிறார். அது எப்படி? பசுங்காயை அரிந்தால் கண் சிவக்குமா? இல்லை. கரிபடிந்த அடுக்க ளையை, அவள் சென்று கண்டாளல்லவா? கண்ட கண்ணும் சிவந்தது. அடுக்களையை அவள் பார்த்ததில்லை என்பதை, இதனினும் சிறக்க எவ்வாறு பேச முடியும்?

கண்ணகியின் எண்ணத்தைக் கணப்பொழுதில் கண்டுகொண்ட ஐயை, உதவிக்கு ஓடோடி வருகிறாள். ஐயையின் உதவியோடு கண்ணகி, சமையலை முடித்தாள். பலாக்காய், வெள்ளரிக்காய், கொம்மட்டி, மாதுளங்காய் இவைகளை அரிந்து, ஒரு பொறியல், ஒரு கூட்டு ஒரு பச்சடி ஆக்கினாள். இது நம்முடைய ஊகமல்ல. கொம்மட்டி மாதுளங்காய், புளிக்கறி ஆக்குவதற்கே உரியது. எனவே அது பச்சடியாகிறது. வெள்ளரிக்காய் கூட்டுச் செய்யும் பக்குவமுடையது. வேறெதுவும் செய்யச் சுவையில்லா தது. பலாக்காய் கூட்டும் செய்யலாம்; பொறிக்கறியும் செய்யலாம். வெள்ளரிக்காய் கூட்டாக ஆக்கப்பட்டதால், பலாக்காய் பொறியலாகத்தான் செய்திருக்கவேண்டும் என்பது பெறப்படும்.

நாம் உணவை மூன்று பகுதியாக்கி உண்ணுகிறோம். நெய்ச்சோறு, குழம்புச் சோறு, தயிர்ச்சோறு என்பன. கூட்டுக்கறியை, நெய்ச்சோற்றுடனும், பொறியலைக் குழம்புச் சோற்றுடனும், பச்சடியைத் தயிர்ச் சோற்றுட

னும் உண்ணத்தக்கவாறு கண்ணகி பக்குவம் செய்த அருமைப் பாட்டைக்காணுங்கள்! உணவின் சுவை வேறுபாடுகளுக்கு ஏற்பக்கறிகளின் சுவையும் பொருந்திக் கலக்கவேண்டும். அதனால் பிடி உணவு மிகுதியாக உண்ண விருப்பமுண்டாகும். கணவனை உவப்புடன் உண்ணவைப்பதில் தமிழகத்து மகளிர்கள் சிறந்தவராவர். கண்ணகிபால் அவ்வியல்பிருத்தல், அதிசயமொன்றுமில்லையல்லவா?

பனையோலையால் வனப்புடன் பின்னப்பட்ட தடுக்கொன்றிலே, கணவனை அழைத்துக் கண்ணகி அமரச் செய்தாள். தண்ணீர் தெளித்து மலர்க் கையால் தரையினை மெழுகினள். அதன் மீது குமரி வாழையிலையை விரித்தாள். உணவு பரிமாறினள். 'உண்க, உண்க' என்று பக்கமிருந்து பரிவுடன் கணவனை உபசரித்தாள்.

தாலப் புல்லின் வால்வெண் தோட்டுக்
கைவன் மகடூஉக் கவின்பெறப் புனைந்த
செய்வினைத் தவிசில் செல்வன் இருந்தபின்
கடிமலர் அங்கையில் காதலன் அடிநீர்
சுடுமண் மண்டையில் தொழுதனள் மாற்றி
மண்ணக மடந்தையை மயக்கொழிப் பனள்போல்
தண்ணீர் தெளித்துத் தடக்கையால் தடவி
குமரி வாழையின் குருத்தகம் விரித்து
அமுதம் உண்க அடிகள் ஈங்கு

என்ற சொல்லிலும் செயலிலும் பிரித்தறிய முடியாத பேரன்பை நாம் காணுகிறோம். பாத்திரமொன்றால் கண்ணகி தண்ணீரை எடுத்துத்தரையை மெழுகுகிறாள். கவி இவ்வாறு பொதுவாக, 'பாத்திரம்' என்று கூறிப்போகலாம். அவ்வாறின்றி, 'சுடுமண் மண்டை' என்பதன் மூலம் மட்

கலம் என்றுணர வைத்தார். அவள் முன்பெல்லாம் பொன்னிலும், வெள்ளியிலும் ஆக்கிய கலங்களை உபயோகப் படுத்தியவள் என்பதைக் கவி இங்கே உய்த்துணர வைத்தார். பொற்கலமெடுத்த கண்ணகி மட்கலமெடுக்க நேர்ந்ததற்குக் கவி வருந்திய உணர்வோடு பிறந்த சொற்களில் பேசுவது, நம் உள்ளத்திலும் புகுந்து கழிவிரக்கம் காட்டுகிறது. நிலத்திலே, நீரைத் தெளித்து மெழுகினுள் கண்ணகி. அச்செயலில் நாம் அனுதாபங்காட்டுமளவுக்கு ஏதும் காணப்படவில்லையல்லவா? இதோ பாருங்கள்! நிலமகளின் மயக்கத்தை நீக்குபவள்போல, நீர் தெளித்து நிலத்தை மெழுகினுள் என்றபோது, எங்கோ மறைந்து கிடந்த நமது அனுதாபமும் கவியின் சோக உணர்வுடன் வந்து கலந்துவிடுகிறது. கண்ணகியின் கணவன் மதுரை நகரிலே, மன்னிக்க முடியாத கொடுமைக்கு — கொலைக்கு ஆளாவதை நிலமகள் ஒருகணம் நினைத்தபோது, நடுநடுங்கி உடல் மயங்கி விழுகிருள். அந்நிலையில் மயக்கம் தெளிவிப்பாள் போலக் கண்ணகி, தண்ணீர் தெளித்ததைக் கவி காட்டுவது சோகமயமாய் அமைந்திருக்கிறது.

இத்தகைய சோகக் காட்சியைக் கவிஞன்தான் தன் கற்பனையில் காணுகிருன். ஆனுல், இந்தக் காட்சியை— மனைவி கணவனுக்கு அமுது படைக்கின்ற நிகழ்ச்சியைக் கண்ணுக்கு நேராகச் சாளரத்தின் வழியே — வெளியிலிருந்தும் காண்கின்றனர். அவர்களே மாதரியும் அவள் மகள் ஐயையுமாவர். கவிஞனது கற்பனையிலே சோகமயமாய்ப்பட்ட இக்காட்சி, இவர்கள் கண்ணிலே இன்பச் சித்திரமாய்ப்படுகிறது. என்ன அற்புதம்! இதோ பாருங்கள் :

ஆயர் பாடியின் அசோதை பெற்றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணும் நம்பி ஈங்கு

'அன்று ஆயர்பாடியில் யசோதை பெற்ற—கண்ணனே இங்கு உணவுண்ணும் நம்பி' (கோவலன்) என்று பரவசப் படுகின்றாள் மாதரி.

பல்வளைத் தோளியும் பண்டுநம் குலத்துத்
தொழுனை யாற்றினுள் தூமணி வண்ணனை
விழுமம் தீர்த்த விளக்குக் கொல்லோ

அன்று காளிந்தி யாற்றிலே கண்ணனைத் துயர் தீர்த்து மகிழ்வித்த இராதைதானே இக்கண்ணகி என்று வியப்படைகிறாள் ஐயை. வயது முதிர்ந்த மாதரி, கோவலன் அழகைப் பருகி கண்ணன் அழகோடு ஒப்பிட்டுப் பரவசப் பட்டது, தாய்மை நிலையில் பொருந்துமாறு காட்டப் பட்டது. கோவலன் அழகை ஐயை பாராட்டினால், அது அவளது கன்னிளமைப் பருவத்துக்கு ஒரு மாசாகி விடுமெனக் கவி நினைத்தார். அதனால், இராதையோடு கண்ணகி அழகை ஒப்பிட்டு, ஐயை வியக்குமாறு இவ்வுரையாடல் அமைந்திருப்பது நம்மை உவப்படையச் செய்கிறது.

இவர்கள் காணும் இக்கண்கொள்ளாக் காட்சியிலே இராதை கண்ணனுக்குத் துயர் துடைத்தது போல கோவலனுக்கு வரும் துன்பத்தைக் கண்ணகியால் மாற்ற முடியவில்லையே! கவிஞனின் கற்பனைக் காட்சிதான் நிறைவேறப்போகிறது.

கோவலன், கண்ணகி இருவரையும் தம்மொடு வைத்து உறவு பாராட்டுகிறாள் மாதரி. கோவலனை மகனாகவும், கண்ணகியை மருமகளாகவும் எண்ணுகிறாள்

ஆமாம்! தன் மகள் ஐயை என்பாளை, கோவலனுக்குத் தங்கையாக்கி — கண்ணகிக்கு நாத்தனாராக்கி மனமகிழு கின்றாள். மேலான தாய்மை உள்ளத்தின் எடுத்துக் காட்டாய், மாதரி இங்கே உலவுகிறாள். நூலைப் போலச் சேலை என்பார்களே — அதுபோல — தாயைப்போல ஐயையும் காணப்படுகிறாள்.

இனி, கண்ணகியையும், கோவலனையும் காண்போம். உண்டு எழுந்த கோவலனுக்குக் கண்ணகி பரிவுடன் வெற்றிலை மடித்து வழங்கினாள். வழங்கிய கண்ணகியைக் கோவலன் அருகழைத்தான். பொங்கிவரும் அன்பை இனி மறைக்க முடியாத நிலையிலே வெளியிட்டு உருக்க மாய்ப் பேசுகிறான்.

கல்லதர் அத்தம் கடக்க யாவதும்
வல்லுந கொல்லோ மடந்தைமெல் அடியென
வெம்முனை அருஞ்சுரம் போந்ததற் கிரங்கி
எம்முது குரவர் என்னுற் றனர்கொல்
மாயங் கொல்லோ வல்வினை கொல்லோ
யானுளம் கலங்கி யாவதும் அறியேன்

கல்லிலும் கானலிலும், துயர்தரும் காட்டிலும், கண்ணகியின் மெல்லிய மலரடிகள் எவ்வாறு கடந்து, வழி நடந்தனவோ என எண்ணி, அலமறும் தாய் தந்தையர்களைக் கோவலன் நினைத்துப் பார்க்கிறான்; புலம்புகிறான். மாயமோ, முன்செய்த தீவினையோ என்று காரணமறிய மாட்டாது கலங்கினான். சிறிது நேரம் மௌனமாய்க் கழிந்தது. கோவலன் அறிவு தெளிவடைந்து வருகிறது. சிறிது சிறிதாக அவனுக்குக் காரணமும் புலனாகிறது.

வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்

பொச்சாப் புண்டு பொருளுரை யாளர்
நச்சுக் கொன்றேற்கு நன்னெறி யுண்டோ

என்று கூறுகிறன் கோவலன். கடந்த காலத் தன் வாழ்க்கையை எண்ணிப் பார்க்கிறன். 'பயனில் சொல் பேசுவோர், பரத்தையர், இழிந்த இயல்பினர் என்போரது கூட்டத்தில் உழன்று, உயிரினும் உயர்ந்த, ஒழுக்கத்தை இழந்த எனக்கு, நன்னெறியுமுண்டோ?' என்று சொல்லித் தேம்புகிறன். தனக்குத்தானே தேடிக்கொண்ட இழிவுகளைக் கூறினுன். இனி:

இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்
சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்
வழுவெனும் பாரேன் மாநகர் மருங்கீண்டு
எழுகென எழுந்தாய் என் செய்தனை

என்று பிறருக்குத்தான் செய்த தவறுகளைக் கூறுகிறன். 'முதிர்ந்த பருவத்தில் தாய் தந்தையர் அருகிருந்து உதவவும் தவறினேன். அதனுல் அவர்களை மனம்வருந்த வைத்தேன். சிறு பருவத்து நினக்கும் தீமை செய்தேன். நகர் விட்டு நாடுவருதல் தவறெனவும் எண்ணுது வருக நீ என்றவுடன், வந்தாய், எத்தகைய அரியகாரியம் செய்தாய்!' என்று பேசித் தன்னைத்தானே, ஆராய்ந்து தன்னைத் தானே பழித்துக்கொள்ளுகிறன். கண்ணகியின் மேலான பண்புகள், மேலோங்கி நிற்பதைக் குறிப்பாய்க் காட்டிப் பேசுகிறன்.

இதையெல்லாம் பொறுமையுடன் கேட்டு வந்த கண்ணகி, கோவலனுடன் இதற்கு முன்பு இவ்வாறு பேசியதில்லையே என்று நாம் வியக்குமாறு உள்ளத்திலே, குமுறிக்கொண்டிருந்த எண்ணங்களைக் கூறுகிருள்; வருத்தங்களைப் புலப்படுத்துகிருள். கடுஞ்சொல் அறியாத

மனைவி, ஒரு சொல் கூறினால் அது எவ்வாறு இருக்கும் என்பதற்கொரு எடுத்துக்காட்டாகவும் காணப்படுகிறது.

கணவனுடன் இல்லறமிருந்து செய்ய வேண்டிய நல்லறங்களைச் செய்யக்கொடுத்து வைக்கவில்லையே என்பது அவளுடைய முதல் ஏக்கம். வந்த விருந்தினர்களை வரவேற்கத் தான் உபசரிக்கக் கணவர் அருகிலில்லையே என்பது மாற்ற முடியாத பெரு வருத்தம். தன் வாழ்வு முழுதுமே சூனியமாக மாறி விடாமல், அப்போதைக்கு அப்போது வந்து ஆறுதல் கூறிய மாமனும் மாமியும், அன்பு சொரிந்த பெருந்தன்மை—அப்போதெல்லாம், தான் வருந்துவதாய் நினைத்து அவர்கள் வருந்துதல் கூடாதே என்பதற்காக, முகத்தளவில் பிறந்த தன் புன்முறுவலைக் கண்டு — மேலும் அவர்கள் வருந்திய நிலை — ஆகிய இவைகளை எல்லாம் எடுத்துப்பேசி — இதற்கெல்லாம் காரணம் கோவலனே என்பதைச் சொல்லாமலே உணர வைத்தாள் கண்ணகி. இறுதியாக 'போற்றா ஒழுக்கம் புரிந்தீர்' என்றொரு குற்றச்சாட்டைக் கோவலன் மீது காட்டி முடிக்கிறாள். இதற்குப் பிறகு, உள்ளத்திலே பெருகியிருந்த பெருஞ்சுமை தன்னையறியாது நழுவியது போல — ஒரு நிலையடைகிறாள் கண்ணகி.

இதைக்கேட்ட கோவலன் மனமுருகிப் பேசுகிறான்:

என்னொடு போந்தீங்கு என்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி'

என்று பலவாறு பாராட்டுகிறான். கோவலன், கண்ணகியை இங்கு அழைக்கின்ற சொற்கள் எல்லாம் ஆழ்ந்த பொருள் நலமுடையனவாகவே காணப்படுகின்றன.

இங்கே, கவி கோவலனுக்கிக் கண்ணீர் வடிக்கின்றார். இனி மீண்டும் அவன் அவளைச் சந்திக்கப் போவதே இல்லை; இந்நிலையில் பிரிகிறான். அவன் என்ன முயன்றும், சுரந்து ததும்பும் கண்ணீரை மறைக்க முடியவில்லை. ஆம் கண்ணும் கண்ணீருமாய் வழி நடக்கின்றான். ஒரே சோகம்.



# 12. விதி வகுத்த வழி

கண்ணகியின் காற்சிலம்புடன், ஆயர் பாடியை விட்ட கன்ற கோவலன், மதுரைமாநகரின் மணிமாட வீதியிலே, சோகம் புகுந்த-உள்ளமும், தளர்ந்த நடையுமாய் நடந்து வருகிருன்.

சிலம்பை விற்றுப் பெற்ற பொருளால் வாணிபம் செய்து, இழந்த பொருளை ஈட்ட நினைத்த எண்ணம் திட்டமாயிருந்து அவன் செய்களிலெல்லாம் வெளிப்பட்டு வருகிறது. என்ன துன்பம் வரினும், எது தடையாயினும் கொண்ட உறுதியினும், மாருத நோக்கம் கோவலனைப் பிடர்பிடித்து அழைத்துவர நாம் காணுகிறோம். இல்லையாஞல் இத்தகைய துன்பத்திற்கு ஆட்படாமல், சுலபத்தில் தன் நாட்டிற்குத் திரும்பித் தன்னை மன்னிக்கத் தயாராயிருக்கும் தந்தையையும் தாயையும் மகிழ்வித்து, மனைவியுடன் தானும் மகிழ்ந்திருக்கலாமல்லவா? அந்த எண்ணம் கோவலனுக்கு முற்றிலுமில்லை என்பதைக் கவி, நன்கு காட்டக் காணுகிறோம்.

கண்ணுற் கண்டதைக் கையால் ஆக்கவல்ல, கம்மாளர் நூறுபேர் புடைசூழ, சட்டை அணிந்து கோல் கைக்கொண்ட தலைமைப் பொற்கொல்லன் அதோ வந்து

கொண்டிருக்கிருன். வழிவந்த கோவலன் தன் உள்ளத்திலே, பாண்டியனிடம் வரிசை பெற்ற பொற்கொல்லன் இவனுகுமெனக் கருதினுன். 'காவலன் தேவிக்கு, ஆவதோர் காற்கணி, நீ விலை இடுதற்கு ஆதியோ என'— அவனருகு சென்று 'அரசனது பெருந்தேவி அணியத் தகுதியான காற்சிலம்பு ஒன்று உளது. அதை உன்னுல் மதிப்பிட இயலுமா?' என்று கேட்கிருன்.

இவ்வினுவுக்கு விடைதருகின்ற பொற்கொல்லனுடைய சொற் சாதுரியத்தைப் பாருங்கள்! அடியேன் மகளிரது காலணியை, விலைமதித்தற்கு அறியேன். என்ருலும் வேந்தர் முடிமுதலிய அணிகளை ஆக்குபவனுவேன்.

அடியேன் அறியே னுயினும் வேந்தர்
முடிமுதற் கலங்கள் சமைப்பேன் யானென
கூற்றத் தூதன் கைதொழுது ஏத்த

கைகுவித்துப் பணிவு காட்டுகிருன். மாயமானுக மாரீசன் வடிவமெடுத்தது போல, எமதூதன் வஞ்சகப் பொற்கொல்லன் வடிவிலே, கோவலன் உயிரைக் கொண்டு போகவந்ததாகக் கவி எண்ணவைக்கிருர். ஆனுல் கோவலனே, கும்பிடப்போன தெய்வம் தம்மிடம் வந்ததாய் எண்ணுகிருன். 'அரசமாதேவி அணியத்தக்க சிலம்பை நீ மதிப்பிட வல்லையோ' என வினவுகிருன். இவ்வினுவிலே சிலம்பின் உயர்வில், பெருவிலையில், கோவலன் கொண்டுள்ள எண்ணத்தின் அளவுக்கு, ஆசிரியர் நம் உள்ளத்திலும் உணர்வு தூண்டி வைக்கிருர். இது வியப்பல்ல. சிலம்பு என்பது காலில் அணியுமொரு சாதாரணமான ஆபரணமாகும். அது அரசமாதேவி அணியத் தக்கதாய், விலை கொடுத்து வாங்க வல்லதாய் இருக்கிறது என்ருல், கண்ணகியின் மற்றை அணிகலங்கள் நம் மதிப்பிற்குள் அகப்படாத வியப்பிற்கு உரியதாகின்றன

அல்லவா? இவ்வியப்பைப் பலமடங்கு பெருக்கத்தக்க அளவிலே பிறிதொரு நிகழ்ச்சியின் மூலம் பின்னே காட்ட நாம் காண்போம்.

கோவலன் தன் சிலம்பின் உயர்விலே, விலை மதிப்பிலே கொண்ட எண்ணத்தின் அளவை, பொற்கொல்லன் தன் திறமையிலே கொண்டுள்ள நம்பிக்கையின் உயர்வில் வைத்துத்தான் ஒப்பிட்டு உணர முடியும். இல்லையானல், பொற்கொல்லன் 'மகளிர் அடிகளில் அணியும் ஆபரணத்தை மதிப்பிட அறியேன், வேந்தர் சூடும் முடி முதற் கலங்கள் ஆக்க அறிவேன்' என்று பேசுவானு? அடியின் இழிவையும், முடியின் உயர்வையும் ஒப்பிட்டுப் பேசுவதன் மூலம் தன்னையே ஒருபடி உச்சிக்கு, உயர்த்திக் கொள்ளுகிறுன். கோவலன் உள்ளத்திலே நம்பிக்கையை நன்ருக விதைத்து விடுகிருன். கோவலன் எதிர்பார்ப்பதைத் தான் எளிதாக்கித் தருவதாய் நடிக்கிருன்.

கூற்றத் தூதன் கைதொழுது வணங்கினுன் என்றவுடனேயே, இனி யாதாகுமோ என்ற அச்சம் புயல்போல் எழுந்து விடுகிறது. சிறிதும் ஐயப்படாத கோவலன் சிலம்பை எடுத்துக் காட்டுகிருன். பசும் பொன்னிலே, வயிரமும், மணியும் வைத்து இழைக்கப்பட்டுக் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவருகிறது. சிற்ப நயங்களும், சித்திர நுணுக்கங்களும் நன்கமைந்து காட்சி தருகின்றன.

மத்தக மணியொடு வயிரம் கட்டிய
பத்திக் கேவணப் பசும்பொற் குடைச்சூல்
சித்திரச் சிலம்பின் செய்வினை யெல்லாம்
பொய்த் தொழிற் கொல்லன் புரிந்துடன்நோக்கி.

சிலம்பின் சித்திர வேலைப்பாடுகளைக் கண்டு வியப்பவன் போல, விலைமதிப்பதாய்ப் பாவனை காட்டிக் கோவலன் மீது, எவ்வாறு பழி சுமத்தலாம் என எண்ணமிடுகிருன்

பொற்கொல்லன். கோவலனை நோக்கி, 'இச் சிலம் பின் தகுதியைப் பார்த்தால், அரசமாதேவியே அணி யத்தக்கதா யுள்ளது. எனவே அரசரிடம் சென்று யான் திரும்பி வருமளவும் எனது இச்சிறு குடிலின், அருகே இருங்கள் என்று கூறிச் செல்லுகிறான். செல்லும் வஞ் சகப் பொற்கொல்லன் தன் சிந்தையிலே இவ்வாறு எண் ணுகிறான்.

கரந்துயான் கொண்ட காலணி ஈங்குப்
பரந்து வெளிப்படா முன்னம் மன்னற்குப்
புலம்பெயர் புதுவனில் போக்குவன் யான்

பாண்டி மாதேவியின் சிலம்பு — நான் வஞ்சனையால் கவர்ந்து கொண்ட அச்சிலம்பு என்னிடமே உள்ளது என்பது வெளிப்படு முன்பே ஊருக்குப் புதிய, வேற்று நாட்டவனுகிய இவன் மூலமாய் என் கள்ளச்செயலை மறைப்பேன் என்று துணிந்த, உள்ளமும் கள்ளமுமாய் அரண்மனையினுள்ளே புகுந்தான்.

இங்கே, பொற்கொல்லனது துணிச்சலைக்கண்டு நாம் வியக்க வேண்டியதில்லை. முடிபுனைந்து கோலோச்சும் பாண்டியனின் சிலம்பையே, காரண மகப்படா முன்ன மேயே, கவர்ந்துகொள்ள நினைத்த துணிவிலே, ஆயிரத்தில் ஒன்ருகுமா கோவலன் மீது சுமத்த எண்ணிய பழி? நினைத்துப்பாருங்கள்.

யாரையும் எப்படியும் ஏமாற்றி விடலாம் என்ற துணிவிலே வளர்ந்த இவன், ஒரு நயவஞ்சகத் துரோகி யாகவே இக்காவியக் கதையிலே, உலாவுகிருன். துரோகி என்று சொல்வதைப் பார்க்கிலும் பசுத்தோல் போர்த்த புலி என்று சொல்வதே பொருந்தும்.

தான் வஞ்சகமாய்க் கவர்ந்த பாண்டியனது சிலம்பை, மறைத்துவிட அவன் முன்னிலையிலேயே, மாய்மாலம் செய்யத் திட்டமிடுகிருன். முடிவிலே, தான் வெட்டிய குழியிலே விழுந்து மடிகிருன். பாண்டியனையும் விழப் பண்ணுகிருன். பாண்டிய நாட்டின் தலைநகரையே படுநாசத்திற்கு உள்ளாக்கி, பாண்டிய மரபுக்கே மாருத பழியை உண்டாக்கி விடுகிருன். இத்தகைய வஞ்சகத்தின் வடிவமான பொற்கொல்லன், அரண்மனையினுள்ளே வந்துகொண்டிருக்கிருன்.

அப்பொழுது, அத்தாணி மண்டபத்திலே, அரசன் முன்னிலையிலே, நாடகமகளிர் ஆடலும் பாடலும் நிகழ்த்தினர். அக்கலையிலே, அரசன் ஆர்வமாய்த் தன்னை மறந்தான். அவனது ஈடுபாடு, அரசமாதேவிக்கு ஐயத்தை வளர்த்துவிட்டது. மன்னவன் உள்ளம் இம்மகளிர் வசப்பட்டது என எண்ணினுள். தலைநோக்காடு என்று காரணம் சொல்லி, அரசனை விட்டு மெல்ல அந்தப்புரத்திற்கு நகர்ந்தாள். காவலன் உள்ளத்திலே காமக்கனல் எழுந்தது. அவ்வெழுச்சியில், அருகிலிருந்த அமைச்சரையும் அறிவால் சிறந்த சான்ருேர்களையும் மறந்தான்; எழுந்தான். அந்தப்புரம் நாடி அதிவேகமாய் வந்துகொண்டிருக்கிருன்.

இதுதான் தக்க சமயம் என எண்ணிய வஞ்சகப் பொற்கொல்லன் வணங்கினுன். நிலத்திலே விழுந்து எழுந்தான். மீண்டும் கைகுவித்து வணங்கினுன். அரசே! கன்னக்கோலும் கவைக்கோலுமில்லாமல், மந்திரத்தின் துணையாலே, வாயில் காப்போரை மயக்கிச் சிலம்பு கவர்ந்த கள்வன், என் சிறு குடிலிலே இருக்கிருன் என்று

கனிவாகப் பணிமொழி பேசிக் காவலனை நொடிப் பொழுதில் நம்ப வைத்துவிட்டான்.

> வினைவிளை காலம் ஆகலின் யாவதும்
> சினையலர் வேம்பன் தேரா ணகி
> ஊர்காப் பாளரைக் கூவி ஈங்குஎன்
> தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
> கன்றிய கள்வன் கைய தாகில்
> கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கு

அரசனுணை இதோ பிறந்துவிட்டது. இதுகாறும் அஞ்சி அஞ்சிக் குறிப்பாய்க் கூறிவந்த ஆசிரியர் இனி அவ்வாறு சொல்ல இயலாதவாறு அரசனுணை பிறந்து விட்டது! மறைவாகப் பேசிவந்ததை மன்னனுணை வெளியாக்கி விட்டது! ஊர் காப்பாளரைக் கூவி என்றவுடனேயே, இளங்கோவிற்குக் காரணம் நாடுவதில், எண்ணம் புகுந்து விட்டது! முதிர்ந்த தீவினை முற்றிலும் வெளிப்படும் காலம் வந்தது என்கிருர். அதனுல் பாண்டியன் சிறிதும் ஆராயாது 'இவன் கூறிய கள்வன் கையிலே தேவியின் சிலம்புளதாயின் கொன்று அச்சிலம்பைக் கொண்டுவருக' என்று ஆணையிட்டான். 'கொல்ல, அச்சிலம்பைக் கொணர்க' என்று கூறவேண்டியவன், சொற்சோர்வு படுகிருன். அதன் விளைவால் 'கொன்று அச்சிலம்பு கொணர்க' என்று கூறுகிருன். என்ன கொடுமை!

சொல்லின்கண் சோர்வு படுதலால் வரும் தீமைக்கு இந்நிகழ்ச்சி, அரியதொரு எடுத்துக் காட்டாக முடிகிறது. அரசனிடமிருந்து இத்தகைய ஆணை பிறந்ததற்கு மற்ருெரு காரணமும் உண்டு. மனைவியின் (அரசமா தேவியின்) ஊடலைத் தவிர்க்கக் கள்வன் கவர்ந்துபோன சிலம்பு, ஒரு காரணமாகும் என நினைத்தான். அதனுலே

தான் அவன் ஆணையில் விரைவும், ஒரு வேகமுமிருக்கக் காணுகிறோம்.

இத்தகைய ஆணைபிறந்தவுடனேயே, விரித்த வலையிலே மன்னன் விழுந்ததாய் எண்ணி மகிழ்ந்தான் பொற்கொல்லன்.

அரசனாணைக்குத் தலைவணங்கிப் பணிவுகூறித் திரும்பினர் கொலையாளர்கள். கொலையாளர்களுடன் கோவலன் இருக்குமிடம் நோக்கிவந்த வஞ்சகப் பொற்கொல்லன் கோவலனை அணுகி, 'இவர்கள் அரசனாணையால் சிலம்பு காண வந்தவர்கள், அதைக் காட்டுக' என்று கூறினான். காட்டிய சிலம்பைக் கையிலே வாங்கினான். தனியாக அழைத்துச்சென்று சிலம்பின் பெருமையெல்லாம் கொலையாளர்களுக்கு எடுத்துச் சொல்லி, இது அரசனது சிலம்புடன் ஒத்திருப்பதைக் காட்டி, நம்பிக்கை ஏற்படுத்த முயன்றான். இந்நிலையில்:

இலக்கண முறைமையின் இருந்தோன் ஈங்கிவன்
கொலைப்படு மகனலன் என்றுகூறும்
அருந்திறல் மாக்களை அகம் நகைத்து

பொற்கொல்லன் என்ன முயன்றும், கொலை செய்தற் குரியவனாகக் கோவலனை, அக்கொலையாளர்களால் எண்ண முடியவில்லை. தான்விரித்த வலையிலிருந்து இவர்கள் தப்பி விடுவார்களோ என எண்ணிய பொற்கொல்லன் மேலும் முயலுகிறான்.

நம்பிக்கை வரத்தக்க நிலையிலே கள்வர் இயல்புகளை எல்லாம் நயம்படக் கூறுகிறான். அஞ்சத்தக்க அதிசயிக்கத்தக்க, நிகழ்ச்சிகளை யெல்லாம் அள்ளி விடுகிறான். பூனைபோலிருந்து புலியாகமாறும் கதைகளை எல்லாம் வைத்துக் கதைக்கிறான். சிறிது சிறிதாக அவர்கள்

மனம் தன் பக்கம் நோக்கிச் சாய்வதை அறிந்தான். 'கள்வனிடமுள்ள மாயமருந்திலே நீங்கள் மயங்கி, மன்னனுணையை மறந்தால், அவனது கைவாள் உங்கள் குருதி குடிக்கும். என்ன சொல்கிறீர்கள்?' எனப் பயங்காட்டினுன் வஞ்சகப் பொற்கொல்லன்.

அதை ஆமோதித்த ஒருவன் 'ஆமாம், நானும் கள்வர் மாயத்தைக் கண்ணெதிரே கண்டவன். இவன் சொல்வது முற்றிலும் உண்மை' என்றுன். அதே சமயத்தில்,

கல்லாக் களிமகன் ஒருவன் கையில்
வெள்வாள் எறிந்தனன்

ஆம். அறிவற்ற மூடனெருவன் வாளை வீசினுன். அவ்வீச்சிலே, கோவலன் தலைவேறு-உடல்வேருய் விழுந்தது. அதேசமயத்தில் பாண்டியன் செங்கோல் வளைந்தது. அறமகள் 'ஓ' என்று அலறினுள். நிலமகள் உடலிலே இரத்தவெள்ளம் பரவியது. மதுரைநகர் வீதிகளிலே, சோக இருள் படர்ந்தது. ஊழ்வினை அதை மௌனமாய்க் கண்டு மகிழ்ந்தது.

இளங்கோவடிகள், பண்டை விளைவாகி வந்த வினையால் பாண்டியனின் வளையாத செங்கோல் வளைந்தது என்று நமக்குக் காரணம் கூறுகிருர்.

நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகிதன் கேள்வன் காரணத்தால்—மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை.



## 13. ஆயமகளிர் ஆடிய குரவை

மதுரை நகரிலே, மன்னவன் மாளிகையிலே நாளும் முழங்கும் காலைமுரசம் வழக்கம்போல், இன்றும் முழங்குகிறது. இம் முழக்கம் அருகிலுள்ள ஆயர்பாடியிலும் கேட்கிறது. கேட்ட மாதரிக்கு, அரண்மனைக்குத்தான் நெய்யளக்கும் முறை நினைவுக்கு வரத் தன் மகளை அழைத்தாள். தயிர் கடையத் தக்க மத்தையும், கயிற்றையும் கையொடு எடுத்து வந்தாள். தயிர்த் தாழியைப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! உறையிட்ட தாழிகளிலே பால் தோயவில்லை.

கையிலே எடுத்த மத்தும் கயிறுமாய் மெல்ல நகர்ந்து தொழுவம் நோக்கி வந்தாள். காளைகள் கண்ணீர் வடித்து நிற்கக் கண்டாள். காரணமெதுவும் புரியவில்லை. தான் செய்யவேண்டிய காரியத்தை எண்ணினாள். அடுக்களை புகுந்தாள், நேற்றெடுத்த வெண்ணெயை உருகவைக்கலாம் என்று வந்தாள். அது உருகவில்லை. செய்வதறியாது வெளியே வந்தாள். துள்ளித்திரியும் ஆட்டுக்குட்டிகள் சோகமாய் முடங்கிக்கிடந்தன. நடுநடுங்கும் பசுக்களைப் பார்த்தாள். இவை யெல்லாம் அவளை ஒரு முடிவுக்கு

வரச் செய்தன. 'வருவதோர் துயர் உண்டு' என்ற சொற்கள் வாயிலிருந்து வெளிவந்தன.

மாதரி முன்பு காணாது, இன்று கண்ட தீய நிகழ்ச்சிகளை இயல்பாய் வாழ்வொடு பொருந்திய பொருள்களின் வாயிலாய் ஆசிரியர் புலப்படுத்தி வருகிறார். அவள் வீட்டின் உள்ளும் புறமும் கண்ட காட்சிகள், உணர்ந்த உண்மைகள் அச்சத்தையும் அதனால் மிகுந்த நடுக்கத்தையும் படிப்படியாய்க் காட்டிப் போக நாம் காணுகிறோம்.

ஆயர்பாடியிலிருந்து அன்று உருக்கிய பசு நெய் அரண்மனைக்கு வருவதன் மூலம், மாதரிக்கும் மன்னர் மாளிகைக்குமுள்ள தொடர்பைக் குறிப்பாய்க் கவி சொல்லுகிறார்.

துன்பமுண்டென உணர்ந்த மாதரி, ஐயையை நோக்கி, 'மகளே, நீ அஞ்சாதே. ஆயர்க்குரிய மாயக் கண்ணன் நம்மைக் காப்பான். ஆயர்பாடியில் அன்றவன் ஆடிய கூத்துக்கள் பல. அவற்றுள் நம்மரிய நப்பின்னையோடு, ஆடிய குரவையைக் கண்ணகி காண இன்று நாம் ஆடுவோம். அதனால் வரவிருக்கும் துன்பத்தைத் துடைப்போம்' என்று கூறினாள்.

பின்னைப் பிராட்டியின் ஏழு தோழியரும் ஏழு வகையான காளைகளை வளர்த்து வந்தனர். அவைஏழையும் அடக்கி ஆளும் வீரனுக்கே எங்கள் 'பின்னை' உரியவளாவாள் என்று கூறினர். அந்த வீர நிகழ்ச்சியிலே, வாகை சூடி, பின்னையை மணந்தான் கண்ணன். அவர் ஆடிய குரவையை நாம் ஆடுவோம், என்றாள் மாதரி. அவ்வாறே ஆய்ச்சியர் எழுவர் கண்ணகியின் முன்னே வட்டமாய்க் கற்கடகக் கைகோத்து நின்றனர். அவர்களுள் ஒருத்தி மற்றொருத்தியை நோக்கி 'கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தாற் பாடுதும், முல்லைத் தீம்பாணி' என்றாள்.

கொல்லைப் புனத்திலே, வஞ்சகமாய் வந்து நின்ற குருந்த மரத்தினை முறித்த, மாயவனைப் பற்றி முல்லைப்பண் ணிலே இனிமையாய்ப் பாடுவோம் என்று கூறினாள்.

அதற்கு உடன்பட்டமையைக் கூறும் மற்றொருத்தி :

கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்று நம்மானுள் வருமேல், அவன்வாயில்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி

என்று கூறுகிறாள். கன்றைக் குறுந்தடிபோல் வீசி, விளாங்கனி உதிர்த்த கண்ணன், இப்பொழுது நம் வழி பாட்டால் இங்கு வருவானேல், அவன் வாய்வைத்து ஊதுகின்ற கொன்றைக் குழலின் இனிய ஓசையை, நாம் கேட்கலாம் என்றாள்.

பாம்பு கயிறு கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி

பாம்பைக் கயிறாகவும், மலையை மத்தாகவும் கொண்டு கடலைக் கடைந்த மாதவன், இப்பொழுது இங்கு வருவானானால், அவன் வாய் வைத்து ஊதும் இனிமை மயமான ஆம்பல் குழல் ஓசையைக் கேட்போம் என்று ஒருத்தி பாடினாள்.

கொல்லையஞ் சாரல் குருந்தொசித்த மாயவன்
எல்லை நம்ஆனுள் வருமேல் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி

கொல்லையிலே உள்ள புனத்திலே, வஞ்சத்தால் வந்து நின்ற குருந்த மரத்தை முறித்த மாயவன், நம் வழிபாட் டிற்கு இரங்கி, நம் ஆனிரையுள் வருவானானால், அவன்

வாய் வைத்து ஊதுகின்ற, இனிமை பெருகுகின்ற முல்லைக் குழலோசையைத் தோழி நாம் கேட்கலாம் என்றாள்.

ஆய மகளிர் பாடிய இவ்விசைப் பாடல்கள் கற்கண்டின் எல்லாப் பகுதிகளும் ஒரேமாதிரி இனிமையாவது போல, இனிமை பயக்கின்றன. கண்ணனது வருகையிலும், அவன் கை எடுத்த, வாய்ப்பட்ட குழலிலும் அவள் கொண்டுள்ள மோகம் அளவிறந்தது. ஊனையும் உயிரையும் உருக்குகின்ற இன்னிசையை வேண்டிநிற்கும் ஏக்கம், சொல்லனைத்திலும் பரவிக்கிடக்கிறது.

முல்லையந் தீங்குழல், கொன்றையந் தீங்குழல், ஆம்பலந் தீங்குழல் — என்ற பெயர் கேட்ட நிலையிலேயே, அவர்களைப் போலவே நாம் ஏங்க வேண்டியவர்களாக இருக்கிறோம். காது குளிர அந்த இன்னிசையைக் கேட்டால், நம் நிலை என்ன ஆகுமோ? மூன்று வகையான குழல்கள், இங்கே கூறப்படுகின்றன. ஆயர்பாடியிலுள்ள கோவலர்கள், முல்லைக் கொடியிலே மூன்றை எடுத்து அதை நரம்பாக வளைத்துக் கட்டி, வாய் வைத்து ஊதி எழுப்பிய ஓசையே, முல்லையந் தீங்குழல் எனப்படும். ஆம்பல் மொட்டிலிருந்து எழுப்பிய ஓசை, ஆம்பலந் தீங்குழல் என்று கூறப்படும். அவ்வாறே கொன்றைப் பழத்தைத் துளையிட்டு, ஊதி உண்டாக்கிய ஓசையே, கொன்றையந் தீங்குழல் எனப்படும். முல்லைக்கொடியும், இதழ் நெகிழாத ஆம்பலும், கொன்றைப் பழமும் நம் முன்னோர்க்குக்குழல் ஊது கருவியாயிற்று என்பதை நாம் எண்ணும்போது, வியப்படையாமல் இருக்க முடியவில்லை. எளிய குடிமக்களிடமும் இசை குடிகொண்டதை நினைத்தால், நாம் பெருமிதம் அடைவோம். இவற்றை எல்லாம் நினைத்துப் பார்த்த பிறகு, நம் உள்ளத்தில் எஞ்சி நிற்பது ஒருவகை ஏக்கந்தான், இத்தகைய கோவலர், பாணரது

மரபு அழிந்துபோனமையை எண்ணினால், நாம் சொல்லிய ஏக்கந்தான் மிஞ்சும்.

இவ்வாறு ஆடிப்பாடிய ஆயமகளிர், யமுனை நதியிலே கண்ணனோடு புனல் விளையாடிய நப்பின்னையின் நிறத்தையும், அழகையும் நினைந்து பாடுகிறார்கள். பாடிவரும் போது, நப்பின்னையின் ஆடையைக் கொண்டொளித்த நம்பியின் வடிவழகைக் கண்டு புகழ்வதா? நப்பின்னையின் நாணிச் சிவந்த திருமுகத்தைக் கண்டு சிரிப்பதா? எதை—எவ்வாறு பாராட்டுவது என்பதை அறியமுடியாமல், நேரம் போகிறது.

இறுமென் சாயல் நுடங்க நுடங்கி
அறுவை ஒளித்தான் வடிவென் கோயாம்
அறுவை ஒளித்தான் அயர அயரும்
நறுமென் சாயல் முகமென் கோயாம்

ஆடை கொண்டொளித்த காளையைப் புகழ்வதா? என்றொருத்தி கேட்டவுடனே, மற்றொருத்தி, அவனை அயர்ந்து போகப் பண்ணிய அவள் திருமுகத்தைப் புகழ்வதா? என விடுத்த வினாவுக்கு, ஒரு எதிர் வினாத் தொடுக்கிறாள். இறுதியாக, பாண்டியனையும், சோழனையும், சேரனையும் வாழ்த்திப் புகழ்வதன் மூலம், அவர்கள் கொற்றமும் வெற்றியும் பேசித் திருமாலின் கூறாக வைத்து முடிக்கிறார்.

கோவா மலையாரம் கோத்த கடலாரம்
தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே

என்று பாடும் ஆய்மகள் பொதிகைமலையிலே பிறந்த சந்தனமும், கொற்கைக் கடலிலே எடுத்த முத்தும், தேவர் கோன் வெகுண்டு சூட்டிய மாலையும் பாண்டியன் மார்பிலே பொருந்தி அசைவதைப் பெருமிதமாய்ப் பேசுகிறாள். மற்றொருத்தி தொடர்ந்து:

தேவர்கோன் பூணாரம் பூண்டான் செழுந்துவரைக்
கோகுல மேய்த்துக் குருந்தொசித்தான் என்பரால்

அத்தகைய பாண்டியனைத்தான் திருமாலின் அம்சமென்று கூறுகிறார்கள் என்றாள். மற்றொரு ஆயர்குலப் பெண்:

பொன்னிமையக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்
மன்னவன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்

இமயத்தின் கொடுமுடியிலே, தன் புலிக்கொடியைச் சோழன் நாட்டி, நாடு திரும்பிய இணையற்ற வீரத்தை வியந்து பாடினாள். அவன் யாரென்று நீ நினைக்கிறாய் என்றொரு வினாவை எழுப்பிக்கொண்டு மற்றொருத்தி:

மன்னவன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
பொன்னன் திகிரிப் பொருப்புடையான் என்பரால்

அவனுந்தான் திருமாலின் அம்சம் என்று கூறுகிறாள். மற்றொரு ஆயப்பெண்:

முந்நீரினுள் புக்கு மூவாக்கடம் பெறிந்தான்
மன்னர் கோச்சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
கன்னவில் தோளோச்சிக் கடல்கடந்தான் என்பரால்

சோழ பாண்டியரேயன்றி, சேரவேந்தரும், திருமாலின் அம்சமே என்று இவ்வாறு முடியுடைத் தமிழ் வேந்தர் மூவரையும், வாழ்த்துவதன் மூலம் தமிழக முழுவதையுமே வாழ்த்துகிறார்கள். பிறகு கண்ணனை முன்னிலைப்படுத்தி உருக்கமாய்ப் பாடினர். தமக்கும் ஆனிரைகட்கும் நேரும் துன்பம் நீங்குவதாக என்று குரவையாடலை முடித்தனர்.



## 14. கரைகாணுத் துன்பத்தில் கண்ணகி

ஆய மகளிர் ஆடியும் பாடியும், துயர் மடியவேண்டி யும் நிகழ்த்திய குரவையாடலுக்குப் பிறகு, மாதரி வைகை நதியிலே, நீராடச் சென்ருள். நாண்மலரும், நறும்புகை யும், புனைசாந்தும்—தூவியும், எடுத்தும், அணிந்தும், வைகைக் கரையிலே கண்ணனை வழிபட்டுத் திரும்பினுள். அப்பொழுது மதுரை நகரத்துப் பெண்ணொருத்தி கூறிய 'கொடுஞ்சொல்' கேட்டு, அஞ்சித் திடுக்கிட்டாள். துடி துடித்து ஆயர்பாடி நோக்கி வந்தாள். அவளுக்கு முன்னே அச்செய்தி ஆயர்பாடி முழுதும் பரவிவிட்டது. வந்தவள் கண்ணகியைக் கண்டாள். வாயடைத்து நின்ருள். மௌனம் மிக நுட்பமாய்ச் சோகத்தை வெளிப்படுத்திச் சென்றது.

கண்ணகியின் உள்ளத்தை வாட்டி எழுந்த துன்பம், அவள் சொற்களிலே அனல் உதிர்த்து வெளிப்பட்டது. சென்ற கணவர் திரும்பவேண்டிய காலம் வந்துவிட்டது. வரவில்லையே கணவர் எனக் கலங்கினுள். காரணம் இன்றி மனம் கலங்காதே என அருகிருந்த ஐயையை நோக்கிக் கேட்கின்ருள்.

காதலற் காண்கிலேன் கலங்கிநோய் கைம்மிகும்
ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சன்றே
ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சாயின்
ஏதிலார் சொன்ன(து) எவன்வாழியோ தோழீ

வைகைக்கு நீராடச் சென்று வந்த மாதரி, வாய் பேசாது நிற்பதிலும், காதலரைக் காணுமையால் உள்ளம் கலங்கி உருகுவதிலும், யாதோ ஒரு தொடர்பிருப்பதாய்க் கண்ணகி எண்ணுகிருள். அல்லாமலும், ஆங்காங்கே கூடிக் கூடிப் பேசும், ஆயமகளிர் பேச்சிலே இதற்கான காரணமிருப்பதாய் நினைக்கிருள். நினைத்து நினைத்துக் கலங்குகிருள்.

ஆயர்பாடியிலிருந்து கோவலன் பிரியும் நேரத்தில், க்ண்ணகியின் உள்ளம் கலங்கிய நிலையிலேயே இருந்தது. 'வந்துவிடுவான்' என்கிற நம்பிக்கை வேரூன்றி விழுது விட்டு நின்றது. நேரம் செல்லச் செல்ல அந்த நம்பிக்கை இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோகிறது. அன்பனைக் காணுத துன்பத்தால் 'இனி யாது நிகழுமோ' என அச்சம் மேலெழுந்து அலை பாய்கிறது.

தஞ்சமோ தோழி தலைவன் வரக்காணேன்
வஞ்சமோ உண்டு மயங்குமென் நெஞ்சன்றே
வஞ்சமோ உண்டு மயங்குமென் நெஞ்சாயின்
எஞ்சலார் சொன்னது எவன்வாழியோ தோழீ

என் கணவரையோ, நான் வரக்கண்டிலேன். ஐயோ, எனக்கு அடைக்கலமாவார் அவர் நிலையில் யாருளர்? என் தலைவரை வஞ்சகப்படுத்திய, செயலொன்று நிச்சயம் நிகழ்ந்திருக்கிறது. அதனுல் என் மனமும் மறுகி மறுகி மயங்குகிறது. இதை யெல்லாம் எண்ணிப் பார்த்தால், அயலார் பேசும் பேச்சிலே, யாதோ இதற்கான காரண

மிருப்பதாய்ப் படுகிறது. அவர்கள் கூடிக் கூடிப் பேசுவது தான் என்ன? எனக்கு நீ அதைச் சொல்லமாட்டாயா? என்று தவியாய்த் தவிக்கிருள் கண்ணகி.

ஆயமகளிர் கண்ணகியைப் பார்க்கின்ற பொழுதெல்லாம் 'அந்தோ, இவளுக்கா இத்துன்பம் வர வேண்டும்? என்ன அழகு, எத்தகைய இளமை, எவ்வளவு உயர்ந்த குணம்? இம்மாதரசிக்கும் இத்துயரம் வரலாமா?' என்று பலவாறு தமக்குள்ளே பேசிக் கொள்கிருர்கள். அவள் அருகில் வந்து இங்ஙனம் சொல்ல அவர்கட்கு நா எழவில்லை. தனக்குச் சிறிது தூரத்தில் கூடியிருந்து அவர்கள் பேசுவதையும், காதலன் வாராதிருப்பதையும் அதனுல் மனம் கலங்கி வருவதையும் எண்ணவைக்கும் இந்நிகழ்ச்சிகள், கண்ணகிக்கு ஐயத்தையும், துன்பத்தையும் பெருக்கிவிடுகின்றன.

இப்பகுதியில் ஆசிரியர் கண்ணகியின் சோகம், படிப்படியாய் வளர்வதை, மிக நன்ருகக் காட்டுகிருர். இனி அவைகளைக் காண்போம். காதலனைக் காணுமையால் நேர்ந்த கலக்கம், உள்ளத்தில் புகைந்து எழுந்தது. கொல்லன் ஊதுகின்ற உலைக்களத்துத் துருத்திபோலக் கண்ணகிக்குப் பெருமூச்சு வெளிப்பட்டு வருகிறது என்று கூறுகின்ருர். அடுத்த பாடலில், கோவலன் பிரிந்த பொழுதிலே முன்பு கூறிய கலக்கமட்டுமல்லாமல் நடுக்கமும் பிறந்து விட்டதை உணர்த்துகிருர். 'கலங்கினுள்' 'நடுங்கினுள்' என்று கூறியவர், மூன்ருவது பாடலில் அதன் முடிந்த செயலாக 'மயங்கினுள்' என்று கூறிப் படிப்படியாய் அத்துன்பத்தின் குண இயல்புகளை—வளர்ச்சியை—காட்டக் காணுகிருேம்.

இவை மூன்ருலும், பிறர் பேசிய பேச்சாலும் கண்ணகி எண்ணிய முடிவைக் கவி, நமக்குக் காட்டுகிருர்.

'கணவனை வஞ்சகப்படுத்திய செயலொன்று நிகழ்ந்துள்ளது' என்பதே அவள் முடிவாகக் கொண்ட எண்ணமாகிறது. வஞ்சகமாய்க் கணவன் கொலைப்பட்ட செய்தியை, அறியுமுன்பேயே வஞ்சனை நிகழ்ந்துள்ளது எனக் கண்ணகியின் நுண்ணறிவுக்குப் பட்டதைக் கவி நன்கு காட்டுகிறார்.

இப்பாடல்களிலுள்ள சொற்கள் ஒவ்வொன்றும் கண்ணகியின் கலங்கிய உள்ளத்திற்கு ஒரு உருவம் கொடுத்து, அதைக் கண்ணெதிரே காட்டி நம் கண்ணிலும் நீரைப் பெருக்கி விடுகின்றன. இத்தகைய ஒரு சூழ்நிலையில், கோவலன் கொலைப்பட்ட செய்தியை, ஒருவாறு கூறுவதில் ஐயைக்குச் சிரமமில்லாமல் போய்விடுகிறது. கண்ணகியை நோக்கி, 'உன் கலக்கம் உண்மையானதுதான். ஐயோ!' என்று கை நெறித்தாள். 'பாண்டியன் அரண்மனையிலே சிலம்பு திருடிய கள்வனென்று கோவலனைக் காவலர் கொலை செய்யக் கருதினர்' என்று நடு நடுங்கிக் கூறினாள். 'கொலை செய்தனர்' என்று கூறினால் கண்ணகி கேட்டவுடனேயே, தன் உயிரை விட்டுவிடக் கூடுமோ என எண்ணிய ஐயை-இதமாய்க் 'கொலை குறித்தனர்' எனக் குறிப்பாய்க் கூறுகிறாள்.

அரைசுறை கோயில் அணியார் நெகிழம்
கரையாமல் வாங்கிய கள்வனும் என்றே
கரையாமல் வாங்கிய கள்வனும் என்றே
குறைகழல் மாக்கள் கொலை குறித்தனரே

என்று கூறுவதிலே, கொலையாளர்களை மனித உணர்வு இழந்துபோன மிருகங்கள் என்ற கருத்திலே 'மாக்கள்' என இகழுகிறாள். இங்ஙனம் கூறியவுடனேயே கண்ணகி,

பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடு சேண்நிலம் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள் தன்கேள்வனை
எங்கணு என்று இனைந்தேங்கி மாழ்குவாள்

சினம் பொங்கிவிட்ட காரணத்தால் கண்ணகி சீறி எழுந்தாள். நிலத்திலே விழுந்தாள் செவ்வரி படர்ந்த கண்கள் சிவக்க அழுதாள். கணவனை எண்ணி, எங்குள்ளாய் என்று புலம்பினுள். 'பொங்கி' எழுந்தாள் என்ற சொற்களிலே, உணர்ச்சியின் வேகம்—தடைப்படுத்துவதை எல்லாம் தகர்க்கவல்ல ஆற்றலுருவம் பெற்றுள்ளது. அம்மட்டோ? கவிஞனின் உள்ளமும் கண்ணகியின் உள்ளமும் இரண்டிறந்த ஒன்ருகி விடுகின்றன. அதனுலே தான் உள்ளுணர்ச்சியை அவ்வளவு நன்ருகப் புலப்படுத்த முடிகிறது.

எழுந்த கண்ணகி நிலத்திலே விழுந்தாள். இருண்ட கருங்கூந்தல் கட்டுக்கலைந்து நிலத்திலே பரவியது. அதனிடையே அவளது திருமுகமும் புதைந்து கிடக்கிறது. இவ்வாறு நமக்கு இளங்கோ சொல்லவில்லை. இதனினும் உருக்கமாய்க் காட்டக் கருதிய கவி கரிய வானத்தில் மிதந்த வெண்ணிலவு முகிலோடு, பெரிய நிலத்திலே பிடிப்பற்று விழுந்து விட்ட காட்சியைக் காட்டி, மேற்குறித்த நிகழ்ச்சியை உணரவைக்கிருர். என்ன அற்புதம்! எத்தகைய சோகம்! சோகத்திலே இழந்த அழகையும் காட்டி நம் உள்ளத்திலே இரக்கம் வரச்செய்கிருர். வழி நடந்த ஒருவன் தலையிலே, இடி விழுந்ததுபோல கண்ணகிக்கு இச்செய்தி அதிர்ச்சி உண்டாக்குகிறது. நமக்கும் அத்தகைய ஒரு உள்ளுணர்ச்சி தோன்றுகிறது.

செல்வமிழந்து, சிறப்பிழந்து நாடுவிட்டு நகர் விட்டு, உற்ருர் உறவினரை விட்டு, கணவனையே நம்பி; காடு

கடந்து வேற்று நாடடைந்த கண்ணகி, இறுதியில் எஞ்சி நின்ற கணவனையும் இழக்க நேர்ந்த கொடுந்துன்பம் அந்தோ! கொடிது கொடிது! 'கண்ணே! வருந்தாதே, இதோ சிலம்புவிற்று வருகிறேன்' என்று கணவன் அருகமர்ந்து அன்பை எல்லாம், அள்ளிச் சொரிந்து கூறிய சொற்கள், கனவிலே தோன்றி மறைந்த காட்சியாய்ப் போகின்றன.

இது வரையும், இளங்கோ நமக்குக் கண்ணகியைப் பற்றிக் கூறி வந்தவைகளை யெல்லாம், சுருக்கமாய் நினைத்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். அத்தகைய சந்தர்ப்பம் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. கண்ணகி தனக்கு ஒப்பில்லாத அழகுடையவள். செல்வச் சிறப்பிலும் அப்படிப்பட்டவள். வீட்டை விட்டு வெளியே வந்தறியாதவள். அஞ்சத்தக்க இயல்புடையவள்; அனுபவமோ, ஒரு சிறிது மில்லாதவள். இவையே ஆங்காங்குகூறப்பட்டவை. இத்தகைய குணமும் இயல்பும் வாய்க்கப்பெற்ற ஒரு இளம் பெண். தன் கணவன் வஞ்சகமாய், அரசனால் கொல்லப்பட்ட நிலையில், யாது செய்யக் கூடும்? அரசனே அநீதி செய்தால் அதை யார் தண்டிக்க முடியும்? அதற்கொரு சமாதானமாய்—வேலியே பயிரை மேய்ந்தால் என்று சொல்லிப் பொறுப்பை மறக்கலாம். இல்லையானால், அநேகரிடம் காணப்படுவதுபோல, 'தெய்வமே நீ இருந்தால் கேள்' என்று சொல்லிப் புலம்பலாம். 'எல்லாம் அவன் செயல்' என்று சுலபமாய், மௌனமாயிருந்து விடலாம். அல்லது பெண்ணாய்ப் பிறந்த நம்மால் ஆகாது, ஊருக்குப் போய்த் தாய் தந்தையரிடம் சொல்லித் தக்கதைச் செய்யலாம் என்று நாடு திரும்பலாம்.

ஆனுல் கண்ணகி, இதற்கெல்லாம் விதிவிலக்காய் நிற்கிருள். சென்ற கணம் வரையிலும் ஆன்றவிந்து கிடந்த சினம், சீறியெழுந்தது. எழுந்த வேகத்திலே, அச்சம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தோடுகிறது. இதுகாறும் உயிரென நினைத்துவந்த ஒன்றை, இழந்துவிட்ட நிலையிலே, வஞ்சகத்தை வேரறுக்க, வந்த பழிதுடைக்க, அநீதியைச் சுட்டெரித்து நீதியை நிலைநாட்டக் கண்ணகி நினைத்துவிட்டாள். எனவே தான் மேற்குறித்த எண்ணமெதுவும் அவளுக்குத் தோன்றவில்லை. மெல்லியல் பாவையாய் அலங்கரித்துக் கூறப்பட்ட கண்ணகி, இனி வீரபத்தினியாய் உருவாகி விடுகிருள். சினத்திலும் கண்ணகி சிரிக்கிருள். இதோ பாருங்கள் :

இன்புறு தங்கணவர் இடர்எரி யகம்மூழ்க
துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்
மன்பதை அலர்தூற்ற மன்னவன் தவ(று)இழைப்ப
அன்பனை இழந்தேன்யான் அவலங்கொண்(டு) அழிவலோ

தம்மோடு இருந்து இன்பமுற்ற கணவன், நெருப்பிலே கிடந்து மூழ்கத் தாம் கைம்மை நோன்பு நோற்று, நதியிலும், நன்னீர்ப் பொய்கைகளிலும் நீராடி, அழுது அழுது, பிறகு மறக்கின்ற பெண்டிரைப்போல, நாெனாருத்தியாவேனே? என்று கூறுகிருள் கண்ணகி. என்ன ஏசல்! எத்தகைய ஏளனம்! விதவைப் பெண்டிரைப் பற்றிக் கண்ணகி கொண்ட கருத்தைப் பாருங்கள்!

இத்தகைய விதவைப் பெண்டிர், கண்ணகியை நோக்கி, நீயும் இனியொரு விதவைதானே என்று கேட்கலாமல்லவா? அப்படிக் கேட்பதாய் வைத்தே கண்ணகி, விடையும் சொல்லுகிருள். நாெனாரு விதவைப் பெண் அல்ல—நான் ஒரு வீரப் பெண் என்று மார்தட்டுகிருள். சிலம்பு திருடிய கள்வன் என்று கணவன் கொல்லப்பட்

டான். அதனுல் உலகம் திருடன் மனைவி, திருடி என அழைக்கும். எனவே, அரசன் செய்த அநீதியை, உலகம் அறியவைப்பேன். அதனுல், இனி ஆராயாத ஒன்றை, அரசன் ஒருவன் செய்யாதவாறு ஆக்கிவிடுவேன்! வந்த பழி துடைப்பேன் என்ற பாங்கில், ஆயர் மகளிர்களை நோக்கி, நீங்கள் எல்லோரும் இதைக் கேளுங்கள் :

பாய்திரை வேலிப் படுபொருள் நீயறிதி
காய்கதிர்ச் செல்வனே கள்வனே என்கணவன்?

'என் கணவன் நீ அறியக் கள்வனு?' என்று சூரியனை நோக்கிக் கேட்கிருள். 'கள்வனல்ல. கள்வன் என்ற மதுரை நகரைத் தீயுண்ணும்' என்ருெரு குரல் கேட்கிறது. ஆ! என வியந்தனர் ஆயமகளிர்! சினம்கொண்ட கண்ணகி, சிலம்பேந்திய கையளாய்க் கலைந்த கூந்தலும், கசிந்த கண்ணீருமாய், அதோ! மதுரையை நோக்கிப் புறப்பட்டுவிட்டாள்! இனி ஆயர்பாடியில் அவளுக்கு என்ன வேலை? அங்குள்ள ஆயர்களுக்குத் தன் கணவன், கள்வனல்ல என்பதைக் காட்டிவிடுகிருள்! ஆயர்மகளிரின் அநுதாபமும், அவளைப் பின் தொடர்ந்து செல்கிறது.

மதுரை வந்தாள். நகர மகளிர்களைப் பத்தினிப் பெண்களை நோக்கி—இதோ என் கையிலுள்ள, இச் சிலம்பு, வஞ்சகமாய்க் கவர்ந்துகொள்ளப்பட்ட சிலம்பின் மற்ருென்ருகும். இதைக் காணுங்கள் என்று கூறினுள்.

துன்பத்தைப் பெருக்குகின்ற இந்த மாலைக் காலத்திலே, யாருமே அடையாத பெருந்துன்பத்தை நான் அடைந்துவிட்டேன். சிலம்பு விற்கவந்த என் கணவனை, சிலம்பு கவர்ந்த கள்வனென்று கூறிக் கொன்ருர்களே! இது ஒரு பெரிய அநீதியில்லையா? அன்பு நிறைந்த என்

னருமைக் காதலனை, உயிரொடும் பொருந்திய உடலொடும் முன்புபோல், நான் காண்பேன்.

காதற் கணவனைக் கண்டால் அவன் வாயில்
தீதறு நல்லுரை கேட்பேனே ஈதொன்று
தீதறு நல்லுரை கேளா தொழிவேனேல்
நோதக்க செய்தாளென்(று) எள்ளல் இதுவொன்று

'காதற் கணவனைக் காண்பேன்; அவனது அமுத வாய் திறந்து பேசும், இனிய மொழிகளையும் கேட்பேன். இது நிச்சயம். அப்படிக் கேளாது போவேனுயின், என்னை நீங்கள் இகழலாம், கள்வன் மனைவி என்றே கூறலாம்' என்று பலவாறு மதுரை நகர மகளிரை நோக்கிக் கண்ணகி பேசுகிருள்.

இதைக் கேட்ட மதுரை நகர மக்கள், ஏக்கமும் கலக்கமும் அடைந்து, நீக்கமுடியாத பெருந் துன்பத்திற்கு இவளை உள்ளாக்கி, எந்நாளும் வளையாத செங்கோல் வளைந்ததே! இதற்கு யாது காரணம் என ஒருவர் மற்றொருவர் முகம் பார்த்து மயங்கினர்.

அல்லலுற்(று] ஆற்றுது அழுவாளைக் கண்டேங்கி
மல்லல் மதுரையா ரெல்லாரும் தாமயங்கிக்
களையாத துன்பமிக் காரிகைக்குக் காட்டி
வளையாத செங்கோல் வளைந்த[து) இதுவென்கொல்

என்றனர். ஏழை அழுத கண்ணீர் வீண்போகாது என நாம் இன்றளவும் சொல்லி வருகிறோம்; இந்த எண்ணத்தில் பிறந்தது—'அல்லற்பட்டு ஆற்றுது அழுத கண்ணீ ரன்றே, செல்வத்தைத் தேய்க்கும் படை' என்ற குறள். இக்குறளை இலக்கணமாகவைத்து ஆராய்ந்தால், கண்ணகி சிந்திய கண்ணீரும் அதன் விளைவால் நேர்ந்த சோக

நிகழ்ச்சிகளும் ஒருங்கு திரண்ட இலக்கியமாய் இங்கு உருவாகியிருப்பதை உணரலாம். 'தேய்க்கும்' என இக் குறளின் இறுதியிலுள்ள சொல்லின் ஆற்றலை, மதுரை நகரின் சோக மயமான அழிவிலே நாம் காணுகிறோமல்லவா? இதுவல்லவோ இலக்கணம்! இதுவல்லவோ இலக்கியம்!

ஏந்திய சிலம்பும், அதன்மீது சிந்திய கண்ணீரும், படர்ந்த சோகமும், விரிந்த கூந்தலும் பொருந்திய கண்ணகியைக் கண்ட இன்னும் சிலர், 'புதிய பெருந் தெய்வமோ, யாது நிகழுமோ' என நடுங்கினர். வேறு பலர், கலங்கிப் புலம்பிக் கண்ணீர் பெருக்கிவரும் இவள், 'யாதானும் ஒரு தெய்வம் வரப்பெற்றவளோ, மேல் விளைவது தான் யாதோ' என அறியமாட்டாது, அஞ்சி நடுங்கினர். இத்தகைய தோற்றத்தோடு வந்த கண்ணகியைக்; கோவலன் கொலைப்பட்ட இடத்தைக் கூட்டிப் போய்க் காட்டினர் மதுரை மக்கள். பிரியா விடை பெற்று வந்த காதலனை — கோவலனைக் கண்டாள் கண்ணகி. இல்லை! கரைகாணாத் துன்பத்தையே காணுகிறாள்!

ஆயர் மனையிலே, காலை நேரத்திலே, கணவன் மார்பிலே கிடந்த மாலையைத் தன் கூந்தலிலே சூடிக்கொண்ட கண்ணகி, அதே கணவனது மார்பு மதுரை நகரிலே, மாலைப்பொழுதிலே, இரத்தப் பெருக்கிலே தோய்ந்து கிடக்கக் காணுகிறாள்! அந்தோ! எத்தகைய சோகம்! எடுத்து மார்போடு வைத்து மயங்குகிறாள்.

கண்பொழி புனல்சோரும் கடுவினை உடையேன்முன்
புண்பழி குருதியராய்ப் பொடியாடிக் கிடப்பதோ

காதலியின் கண்ணிலிருந்து வழிந்துவரும், கண்ணீரைக்

கையால் மாற்றவேண்டிய கணவன், அந்தோ! வெட்டுண்டு கிடக்க, மாளாத துன்பத்தில் நின்று புலம்புகிருள்!

நீதி மறைந்து அநீதி தலை தூக்கும் சமயத்தில் ஒருநாடு எங்ஙனம் அல்லலுறும் என்பதை, இனிக் கண்ணகியின் மூலமாய் உணருகிறோம். ஒரு நாட்டின் நல்வாழ்விற்குப் பெண்டிரும் சான்றோரும் காரணமானவர். அவ்வாறே, தெய்வமும் தெய்வ பக்தியும் இன்றியமையாததாகும். அதனுலேதான் 'இம்ம துரை நகரத்திலே பெண்டிர்களும் இருக்கிருர்களா? சான்ருேர்களும் இருக்கிருர்களா? தெய்வமும் இருக்கிறதா?' என்று கண்ணகி ஒன்றற்கொன்று தொடர்புடையனவற்றைப்பற்றிக் கேட்கிருள். ஒரு பெண்ணுக்கு வந்த துன்பத்தை, மற்ருெரு பெண் கண்ணுற் கண்டிருந்தும், காவலனறிய, இந்த அநீதியைப்பற்றிப் பேச வாயில்லையா என்று வருந்துகிருள். நீதி நிலைதவறுகின்ற சமயத்தில் — அரசனுல் அது விளைவதானுலும், அஞ்சாது இடித்துரைக்க வேண்டிய சான்ருேர் யாருமில்லையா? என்று வினவுகிருள். இவர்கட்கெல்லாம் மேலாக, ஏழையென்றும் அரசு என்றும் இரக்கம் காட்டாது, அறத்தையே வடிவமாய்க்கொண்ட தெய்வம், இந்த நகரத்திலில்லையா? எனப் பலவாறு சொல்லிச் சொல்லி, அழுது அழுது, கணவனது மார்பு பொருந்த வெட்டுண்ட உடலை எடுக்கிருள். அதே சமயத்தில் உயிர் பெற்றெழுந்த கோவலன், கண்ணகியை நோக்கி, 'நிறைமதிபோலும் உன் திருமுகம் வாடியதேன்' என்று வாயாற்பேசித் தன் கையால் அவள் கண்ணீரைத் துடைக்கிருன்.

உடலொடும் உயிரொடும் பொருந்திய தன் கணவனைக் கண்ட கண்ணகி, வியப்பும் திகைப்பும் அடைகிருள்! எங்கும் போய்விடாதபடி அவன் கால்களைத் தன் கையால்

பற்றிக்கொள்ளுகிருள். ஓடத்தக்க கால்களைத் தடைப் படுத்தி விட்டால் தன்னைவிட்டு முன்போல் பிரியமாட் டான் என, அறிவு மயங்கிப்போய் இவ்வாறு செய்கிருள். அமரருள்ளே, அவனொருவனுகிவிட்ட காரணத்தால் 'நீ இருக்க, நான் செல்லுகிறேன்' என்று கோவலன் மறைந்து விடுகிருன்.

> பழுதொழிந்து எழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துள்ளான்
> எழுதுஎழில் மலருண்கண் இருந்தைக்க எனப்போனுன்

என்று கவிபேசக் காணுகிருேம். ஒரு குற்றமும் அறியாத கோவலன் கொலைப்பட்டதும், வழிவழிப் பெரும்பழிக்கு அவன் பெயர் ஆளாவதும், ஆகிய நிலைகளிலிருந்து அவனை மீட்டாக வேண்டும். இந்த எண்ணம் கவியின் உள்ளத் திலே வேர்விட்டு நிற்கிறது. எனவே பழியிலும், அது காரணமான கொலையிலும் கோவலன் வாழ்வைக்கொண்டு போய் முடிக்காமல், 'பழுதொழிந்து எழுந்திருந்தான்' என்று கூறுமுகமாக, பழிபாவமறியாத அவனது பழைய வடிவோடு காட்டி, 'பல்லமரர் குழாத்துள்ளான்' என நிகழ்ச்சி முடியக் காணுகிருேம்.

கணவன் மறைந்த நிலையிலே கண்ணகி 'இது மாயமோ, மருட்டுகின்ற தெய்வமோ, மற்றெதுவோ' என்று குழப்பமடைந்து போகிருள். அவன் வடிவு கண்டது-இவ்வாறு தோன்றுமானல் 'நீ இருக்க நான் போகிறேன்' என்று சொன்னனே? அச்சொல் என்ன ஆவது? என்று குழம்பிய நிலையில் அவ்வாறு கூறியதும் பொய்யோ எனப் புலம்புகிருள். 'சினம் தணிந்தாலன்றி என் செல்வனைக் காணமாட்டேன்' என்று பேசுகிருள்.

> மாயங்கொல் மற்றென்கொல்மருட்டியதோர் தெய்வங்கொல்
> போயங்குத் தேடுவேன் பொருளுரையோ இதுவன்று

காய்சினம் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன்
தீவேந்தன் தனைக்கண்டுஇத் திறங்கேட்பல் யானென்றாள்'

கொலைக்குக் காரணமான கொடுங்கோலரசனைக் கண்டு, இதற்குக் காரணம்தான் யாது என அறிய எண்ணியவளாய், நெடுங்கயற்கண் நீர்சோர, ஆறாத சினத்தோடு அரண்மனை நோக்கிச் செல்லுகிறாள்.



## 15. அரசன் யார்? கள்வன் யார்?

ஆயர்பாடியிலே, மாதரி கண்ணுற்கண்ட தீய நிகழ்ச்சிகளையொப்ப, பாண்டிமாதேவி கனவிலே தீயன நிகழக்காணுகிருள். செங்கோல் வளைவதை, வெண்குடை நிலம் நோக்கி விழுவதை, ஆராய்ச்சி மணி அநீதிகண்டு நடுங்குவதை, கதிரவனை இருள் சூழ்ந்து கவருவதைக் கண்டாள். கண் விழித்தாள். அச்சத்தால் உடல் நடுங்கி உளம்பதறினுள். கண்ட கனவைக் கணவனிடம் சொல்லலாம் என எண்ணி வருகிருள். வழியெலாம் நின்ற பணிமகளிர், வாழ்த்தி வணங்கினர். அரியணையில் வந்தமர்ந்த அரசனுக்கு அருகமர்ந்தாள் அரசி. கனவிலே கண்ட தீயனவால் 'வருவதோர் துயருண்டு' என்று சொல்லி வாய்மூடு முன்னே, அத்துன்பமும் வடிவுதாங்கி வாயிலருகே வந்து நின்றது.

'வாயிலோயே வாயிலோயே' — என வாயில் காப்போனைக் கண்ணகி அழைக்கிருள். அநீதி புரிந்த ஒருவன் அரசனு? அவனுக்கொரு அரண்மனையா? அதற்கும் ஒரு காவலாளியா? எல்லாம் நகைக்கத் தக்கனவாயிருக்கின்றனவே, என்று நினைக்கிருள் கண்ணகி. அரசனிட

மிருந்து அறிவு குடிபோய் விட்டதாம்; நீதி இருக்க வேண்டிய உள்ளத்திலே அது நிலைபெயர்ந்து விட்டதாம். இரண்டையும் இழந்துவிட்டு வறியனுய் அரசன் அரியணையில் அமர்ந்துள்ளான் என்கிருள் கண்ணகி.

இணையரிச் சிலம்பொன்(று) ஏந்திய கையள்
கணவனை இழந்தாள் கடையகத்தாள் என்(று]
அறிவிப் பாயே அறிவிப் பாயே

கையிலே ஒரு சிலம்பை ஏந்தியவள், கணவனை இழந்தவள், இழந்த நிலையில், கடைவாயிலின் கண்ணே வந்து நிற்பவள் என்று சொல் விரைவு தோன்ற அவனை வெருட்டி, இங்ஙனம் ஓட்டுகிருள். இனி அவள் யார் பொருட்டும், அஞ்ச வேண்டியவளில்லை யல்லவா? வாயில் காப்போன், கண்ணகியைக் காணவே அஞ்சுகிருன். விழித்த கண்ணையும் மூடிக்கொள்ளுகிருன். அவள் சொல்லுக்குச் சொல் அவன் நடுநடுங்கிப் போகிருன். துடிதுடித்து ஓடோடி வருகிருன், பாண்டியன் முன்னே நின்று, என்றுமில்லாதவாறு இன்று மிகுதியாகவே வாழிபாடு கிருன். கொற்கை வேந்தர்க்கு முன்னும் பின்னும் வாழி வைத்து வாழ்த்துகிருன். இனி வாயிலருகே வந்து நிற்கும் கண்ணகி பற்றிப் பேசுகிருன்.

இரத்தம் கசிந்தொழுகும் தலையைக் கையிலே ஏந்திய காளிபோலக் காணப்படுகிருள். ஆனல் கையிலே சிலம் பேந்தி வந்துள்ளாள். அதனல் அவள் காளியுமல்ல. தலைவிரி கோலமாய் நிற்பதைக் கண்டால், பிடாரியோ என்று தோன்றுகிறது; பிடாரியுமல்ல. பத்திரகாளி என்று சொல்லலாம் என்ருலோ, அப்படியும் சொல்லிவிட முடியவில்லை. அஞ்சத்தக்க அவள் நிலையைப் பார்த்தால், காட்டிலே நடமாடும் காளியோ என்று சொல்லவு மியல

வில்லை. சீறிவருகின்ற சினத்தைப் பார்த்தால் துர்க்கை போல் தோன்றுகிருள் அவளுமல்ல. தோற்றமோ பயங்கரமாக இருக்கிறது. யார் மீதோ கறவு கொண்டு வந்திருப்பவள் போலக் காணப்படுகிருள். கையிலே, வேலைப்பாடு மிகுந்த ஒரு பொற் சிலம்பை ஏந்தி வந்திருக்கிருள், கணவனை இழந்தவளாம். நமது கடைவாயிலின்கண் வந்து நிற்கிருள் என்று வாயில் காப்போன் கூறுகிருன். இப்பகுதியில் வாயில் காப்போன் கண்ட காட்சியை, கொண்ட பரபரப்பை, நடுங்கிய அச்சத்தை ஆசிரியர் நன்கு புலப்படுத்துகிருர்.

அரசமாதேவி கண்ட கனவிற்கும் வாயில் காப்போன் வந்து கூறியவற்றிற்குமுள்ள தொடர்பை அரசன் அறிந்து கொள்ளுகிருன். 'அத்தகையவள், இங்கே வருக! அவளை நீ அழைத்து வருவாயாக!' என்று கூறுகிருன். அரசன் ஆணைபெற்ற வாயில் காப்போன் ஒடுங்கி, நடுங்கி அரசவைக்கு வழிகாட்டக் கண்ணகி வந்து நிற்கிருள். 'நீர் ஓடிவரும் கண்ணேடு, எம்முன் வந்த இளங்கொடி போல்பவளே, நீ யார்?' என்று கேட்கிருன் பாண்டியன். கேள்விக்கு, விடை எப்படி இருக்கவேண்டும் என்பதற் கொரு எடுத்துக்காட்டாய்க் கண்ணகி பேசுகிருள். 'தேராமன்ன' என்று தொடங்குகிருள். அரசே! என்று அழைக்கத் தொடங்கும் நிலையிலேயே, 'தேரா' என்ருெரு அடைமொழி வைத்து அழைக்கிருள். 'ஆராய்ந்து பார்க்க அறியாதவன்.' அவன் – அரசனுக யிருத்தற்கு அருகதையில்லாதவன் எனப் புலப்படுத்துகிருள். பாண்டியர் மரபு தோன்றி செங்கோல் புரிந்த இது நாள் வரையிலும், அரச சபையிலே அரசனை நோக்கி, ஒரு இளம்பெண் சொல்லத் துணியாத, ஒரு சொல்லை அச்சமின்றிக் கூறுகிருள்.

யார் என்ற வினவுக்கு நாடு, நகர், கணவன் பெயர், தன் பெயர் கூறுவதன் மூலம் விடை அளிக்கப்படுகிறது. அடைக்கலமாகத் தன்னை வந்து அடைந்த புருவின் உயிரைக்காத்த சிபியும் கன்றை யிழந்து கண்ணீர் விட்ட பசுவின் பொருட்டு, நீதி வழங்கத் தன் ஒரே மகனை இழக்கத் துணிந்த வேந்தனும் ஆட்சி புரிந்த புகார் நகரே என்னுடைய ஊராகும்.

எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத்தன்
அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகாரெம் பதியே

எனவரும் பகுதியிலே, தன் நாட்டின் ஒப்புயர்வற்ற நீதியின் நேர்மையை எடுத்துக் கூறுகிறாள். பறவையின் பொருட்டும், விலங்கின் பொருட்டும் காட்டிய நீதியைக் கூறுமுகமாக, மக்கள் பொருட்டு மன்னன் வழங்கத் தக்க நீதி எத்தகையதாக இருக்கவேண்டும் என்பதை, எண்ண வைத்து விடுகிறாள் கண்ணகி. அடைக்கலமாக வந்த புருவின் உயிரைக் காத்து, நீதி செலுத்திய மன்னனைக் கூறுமுகமாக, அடைக்கலமென உன் நகர்வந்த என் கணவனுயிரைக் காக்கத் தவறி—உயிர் போக்கப்பணித்த கொடுமையை உணரவைக்கின்றாள். பசுவின் கன்றை, அறியாது கொன்ற ஒரே மகனை இழந்து, நீதி வழங்கிய மன்னனைப் போல, தவறு செய்த பாண்டியன் தன் உயிரை இழந்து நீதி வழங்கத் தவறியதை நினைக்க வைக்கிறாள்.

இனித் தன்னைப் பற்றிக் கூறியாக வேண்டும். தன் பெயரைக் கூறிக் கொள்வது எளிது, கணவன் பெயரையோ

மாமன் பெயரையோ கூறுவது என்பது தமிழ்நாட்டு மக ளிரிடத்தே மரபிழந்துபோன நிலையாகிவிட்டது. கண்ண கிக்குக் கணவன் பெயரோடு மட்டுமல்லாது, மாமன் பெய ரையும் கூறவேண்டியதாகி விட்டது. அரசன் கண்ண கியை அறிந்துகொள்ள வேண்டுமானால் மாமன் மாசாத்து வான் பெயரையும் கூறியாக வேண்டும். முன்பே, மாதரி யிடம் கவுந்தி அடிகள் கண்ணகியை அடைக்கலமாகத் தரும் சமயத்தில், இவள் கணவனது தந்தையின்பெயரைக் கூறினால், இந்நகரத்தார் பெருமை அறிந்து ஏற்பர் என்று கூறியிருக்கக் கண்டோம். அதை நாம் இங்கே நினைவு படுத்திக் கொள்ள வேண்டும். கணவனை இழந்த நிலை யிலே, கண்ணகி இழந்த மரபுக்கு உயிர் கொடுத்துப் பேசுகிறாள்.

ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி
வாழ்தல் வேண்டி ஊழ்வினை துறப்பச்
சூழ்கழல் மன்ன நின்னகர்ப் புகுந்திங்கு
கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி
கண்ணகி என்பதென் பெயரே

வாணிபம் செய்ய வந்தவன், கள்வனாய்ப் பழிசுமத்தப் பட்டு, கடைசியில் உன்னால் கொலையும் செய்யப் பட்டு விட்ட கோவலன் மனைவி, என் பெயர் கண்ணகி என்று கூறுகிறாள். இதுவரையும் பொறுமை பாராட்டி மௌன மாய்க் கேட்ட பாண்டியன் 'பெண் அணங்கே! கள்வனைக் கொல்வது கடுங்கோலல்லவே, அது அரச நீதியாயிற்றே' என்று கூறுகிறான். எனவே இந்த நேரம் வரையிலும், தான் நீதிபுரிந்திருப்பதாகவே பாண்டியன் கருதிப் பேசுவ தைக் கண்ணகி உணர்ந்தாள். தன் கணவன் கள்வனல் லன் என்பதை நேருக்கு நேராக நிரூபிக்க வேண்டிய நிலை—

சிலம்பு தன்னது என்பதை உணர்த்த வேண்டிய கடமை—கண்ணகிக்கு நேர்ந்துவிட்டது. பாண்டியனை நோக்கி, 'அறநெறியில் செல்லாத அரசே! என்சிலம்பிற்குள் இருக்கும் பரல் மாணிக்கமே' என்ருள் கண்ணகி.

'இப்பெண் கூறியது செவ்விய மொழியாகும், எம்முடைய சிலம்பினது பரல் முத்துடையதே!' என்ருன் பாண்டியன். உடனே ஏவலாளர் மூலமாய் அச்சிலம்பைக் கொண்டுவரச் செய்து கண்ணகியின் முன்னே வைக்கப்பணித்தான்.

கண்ணகி அணிமணிக் காற்சிலம்பு உடைக்க
மன்னவன் வாய்முதல் தெறித்தது மணியே

சினம் கொதித்துப் பொங்கும் கண்ணகி·சிலம்பை வாங்கிஞள். உடைத்தாள். என்ன ஆச்சரியம்! அதிலிருந்து தெறித்தது மாணிக்கப்பரல்! மன்னவன் வாயிலே மோதிக் கீழே விழுந்தது. ஆம்; பொய் கூறிய வாய்க்கு ஒரு தண்டனை கொடுப்பது போல் அக்காட்சி அமைகிறது. பாண்டியர் காத்த பழம்புகழ் நிலைகுலைந்து விழுந்தது. தாழ்ந்தது வெண்குடை. தளர்ந்தது செங்கோல். யானே அரசன்? யானே கள்வன்! என வினவையும் எழுப்பிப் பாண்டியன் அதற்கு விடையையும் அளிக்கிருன். அரசன் யார்? கள்வன் யார்? அரசனே கள்வன். கள்வனே அரசன். இருவரும் ஒருவரே என்பதைக் கண்ணகி கண்ணெதிரே காட்டிவிட்டாள்.

அநீதி கண்டறியாத இவ்வரசர் மரபு, வஞ்சகப் பொற்கொல்லன் வார்த்தையை நம்பி, என்னுல் அழிய நேர்ந்ததே எனப் பாண்டியன் பேசினுன்; ஏங்கினுன்; மயங்கிக் கீழே விழுந்தான். பாண்டியன் உயிர் பிரிந்தது. அதனுல் அழியாத பெரும்புகழை அடைந்தான். அரசமா தேவி மன்னன் நிலை கண்டாள். மனமுடைந்துபோனுள்.

கணவனை இழந்த கண்ணகிக்குத் தான் ஆறுதல் எதுவும் சொல்லமுடியாத நிலையை எண்ணினாள். 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்லென, இணையடி தொழுது வீழ்ந்தனள்' என ஒரே பரபரப்பும் சோகமுமாய் இந்நிகழ்ச்சிகள் முடிகின்றன.

பெற்ற தாயை இழந்த ஒருவருக்கு சிற்றன்னையைக் காட்டித் துன்பத்தை ஆற்றுவிக்கலாம். அவ்வாறே தந்தையை, தனயனை, அண்ணனை இழந்தவர்களுக்கு அடுத்துள்ள மற்றவர்களைக் காட்டி ஆறுதல் கூறலாம். கணவனை இழந்துவிட்ட மனைவிக்கு யாரைக் காட்டி ஆறுதல் கூறுவது? அந்த இடத்தில் கணவனைத்தவிர வேறொருவரை வைத்துக் கூற முடிவதில்லையல்லவா? அரசமாதேவியின் எண்ணத்திலே பிறந்து, அவள் வாழ்வின் இறுதி வார்த்தையாய் வெளிவந்தன இவை. பாண்டியன் உயிரைத் தேடிச் செல்பவள் போல—பாண்டிமாதேவியும் உயிர் விட்டாள்.

அரண்மனையை விட்டகன்றாள் கண்ணகி. தெருவிலே வந்துகொண்டிருக்கிறாள். சுரந்த கண்ணீர் வழிந்து வருகிறது. அடர்ந்த கூந்தல் விரிந்து கிடக்கிறது. எஞ்சிய சிலம்பை ஏந்தி வருகிறாள். இந்நிலையில் கண்ட பாண்டியன் உயிர் இழந்த உடலானான். இதை நாம் காண நேர்ந்ததே என மதுரை மக்கள் மனம் கலங்கினர். அநீதி செய்தவர்களை அறம் நின்று கொல்லும் என்பதை இந்நிகழ்ச்சியால் இளங்கோ புலப்படுத்தக் காணுகிறோம்.

மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
கையிற் தனிச்சிலம்பும் கண்ணீரும்—வைகைக்கோன்
கண்டளவே தோற்றான் அக்காரிகைதன் சொற்செவியில்
உண்டளவே தோற்றான் உயிர்.



## 16. சினத்தீ

முற்பகல் செய்த தீவினைக்குப் பிற்பகல் இரையா வான் என்பதற்கொரு எடுத்துக் காட்டாய் முடிந்த பாண் டியன், அதற்கொரு இலக்கியமாகவும் ஆகிவிட்டான். மன்னன் உயிர் இழந்தான்—அவன் மாதேவி உயிர் விட் டாள்—மதுரை யாதாயிற்று? இனி அதைத்தான் இளங்கோ நமக்குக் கூறுகிறார்.

பாண்டியன் முன்னிலையிலே, சோழ நாடாண்ட செங் கோல் மன்னர்களின் நீதியை நெறியை எடுத்துக் கூறி இடித்துரைத்த கண்ணகி, புகார்நகர மகளிர் எழுவரின் கற்பறம் நிகழ்த்திய செயலைக் கூறுகிறாள். இத்தகைய மகளிர் பிறந்த பூம்புகார் நகரிலே யானும் பிறந்தேன். அதுவும் உண்மையாகி யான் கற்பரசி என்பதும் மெய்யா னால் மன்னனோடு மதுரையையும் அழிப்பேன். எனப்பெருந் தேவி உயிர் பிரிந்ததையும் அறியாது கண்ணகி பேசி நீங்கி னாள்.

மதுரை நகர மகளிர்களையும் ஆடவர்களையும் மற்ற வர்களையும் நோக்கி யான் கூறுவதனைக் கேளுங்கள். என் னருமைக் கணவனைக் கொன்றதன் காரணமாக, மதுரை

மீது சினம் கொண்டேன். யானே குற்றமற்றவள் எனக்கூறி இடதுமார்பைத் திருகி மதுரையை மும்முறை வலம்வந்து வீசி எறிந்தாள். அக்கணமே சூழ்ந்து சூழ்ந்து பற்றி எழுந்தது தீ! பரவிப்படர்ந்தது செந்தீ. அனல் கொழுந்துவிட்டு ஊழித்தீயோ என்னும்படி தாவிப் பற்றியது. ஆயர்பாடி அடுக்களையில் அடுப்புமூட்ட வழியறியாது நின்ற கண்ணகி—இங்கே மதுரை நகரையே நெருப்பிலே காணவைக்கிருள். அதிசய ஆற்றல்! பாண்டியன் ஆராயாது புரிந்த செயலால் தன்னுயிர் விட்டதையும் அரசமாதேவி கணவனுயிர் தேடிப் பிரிந்ததையும் அறியாது சித்திரப்பாவைபோல ஆசான் முதலிய அனைவரும் அசைவற்றிருந்தனர். அப்பொழுது தேர் வீரரும், யானை வீரரும், குதிரை வீரரும், காலாட் படையினரும் தீ அணைக்க விரைந்தனர். பாண்டியன் அரண்மனையில்கண்ணகியின் பிரவேசம் நிகழ்ந்த பிறகு,அதுஎத்தகைய அதிர்ச்சியை உண்டு பண்ணி இருக்கிறது என்பதை—ஆசான் முதலியோர், அரசன் அரசி உயிர் பிரிந்ததையும் நகரில் தீபுகுந்ததையும் உணராது அசைவற்று இருந்த நிலையிலிருந்து—நாம் உணர்ந்து கொள்ளுமாறு கவி காட்டிச் செல்லுகிருர்.

இனி சூழ்ந்த தீ, புகுந்த சில இடங்களையும் பரபரப்பான சில காட்சிகளையும் நாம் காணலாம். பூச்சூடி, சந்தனம் பூசி,அணிபுனைந்து,ஆடை அழகு காட்டப் பள்ளியறையிருந்த மைத்தடங் கண்ணியரும், மைந்தரும் (கணவரும்) உச்சியில் முடித்த பூக்கள் உதிர்ந்துவிழ, மார்பிலணிந்த மாலை குலைந்து சிதைய புலவி இன்பம் துறந்து அலங்கோலமாய் அஞ்சிக் கலங்கினர். பட்டுவிரித்த பஞ்சணையிலே துயின்ற குதலைச் செவ்வாய்த் தவழ்நகைப் பிள்ளைகளை எழுப்பி எடுத்துக் கொண்டு தாய்மார் செவி

விப்பெண்டிரோடு அஞ்சி நடுங்கி ஓடினர். வந்த விருந்தினரை வரவேற்று, உபசரித்து இல்லறம் வளர்க்கும் மங்கைமார் கணவனை இழந்து, மன்னனை வென்று, மதுரையை எரித்த செயலை நேர்மை என்றும் நீதிஎன்றும் பல பல பேசினர். இங்ஙனம் பூமணத்தோடு, புதுமணம் துய்க்கும் பள்ளியறையிலே நிகழ்ந்த பரபரப்பையும், பெற்றெடுத்த பிள்ளையோடு உய்விடம் நோக்கி ஓடும் உருக்கமான காட்சியையும் காட்டிய கவி, நாடக மகளிர் அடைந்த கவலையை எடுத்துக் காட்டுகிறார்.

அரிய கலைகளாய் விரிந்த அறுபத்து நான்கினையும் கற்றுத் தெளிந்த கணிகையர் வாழும் இல்லங்களிலே முழங்கிய தண்ணுமை, எழுந்த முழவம், நுண்ணிசை வேய்ங்குழல், இனியயாழ்—இவையெல்லாம் ஒலி அடங்கி எடுப்பாரற்றுத் தாய்முகம் காணாச் சேய்போல் ஒருபால் கிடந்தன. நடம்பயில் நங்கைமார், ஆடரங்கு இழந்து ஓடி நின்று 'இந்நாட்டிற்குப் புதியவளாகவந்து, கொண்ட கணவனை இழந்து, செங்கோல் தவறிய மன்னனைத்தன் சிலம்பினால் வென்று இவ்வூரைத் தீயிட்ட இந்த வீரபத்தினி எந்நாட்டினளோ? யார்பெற்ற மகளோ?' என்று வியப்படைந்து வினவினர்.

கற்புடைப் பெண்டிர் தொடங்கி கணிகையர் வரையிலும் கண்ணகியின் செயல் குற்றமற்றது என்பதைக் கதைப்போக்கிலே கவி வலியுறுத்திக் காட்டிச் செல்ல நாம் காணுகிறோம். மதுரை நகர் அடைந்த சோகத்தைப் பரவலாய் இனிக்காணலாம். மதுரையில் வழக்கமாய் நிகழும் அந்திவிழாக்கள் நின்றன. தீவேட்டலும், தெய்வம் பரவலும் நின்றன. மனைகளிலும் மாடங்களிலும் விளக்கவிழ்ந்து விட்டன. முரசு முழக்கமும் நின்றது. மன்னன் இழைத்த தீங்கிலே மதுரை நகரம் பாழ்பட்டது. இத்த

கைய மதுரையிலே, கண்ணகி, கணவனை இழந்த துன்பத்தோடு மனம் கொதித்து உலைபோல் பெருமூச்சு விட்டு மணிமாட வீதிகளிலே சுற்றித்திரிந்தாள். சிறிய தெருக்களிலும் கவலைதோய்ந்த முகத்தோடு காணப்பட்டாள். நடந்து வருவாள், மயங்கி நிற்பாள், அப்படி நிற்கு மொரு சமயத்திலே, நெருப்பின் வெம்மையைப் பொருது, அஞ்சி மயங்கிய மதுராபதி என்னும் தெய்வம் கண்ணகிக்குப் பின்னே வந்து நின்றது. கண்ணகிக்குப் பின்வந்து மதுரைத் தெய்வம் நிற்கும் காட்சியில் தெய்வமும் கற்பரசியிடம் அஞ்சிய இயல்பு புலனாகிறது. 'நங்கையே, என் குறையினைக் கேட்பாயாக' என்ற ஒலிகேட்டுக் கண்ணகி முகந்திரும்பினாள். யார் எனக்கேட்டாள். என் துயரம் அறிவாயோ என்று வினவினாள். வினவிய கண்ணகிக்கு மதுரைத் தெய்வம் கூறுகிறது: உன்னுடைய பொறுத்தற்கரிய பெருந்துன்பத்தை யான் அறிந்தேன். அதற்காகவருந்துகிறேன்.யானே இம்மதுரை நகரத்தேயுள்ளேன். மதுராபதி என்பது என்பெயராகும். பாண்டியன் செயலிலே, பிறந்த அநீதியும், அதனால் கோவலன் கொலைப்பட்டதும் ஊழ்வினைப் பயனேயாகும். இம்மதுரையில் மறையோசை கேட்டதே யல்லாமல், மணியோசை கேட்டதில்லை. பகைவரால் பாண்டியன் பழி தூற்றப் பட்டானே அல்லாமல், குடிகளால் பழி சுமத்தப்பட்டதில்லை. அழகிய நெற்றியினையுடைய, மயிலின மாதர் கடைக்கண் நோக்கிலே இளமை என்கின்ற யானை, கல்வி என்கின்ற பாகனுக்குக் கட்டுப்படாமல் ஓடிய சமயத்திலும் [கட்டுமீறிய காமம்] பாண்டியர் ஒழுக்கத்திலிருந்து வழுவியதில்லை.

சோழநாட்டின் நீதிமன்னர்களைக் கண்ணகி கூறிய தற்கொப்பாகப் பாண்டிய நாட்டின் பழங்குடி மன்னரின் வெற்றியும், கொற்றமும் மதுராபதியால் கூறப்படு

கின்றன. பொற்கைப் பாண்டியன் வரலாறு போன்ற சிலவற்றைக் கூறுகிருள். 'இன்று தொட்டுப் பதினன்கா வதுநாள் கழிந்தபிறகு, நீ உன் கணவனை, வானவர் வடிவில் கண்டு கூடுவாய்' என்று கூறி மதுரைத் தெய்வம் மறைந்தது.

கண்ணகி துர்க்கை கோயிலுக்கு வந்தாள். வாயிலில் தன் கைவளையல்களைத் தகர்த்தெறிந்தாள். இந்நிலையில் கண்ணகி கடுஞ்சபதம் ஒன்று எடுத்துக் கொள்ளுகிருள். கணவனைக் காணும் வரையிலும் உட்காருவதுமில்லை, ஓய்ந்து நிற்பதுமில்லை என்று கூறுகிருள். எனவே, கணவனைக் காணும் வரையிலும் நடந்து, சினம் தணியாது திரிகிருள். மதுரைமாநகரின் மேற்குவாசல் வழியாக அந் நகரை விட்டு அகலுகிருள். அப்பொழுது:

கீழ்த்திசை வாயில் கணவனெடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் வறியேன் பெயர்க.

என்று கூறுகிருள். மதுரையின் கிழக்கு வாசல் வழியாகக் கைபிடித்த கணவனேடு புகுந்த கண்ணகி, மேற்கு வாசல் வழியே கணவனை இழந்து வறியளாய்ச் செல்வதை அவள் வாய்விட்டுச் சொல்லும்போது, நம் உள்ளத்திலும் அந்தச் சோகம் பலமாக வந்து வருத்துகிறது. இங்கே சோகரசம் ததும்புகிறது!

இரவென்றும் பகலென்றும் பாராமல், பள்ளமென்றும் மேடென்றும் நினையாமல், கால்போன போக்கிலே வைகைக்கரை வழியே வழிநடந்து நெடுவேள் குன்றம் என்னும் மலைமீது ஏறினுள் கண்ணகி.

★

# 17. குறவர் கண்ட காட்சி

கொண்ட கணவனை அல்லாது கண்டதெய்வம் ஒன்றில்லை என்று வாழ்ந்து காட்டிய கண்ணகியிடம் நெருங்கத் தெய்வமும் அஞ்சியது புதுமையும் வியப்புமாகும் பொங்கி எழுந்த கண்ணகியின் கடுஞ்சினம் சிறிது சிறிதாகத் தணிந்து — அவிந்து — நெடுவேள் குன்றத்தில் [திருச்செங்கோட்டு மலை] கால் வைத்துக் கண்ணகி ஏறியவுடனே முற்றிலும் மறைந்து விட்டது.

நம்முன்னோர், எத்தகைய துன்பத்தையும் ஆற்றுவிக்கும் மதத்தான ஒரு சக்தி காலத்திடமிருப்பதாய்க் கூறிய பேருண்மை கண்ணகி வாழ்விலும் மெய்யாகி விட்டது. நெடுவேள் குன்றத்தின் உச்சியிலே, பொன்னிற வேங்கையின் தண்ணிய நிழலிலே, சினமழிந்து புலனொடுங்கி, சிலைவடிவாய் அசைவற்று நின்ற கண்ணகியை, மலைவாழ் குறவர்கள் கண்டனர். இமை மூடாது நின்று பார்த்தனர். செய்தொழில் மறந்தனர். சிந்தை படிந்தனர். மெல்ல அருகே வந்தனர். 'அம்மையே' என்று அழைத்துத் தலைமீது கை குவித்தனர்.

தெய்வமும் தொழுத கண்ணகியைக் குறவர் தெய்வமாகக் கருதியதில் வியப்பெதுவுமில்லை. தாங்கள் யார் என்பதைக் கண்ணகியிடம் தெரிவித்துக் கொள்ளுகின்ற குறவர்கள் நிரம்பப் பணிவும் பயமும் ஆர்வமும் புலனுகப் பேசுகின்றனர். 'அன்னையே, நாங்கள் தினைப்புனத்தில் கதிர்கவர ஓடிவரும் கிளிகளை ஓட்டுவோம். கவண்கொண்டு கிளிகளைவிரட்டுவோம். அருவிபோய்ஆடுவோம். சுனையிலே புகுந்து நீர் குடைந்து விளையாடுவோம். இத்தகைய எங்கள் முன்னே, நாங்கள் அஞ்சி நடுங்குமாறு ஒரு முலை இழந்து நிற்கின்ற நீ யார்? எங்கள் கண்ணுக்கு என்னவோ, வள்ளியம்மை போலக் காணப்படுகிருய். நீ யாரோ, சொல்' எனக் கேட்டு, மறுமொழி பார்த்து நின்றனர் மலைவாழ் குறவர்.

கண்ணகியைக் கண்டவுடனேயே, தெய்வத்திற்கு ஒப்பான ஒரு உள்ளுணர்ச்சி குறவர்கட்கு உண்டாகிவிட்டது. அவள் வடிவு கண்டு அஞ்சினர். ஆனல் அதில் அவர்கள் அறிவிழந்து போகவில்லை. அதைத்தெளிவாய்க்காட்டி நிற்கிறது அவர்களது பேச்சு. எடுத்த எடுப்பிலே, 'நீயார்?' என்று கண்ணகியைக் கேட்கவில்லை. தம்மை அறிமுகம் செய்து கொண்டு, அவளை அறிந்துகொள்ள ஏற்பட்ட ஆசையை, நயமாய் வெளிப்படுத்தினர். தம் குடி வந்த வள்ளி அம்மை போலக் காணப்படுவதாய் மெல்லக் கூறினர். உறவும் அறிந்து கொள்ளத்தக்க உரிமையுமுடையார் போலக் குறிப்பாய்க் காட்டினர். இங்கே இளங்கோ, மலைவாழ் குறவர் பேச்சிலும் திருந்திய நாகரிகத்தைக் காட்டிச் செல்லுகிருர். குறவர் கேட்ட கேள்விக்குக் கண்ணகி, சிறிதும் சினமின்றி, 'கணவன் கொலைப்பட்ட காரணத்தால், மன்னனேடு மதுரையை அழித்த தீவினையேன்' என்று கூறுகிருள். இளங்கோ விரிக்கின்ற மதுரைக் காண்டத்தைக் கண்ணகி, மலைவாழ்

குறவர்க்கு மிகச் சுருக்கமாய்ச் சில சொற்களில் உருக்க மாய்க் கூறிவிடுகின்ருள்.

இக்காவியக்கதை செல்லும் போக்கிலே, கண்ணகியை நோக்கி நீ யார் எனக் கேட்டவர் இருவர். 'நீர் வார் கண்ணை எம்முன் வந்தோய், யாரையோ?' என்ருன் பாண்டியன். 'முலையிழந்து வந்து நின்றீர், யாவிரோ?' என்றனர் மலைவாழ் குறவர். 'யாரையோ' என்ற வினவில் அரசாண்மையும், 'யாவிரோ' என்ற வினவில் அச்சம் கலந்த பணிவும் தோன்றக் காணுகிருேம். பாண்டியன் 'நீ யார்?' என்றபோது வந்த விடையிலே சினம் சீறி எழுந்தது. மலைவாழ் குறவர் 'யாவிரோ' என்றபோது அது தணிந்துவிட்டது. இவ்வினுக்களுக்கு எழுந்த விடைகள் இக்காவியக்கதையின் உயிர் நாடியாயிருப்பதை நாம் அறிந்து வருகிருேம்.

மலைவாழ் குறவர் கண்ணகியை மறுமுறை வணங்கி நின்றனர். அதே சமயம் மலர்மழை பொழியக் கண்ணகி கோவலனேடு வானூர்தி வழியே சென்று மறையக் கண்டனர். அந்நிலையில், கண்கண்ட தெய்வம் இக்கண்ணகியே என எண்ணினர். அச்சம் தெளிந்தனர். ஆவேசம் கொண்டனர். ஊரையே ஒன்ருகத் திரட்டினர். 'இவளைத் தெய்வமாகக் கொள்ளுங்கள், அருவி பாய்கின்ற பறம்பிலே, வேங்கை நிழலிலே வந்து நின்ற இவளைத் தெய்வமாகக் கொள்ளுங்கள்' எனப் பெருமுழக்கம் செய்தனர். குறிஞ்சி நிலத்திற்குரிய, பறையை முழக்கினர். கொம்பை ஊதி மணியை அடித்தனர். குறிஞ்சிப் பண் இசைத்தனர். நறும்புகை எழுப்பி, வற்ருு வளஞ்சுரக்கப் பூப்பலி செய்தனர். இங்ஙனம் விழா எடுத்தனர். துன்பம் வந்த நாளிலும், இன்பம் எய்தியபொழுதிலும், பண்டையோர் குரவையாடும் இயல்பினர் என்பதை, ஆயமகளிர் ஆடிய

குரவையாலும், இனி-மலைவாழ் குறவர் நிகழ்த்தும் குரவை யாலும் நாம் உணரலாம். இனி, குறமகளிர் ஆடிய குரவையைக் காண்போம்.

பெருமுழக்கமிட்டு வந்து விழுகின்றது மலையருவி. அதைக் காட்டி, ஆடிவருவோம் என்று தலைவி தோழியை அழைக்கிருள். மரச்சூழல்களிலே, தலைவன் மறைந்து நிற்கிருன். அதைத் தலைவி நுணுக்கமாய்த் தெரிந்து கொண்டு, அவன் காது கேட்கச் சொல்லுகிருள்.

ஆடுதுமே தோழி ஆடுதுமே தோழி
அஞ்சலோம் பென்று நலனுண்டு நல்காதான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி ஆடுதுமே!

என்று ஆடிப்பாடி அருவியாட அழைக்கிருள். 'அஞ் சாதே' என்று சொல்லி, நம்மைத்தேற்ருமல், நம் அழகை நுகர்ந்து பராமுகமாய் இருந்து வருகிருன் தலைவன். இது அவனது மலையருவியே எனினும் நீராடுவோம் என்று தோழியை அழைக்கிருள். தலைவனிடம் நேரில் சொல்ல முடியாத ஒன்றை, அவன் காது கேட்க மறைமுகமாய்க் கூறிவிட்டதில் தலைவிக்கு, உள்ளார்ந்த உவகைதான். ஆனல் அவன் செய்த தவறுக்கு அவன் நாட்டு மலை யருவியை வெறுக்க அவள் விரும்பவில்லை. நியாயமு மில்லை யல்லவா? 'ஆடுதுமே தோழி ஆடுதுமே தோழி' என்று அடுத்தடுத்துச் சொல்லி அவள் அழைக்கும் சொற் களிலே உண்டாகும் ஆர்வந்தான் அந்த அருவியினும் வேகமாய் வெளிப்படுகிறது. அவனிடத்து அவள் கொண்ட காதலோ—அந்த மலையினும் மாணப்பெரிதாய் உருவங் கொள்கிறது. மேலும் தலைவி பேசுகிருள்: 'அவரது மலை யின் கண்ணே, பூக்களொடு கலந்து வந்த புதுப்புனலோடு

புலந்துகொள்ளும்படியாக, அதனிடத்துச் சிறு பிழையும், நான் கண்டதில்லை.

பிறகு நீ கண்ட பிழைதான் என்ன? கொண்ட வருத்தம்தான் யாது? என்ருள் தோழி. அதற்குத் தலைவி கூறுகிருள்:

போதாடி வந்த புதுப்புனல் மற்றையார்
மீதாடின் நோம்தோழி நெஞ்சன்றே

'ஆனல் அவ்வாறு மலரோடு கலந்து வந்த புதுப்புனலிலே, மற்றைய மகளிர் மூழ்கி எழுந்தால் மனம் என்னவோ வருந்துகிறது தோழி' என்கிருள். தலைவனிடம் தனக்குள்ள அன்புடைமையை இதனினும் சிறக்க இனி எவ்வாறு கூற முடியும்? மலையும், அருவியும் அதில் மூழ்கி எழத் தக்க முழு உரிமையும் தனக்கன்றிப் பிறர்க்கில்லை என்ற அவள் எண்ணத்திற்கு மாருகப் பிறமகளிர் அதில் நீராடினல், அவள் மனம் வருந்துகிறதாம்! இதைக் காது குளிரக் கேட்கிருன் தலைவன். அவன் நாட்டு அருவியினிடத்து இத்தனை அன்பானல், அவனிடத்து அவள் கொண்ட காதலை நாம் அளவிட்டுக் கூற முடியுமா?

தலைவியை மணம் முடிப்பதிலே, தலைவனுக்குக் காலம் நீண்டுகொண்டே போகிறது. தலைவனை நினைத்து நினைத்துத் தலைவி துரும்பாய் மெலிந்துபோகிருள். மலைநாடனை நினைத்து மகள் மெலிவதை அறியமாட்டாத அன்னை 'தெய்வம் தீண்டியதோ, தீவினை புகுந்ததோ' என உண்மை யறியாது, பூசாரியை அழைத்து நோய் நீக்க முயலுகின்ருள். இதை யறிந்த தலைவி தோழியை நோக்கி: 'தோழி! இது சிரிப்பிற்கு இடமாகிவிட்டது. மலைநாடனல் வந்த காதல் நோயைத் தீர்க்கப் பூசாரியாகிய

வேலன் என்பான் வருவானும். அப்படி அவன் வந்தால்- அறிவற்றவனே யாவான். இல்லையா? நோய்க்கான காரணத்தை யறியாது கந்தன் (சிவன் மகன்) அப் பூசாரி மேல் வருவானுனல், அப்பூசாரியைப் பார்க்கிலும், அவன் அறிவில்லாதவனே யாவான். ஏனெனில் மலைநாடன் வருகை புரிந்தால் இந்நோய் நீங்கும். வேலன் (பூசாரி) வெறியாட்டினுலும், முருகன் வெறிக்களம் வருவதாலும் இது தீராதே' என்று பேசிய தலைவியும் கேட்ட தோழியும் முடிவில் பத்தினியாகிய கண்ணகியைப் பாடிப் பரவுகிருர்கள்.

பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகம்
கோமுறை நீங்கக் கொடிமாடக் கூடலைத்
தீமுறை செய்தாளை ஏத்தியாம் பாடுகம்

'அரசு பிழைத்து அநீதி இழைத்தமையால் மாடங்கள் நிறைந்த மதுரையை, மன்னனேடு அழித்த கண்ணகியைப் போற்றி நாம் பாடுவோம்' என்ருள் தலைவி.

தீமுறை செய்தாளை ஏத்தியாம் பாடுங்கால்
மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே

இவ்வாறு அவளை நாம் பாடி வழிபடும்போது மலை நாடன் வந்து மணம் முடித்துப்போக வேண்டுவோம் என்ருள் தோழி. இவ்வாறு இருவரும் பாடிய பண்ணை, பேசிய சொற்களைச் செவி குளிர, சிந்தை குளிர மறைவிலிருந்து கேட்ட தலைவன் விரைவிலே வந்து மணம் முடித்துக் கொள்ளுகிருன்.

மலைவாழ்வேடர் மகளிர் இங்ஙனம் குரவை ஆடிய பிறகு முடிவிலே தம் சேரவேந்தர் நீடுவாழ வாழ்த்தி முடித்தனர்.



## 18. பேராற்றங்கரையில் சேரவேந்தர்

தமிழகத்தின் ஒரு பகுதியான சேரபூமியிலே, கண்ணகி வந்து புகுந்து சிலைபோல் நின்ற செய்தியை மலைவாழ் வேடர் மனைமுழுதும் புயலெனப் பரவியது. அதே சமயம், சேர வேந்தனாகிய செங்குட்டுவன், சேரமா தேவியோடு மலைவளங்காணப் பரிவாரங்களுடன் பேராற்றங்கரையிலே வந்து தங்கினான்.

வானத்தை முத்தமிடும் மலைகள்; மலைத்தொடர்கள்; வளங் கொழித்து முழங்கிவரும் அருவிகள்; மலர் தூவி; மணம் பரப்பும் பொழில்கள்; சந்தனம், கோங்கு வேங்கை, கொன்றை, நாகம், மஞ்சாடி மரங்கள் அடர்ந்து இருமருங்கும் நிற்பப் பெரு மலையிடையே, ஊடுருவிச் செல்லும் பேராறு சேரர்க்கு வளம் நல்கி வருகிறது. சோழருக்குக் காவிரியும், பாண்டியர்க்கு வைகையும், சேரருக்குப் பேராறும் வற்றாதவளத்தை உண்டாக்கி வருகின்றன.

மலைவாழ் குறவர் ஆடிய குரவையும், கொடிச்சியர் இசைத்த பாடலும், தினைகுற்றும் மகளிரது வள்ளைப் பாட்டும், தினைப்புனத்தில் எழுந்து எதிரொலிக்கும்

ஆலோலமும், தேனெடுக்கும் குறவர் ஓசையும் பறை போல் முழங்கும் அருவியொலியும், புலியொடு பொருத யானை முழக்கமும், குழியிலே விழுந்த யானையைப் பிடிக்கும் பாகரது ஆரவாரமும் ஆகிய இவ்வோசையெல்லாம் ஒன்று கலந்து மலை முழுதும் பரவி எதிரொலித்தன. இயற்கை அன்னையின் உவகையொலியோ என எழுந்தன.

சேர அன்னை தன் மக்கட்குப் பாலெனச் சுரந்து அமிழ்தென நல்கிய பேராற்றின் தீம்புனல் கரையிலே, செங்குட்டுவன் தங்கிய செய்தியை அறிந்த குறவர்கள் தமக்குரிய வளங்களை எடுத்தும் ஏந்தியும் சுமந்தும் வந்து அவன் திருமுன்னர் நின்றனர். யானைத் தந்தம், சந்தனக் கட்டை, சிந்துரக்கட்டி, அகிற்குவியல், அஞ்சனத்திரள், அதிதாரம், ஏலச்செடிகள், மிளகுக்கொடிகள், கிழங்கு வகைகள், தேங்காய், கரும்பு, மாங்கனி, பலாக்கனி, வாழைக்கனிகள், படலை மாலை, பூங்கொடிகள், சிங்கக் குட்டி, புலிக்குட்டி, யானைக்குட்டி, காடிக்குட்டி, குரங்குக்குட்டி, மான்குட்டிகள், கானகக்கோழி, தேன்மொழிக் கிளிகள் இவை மலைவாழ் குறவர் கொண்டு வந்த பொருள்கள். சேரனது கொற்றமும் வெற்றியும் கூறி வாழ்த்தி வணங்கினர். பின்னர் தாம் கண்ணுற் கண்ட அதிசயத்தை இவ்வாறு கூறினர். 'அரசே, என்ன ஆச்சரியம்! இம்மலைமீது அதோ தெரிகிறதே அந்த வேங்கையின் நீழலிலே ஒரு காரிகை வந்து நின்றாள். ஒருமுலை இழந்து காணப்பட்டாள். கணவனை இழந்து கடுந்துயர் பெற்றாள். இழந்த கணவனை தன் கற்பால் கண்டு அவனொடுங்கூடி மறைந்தாள்! ஆ! என்ன வியப்பு!'

எந்நாட்டாள் கொல்? யார்மகள் கொல்லோ
நின்னாட்டு யாங்கள் நினைப்பினும் அறியேம்
பன்னூறு ஆயிரத் தாண்டு வாழியர்

'அவள் எந்நாட்டவளோ? யார் பெற்ற மகளோ? அறியோம். நினது நாட்டில் இத்தகைய மகளைக் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. அவள் பல நூறுயிரம் ஆண்டு வாழ்க!' என்றனர்-என்று அவர்கள் சொல்லி வாய்மூடு முன்பே, தண்டமிழ்க் கவிஞராகிய சாத்தனூர் எழுந்தார்.

ஒண்தொடி மாதர்க்கு உற்றதை எல்லாம்
திண்திறல் வேந்தே செப்பக் கேளாய்

எனத் தொடங்கிய சாத்தனூரைச் சேரவேந்தரும், இளங்கோவடிகளும், ஆவலோடு திரும்பி அவர் முகம் பார்த்தனர். சாத்தனூர் வாக்கிலே பிறந்த சில மணிமொழிகள் சிலப்பதிகாரச் சுருக்கமாய் அப்பொழுது வெளிப்பட்டன. கதையின் உயிர் நாடிகள் துடி துடித்து விறு விறுப்போடு ஒன்றன் பின் ஒன்றாய் ஓடிவந்தன. 'செப்பக்கேளாய்' என்ற சாத்தனூர் வாக்கிலே, 'தீவினைச் சிலம்பு காரணமாக' எனக்கதை ஆரம்பமாவதை நாம் நன்கு சிந்திக்க வேண்டும். கதை முழுதும் பரவிக்கிடக்கும் சோக உணர்ச்சிக்குக் காரணமான சிலம்பே, கதை விரியக் காரணமாயும் நின்றதைச் சாத்தனூர் எடுத்த எடுப்பிலே, புலப்படுத்தக் காணுகிறோம். இளங்கோவின் இக்காவியக் கதை காவிரிக் கரையிலே பிறக்கிறது. ஆனாலும் வைகைக் கரையிலே பிறந்த சாத்தனூர் வாக்கிலே வெளிப்படும் இக்கதையையே, இளங்கோ பெருக்கி, பெருங்காவியமாகப் பாடினூர் என்பதே பொருந்தும்.

'ஆய்தொடி அரிவை கணவற் குற்றதும்' என மேலே தொடங்கிக் கண்ணகியின் கணவனுக்கு நேர்ந்ததும் - என்று கூறினாரேயல்லாது நேர்ந்தது இன்னது எனக் கூறவில்லை. அது அவசியம் கூறியாக வேண்டிய சம்பவமாகும். ஆனல் மலைவாழ் குறவர்களால் அது ஒருவாறு மன்னனுக்கு உணர்த்தப்பட்டுவிட்டது. எனவே சாத்த

னூர் தன் நாவால் மீண்டும் அதை விரிக்க மனமின்றி விட்டனராயினும் குறிப்பால் அச்சோகத்தை எண்ணு மாறு இடம் வைத்துச் செல்லுகிறூர். தன் கையிலிருந்த மற்றொரு சிலம்பால், மன்னனைக் கண்ணகி வென்றதும், அதனூல் அவன் மடிந்ததும் 'மன்னன் செல்வுழிச் செல்க யான்' என்று பாண்டிமாதேவி, 'தன்னுயிர் கொண்டு, அவனுயிர் தேடுவாள் போல' அவள் உயிர் பிரிந்து சென்ற தையும், பின்னர் கண்ணகி சினம் தணியாது மதுரையை எரியுண்ணச் செய்ததையும், உருக்கமாய், உணர்ச்சி மயமாய்த் தாம் மதுரையிலே, கண்ணுற் கண்டதைச் சாத்தனூர் கூறிமுடித்த போது, சேர வேந்தரும் - இளங் கோவும் அக்காட்சிகளையெல்லாம், தாங்களும் மதுரையில் சாத்தனூருடனிருந்து கண்ணுற் கண்டது போன்ற ஒரு மன உணர்ச்சியை அடைந்தனர். தவறிழைத்த பாண்டிய னும், அநீதியைச் சுட்டெரித்த கண்ணகியும், அவர்கள் உள்ளத்திலே மாறி மாறித் தோன்றி மறைந்தனர்.

கடலெனத் திரண்ட படையினையுடைய மன்னனைக் காட்டி, கையிலே சிலம்பொன்றை ஏந்திய இளம் பெண்ணையும் காட்டி அவள் மன்னனை வென்றதாய்ச் சாத்தனூர் சொல்வது கண்ணகியின் பேராற்றலைப் பேசிய தாக முடிகிறது. இச்செயல் புதுமையாக - வியப்பாக - ஆனூல் கண்ணுக்கு முன்னே கண்ட காட்சியாகக் கூறு கிறூர். பாண்டியனை - 'வலம் படுதானை மன்னவன்' என்றும் கண்ணகியை 'சிலம்பொடு சென்ற சேயிழை' என்றதும் இங்கு ஒப்பிட்டு உயர்வு காணத்தக்கதாகும். மதுரையை வாழ்விடமாகக்கொண்ட சாத்தனூர் கண்ணகி கற்பறம் நிகழ்த்திய செயல்களைத் தம் கண்ணுற்கண்ட காரணத்தால், அவர் உள்ளம் எனும் கோயிலிலே, கண்ணகியார் - பத்தினியாய் - பெரும் பத்தினியாய் -

மாபெரும் பத்தினியாய், உருக்கமாய் உருக்கொண்டு விட்டதை நாம் உணருகிறோம். இவ்வாறு கூறுவதன் மூலம், கொடுங்கோலின் தன்மையையும், ஆதனல் விளையத்தக்க தீமையையும் காட்டி உணரவைக்கிருர். இதே கருத்தைக் கண்ணகி உன் நாட்டிற்கு வந்ததன் மூலம் வலியுறுத்துகிருள் என்று சாத்தனர் கூறி முடித்தார்.

கேட்ட செங்குட்டுவன், பாண்டியன் முடிவுக்கு வருந்தினன். வருந்தியவனய்:

எம்மோ ரன்ன வேந்தர்க் குற்ற
செம்மையின் இகந்தசொல் செவிப்புலம் படாமுன்
உயர்பதிப் பெயர்ந்தமை உறுக ஈங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நீத்துச் செங்கோலாக்கியது

எம்மைப் போன்ற அரசர்களது செவியிலே, தன் பழிச் சொல் படுமுன்னமேயே, உயிரைவிட்டு வளைந்துபோன செங்கோலை, விட்ட உயிரால் நிமிர்த்தான் பாண்டியன். இறந்தும் பாண்டியன் இறவாது காத்தான் நீதியை. அரசனயிருந்து குடிகளைக் காத்தல் என்பது எளியதோ? மழைவளம் குன்றினலும், மன்னுயிர்களுக்குத் துன்பம் நேர்ந்தாலும், மன்னன் அஞ்ச வேண்டியவனகிருன். கொடுங்கோலுக்கு அஞ்சி, செங்கோல் செலுத்தி வாழும் மன்னர் குடிப்பிறத்தல் துன்பமல்லது, இன்பமாக மாட்டாது எனச் சாத்தனருக்குக் கூறினன். பக்கம் திரும்பி அரசமாதேவியாகிய வேண்மாளை நோக்கினன்.

உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்த சேயிழை தன்னினும்
நன்னுதல்! வியக்கும் நலத்தோர் யார்?

இறந்தான் என்றதும் இறந்த பாண்டிமாதேவியும் கணவனை இழந்த சினத்தோடு இங்கு வந்த கண்ணகியும் ஆகிய இருவரில் எம்மரசி வியக்கத்தக்க சிறப்பினையுடையார் யாவர் என்று கேட்டான் செங்குட்டுவன். 'பாம்பறியும் பாம்பினது கால்' என்பதுபோல பெண் மக்களின் தரத்தை ஒரு பெண் மகளே அறியத் தகுதியுடையவள் என அரசன் எண்ணியது சால்புடையதே; பாண்டிமாதேவியின் ஆறிய கற்பையும், கண்ணகியின் சீறிய கற்பையும் ஒப்பிட்டு உயர்வு காணல் அத்தனை எளிதாய் அரசிக்குப்படவில்லை. மௌனத்தை மேற்கொள்ளவும் மனமில்லை. எனவே ஒருவாறு உயர்வை உய்த்துணர வைக்கும் நெறியிலே பேசுகிறாள். பாண்டியன் இறந்ததும் இறந்த பாண்டிமாதேவி வானவர் நாட்டில் பெருநலம் பெறுக! 'நம் அகல் நாடடைந்தவிப் பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்' எனக் கண்ணகியை வழிபாட்டிற்குரியவள் என உணர்த்துகிறாள். இவ்வுரையாடல்களில் சேரமாதேவிக்கு நிகழ்ந்தனபற்றிப் பேசுவதிலும் இனி நிகழ்வன பற்றிப் பேசுதலே, சால்புடைமையாகும் என எண்ணினள் போலும். இங்கு வேண்மாளை வேந்தர்க்குத் தகுதியான அரசியாக இளங்கோ காட்டிச் செல்லக் காணுகிறோம்.

வேண்மாளின் விருப்பமே தன் விருப்பமாகக் கொண்ட வேந்தன் அமைச்சரை நோக்குகிறான். நோக்கிய நோக்கிலே, பொருளுணர்ந்த, அமைச்சர்: 'பத்தினிக்குச் சிலை எழுப்ப வேண்டும். அதற்குரிய கல்லை பொதிகை மலையிலிருந்தாவது இமயமலையிலிருந்தாவது எடுத்துவர வேண்டும். அதைக் காவிரியிலாவது, கங்கையிலாவது தூய்மையின் பொருட்டு நீராட்ட வேண்டும்' என்று கூறினர். கேட்ட செங்குட்டுவன்:

பொதியிற் குன்றத்துக் கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தல்
மறத்தகை நெடுவாள் எங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வருஉம் செய்கையோ அன்று

'வேந்தர் குடிப்பிறந்து வீரவாள் ஏந்திய யாம், கண்ணகியார்க்குப் பொதிகையிற் கற்கொண்டு, காவிரியின் பூம் புனலில் நீராட்டல் வீரமுமாகாது. வீரர் செய்யும் வழிபாடு மாகாது. அது சிறப்புமல்ல. செய்கையுமல்ல. எனவே, இமயம் செல்லவேண்டும். ஆங்கே கல்லெடுக்க வேண்டும். இமயத்தில் கல்லெடுக்க இமயவனே தடையாயினும் நாம் அஞ்சப் போவதில்லை. வடவர் தடையாயின் அவரை வெற்றிகொள்வோம். வஞ்சி சூடி வடதிசை நோக்கிச் செல்வோம். வாகை சூடி தமிழகம் நோக்கி வருவோம்' என அவன் கூறிமுடித்தபோது அஞ்சாத பேராண்மை அவனுக உருக்கொண்டதோ என அமைச்சர்கள் எண்ணினர்.

வில்லவன் கோதை என்னும் அமைச்சன் எழுந்தான். வாழ்த்தொடு வணக்கங் கூறினன். 'முன்னொருநாள் உன் முன்னே கொங்கர்கள் கொடி இழந்து ஓடினர். சோழனும், பாண்டியனும் புலிக் கொடியையும், கயற்கொடியையும் போரிலே போட்டு ஓடினர். இவ்வெற்றியின் முழக்கம் திசையெலாம் கேட்டது. கொங்கர், கலிங்கர், கருநாடர், ஆரியர் ஆகிய இவர்களுடன் தமிழ்ப்படை கலந்தபோது:

வடவாரிய ரொடு வண்தமிழ் மயக்கத்துன்
கடமலை வேட்டம் என்கட்புலம் பிரியாது

நீ, உன் யானைப் படையை விட்டுப் பகைவரை வேட்டையாடிய காட்சி—பிணக் காடாக்கிய காட்சி இன்றும் என் கண்ணைவிட்டு அகலவில்லை. எங்களுக் கெல்லாம்

கோமகளும் நினக்குத்தாயுமான நற்சோணைக்கு எடுத்த கல்லை நீ கங்கையிலே நீராட்டிய நாளில் ஆரிய மன்னர் ஆயிரவரை நீ ஒருவனாக நின்றுவென்ற காட்சியை, விழித்த கண் இமையாது வியந்து கண்டான் எமன். ஆகையால் இவ்வுலகமெல்லாம் ஒரே தமிழகமாக்க நீ எண்ணினையானால், அதை எதிர்க்கவல்லார் யார் என்று ஏகாதிபத்தியம் கொண்டு செலுத்த ஆற்றலுண்டு என்றும்—ஆனால் தங்களுக்கு அந்த எண்ணமில்லை என்றும் நயம்படப் பேசுகிறான். மேலும் இமயமலைக்குச் செல்வது போர் விரும்பியல்ல, கண்ணகியார்க்குக் கல்லெடுத்து வர எண்ணியே என்றும் வடநாட்டு மன்னர்க்கெல்லாம் இவ்வருகையை அறிவித்து மூவேந்தரது முத்திரையாகிய வில், கயல், புலி பொறித்த திருமுகம் அனுப்புவோம் என்றும் கூறி முடித்தான்.

மற்றொரு அமைச்சனாகிய அழும்பில்வேள் என்பான் ‘பகைவரது ஒற்றரெல்லாம் நம் தலைநகரில் தலைமறைவாய்த் திரிவதால்,இச்செய்தி அவர்கட்குக்கிடைத்துவிடும்’ என்று பணிவுடன் கூறினான். சேரவேந்தர் தம்உடன் பாட்டைத் தலையசைப்பால் புலப்படுத்தினர். பின்னர் பேராற்றங்கரையிலிருந்து, எல்லோரும் புறப்பட்டு வஞ்சிமா நகர் வந்தனர்.



## 19. வஞ்சியிலிருந்து வடநாடு செல்லல்

வஞ்சி நகரத்தின் மணிமாட வீதியிலே, பெருமிதமாய் அசைந்து அசைந்துவரும் முரச யானையின் மீதமர்ந்த வள்ளுவன், சேரவேந்தர் படைசூழ வடநாடு செல்வதை இடியெனப் பேசி, கடலென முழக்கி அறிவித்து வருகிறுன். வஞ்சி நகரத்து வஞ்சியரும் அவர் வாழ்வின்பத் துணைவர்களும் பிறரும் அணி அணியாய் நின்று கேட்டனர். தோள் தினவெடுத்த மறவரும், வாளுக்கு உணவு வந்தது என வாகைசூடும் வீரரும் கேட்டு மகிழ்ந்தனர்.

நான்கு வீதியும் வந்து ஒன்று கூடும் சதுக்கத்தில் முரசயானை வந்து நின்றது. அதன்மீதமர்ந்த வள்ளுவன் முதலில் தம் மன்னரை வாழ்த்தினுன். அவ்வாறே முடிவிலும் வாழ்த்துகிறுன். இந்த இருவகை வாழ்த்துக்குமிடையே, தான் அறிவிக்க வேண்டிய செய்திகள் அடங்கி இருக்கின்றன. சேரவேந்தர் இமயம் நோக்கிவரும் எண்ணத்தை முதலில் எடுத்துக் கூறுகிறுன். கற்பரசியாகிய கண்ணகியார்க்குக் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டிவர நினைப்பதைத் தெளிவாய்த் தெரிவிக்கிறுன். 'அவ்வாறு வரும்போது வடவரசர் திறை சுமந்து எதிர்வந்து காணுக' என்கிறுன். 'காணத்தவறினல், அவனது சினத்தின்

முன்னே சீரழிந்து சிதறுண்டு போவீர்கள்' என அறிவுறுத்துகிறான். இதை வலியுறுத்த சேரன் கடலொடு பொருது கொண்ட வெற்றியையும் மலையொடு (இமயம்) மலைந்து கண்ட கொற்றத்தையும் கேட்டு அறிந்து கொள்ளுங்கள் என்று எச்சரிக்கை செய்கின்றான். 'அவ்வாறு அறியவும் மாட்டீர்களானால், மனைவியை வெறுக்கும் தவத்தினை மேற்கொள்ளுங்கள்' என்று கூறிமுடித்தான்.

வஞ்சியிலிருந்து முழக்கிய இம்முரசொலி வடநாட்டின் இமயம் வரை சென்று எதிரொலித்தது. ஆம், அழும்பில்வேள் என்ற அமைச்சன் கூறியபடி தலைமறைவாய்த் திரியும் ஒற்றர்கள் மூலம் வடநாடு முழுதும் பரவிவிட்டது. சேரவேந்தர்க்கு நாடுபிடிக்கும் ஆசையோ எள்ளளவுமில்லை என்பதை வள்ளுவன் அறிவித்த வார்த்தைகள் காட்டுகின்றன. ஆனால் ஈடு இணையற்ற தலையாய வீரத்திற்குத் தகுதியான திறைப்பொருளை விரும்புவதாய்க் கூறிமுடிக்கிறான். இதனால் வள்ளுவன் குமரியிலிருந்து இமயம் வரை தலைமைக்குத் தம் சேரனினும் உயர்ந்த அரசரில்லை என்ற எண்ணத்தைக் காட்ட நாம் காணுகிறோம்.

முரசு முழங்கி அடங்கியது. அதே சமயத்தில் அரண்மனையில் அரசன் உள்ளத்திலே ஒரு எண்ணம் குமுறியெழுந்தது. சேரன் செங்குட்டுவன் தன் அரசாண்மை தோன்றப் படைவீரர் தலைவர்களை நோக்கினான். அவன் வாயுடையது தம் வாழ்வென்று எண்ணும் அவ்வீரர்கள், ஆவலும் ஆர்வமும் மலர்ந்த முகத்தினராய் அவன் சொல்வதை எதிர்பார்த்து நின்றனர்.

இமையத் தாபதர் எமக்கீங் குணர்த்திய
அமையா வாழ்க்கை அரசர் வாய்மொழி

நம்பால் ஒழிகுவ தாயின் ஆங்கஃது
எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சியும் தருஉம்

புண்ணியத் துறைகளிலே நீராடுதற்பொருட்டு, இமயமிருந்து இங்குவந்த முனிவர் சிலர்-கனகன்-விஜயன் என்னும் இரண்டு ஆரிய அரசர்கள்-தமிழ் வேந்தரை இழிவாகப் பேசியதாகக் கூறினர். தமிழக வேந்தர்களது ஆற்றலை, அவர்கள் அறியார்கள் போலும் என்றபோது உணர்ச்சி வசப்பட்ட படைத்தலைவர்கள் 'ஆம் ஆம்' என்றனர். தொடர்ந்து சேரன் 'பலமில்லாத வாழ்க்கையையுடைய அவ்வரசர்கள் கூறியது, நம்மிடத்தே தங்கியிருந்தால், அது நம்மைப்போன்ற வேந்தராகிய சோழ பாண்டியர்க்கும், இகழ்ச்சியைத் தந்ததாகும். தமிழகத்திலுள்ள ஒரு தனி அரசனை இகழ்ந்தாலும், அது தமிழக முழுவதையுமே இகழ்ந்ததாக முடியும். ஆகையால் கண்ணகியார்க்கு நாம் எடுத்துவரும் கல்லைக் கங்கையிலே, நீராட்டவேண்டும். கனக, விஜயர் முடித்தலையிலே அதை ஏற்றவேண்டும். வஞ்சிநகர் கொண்டுவந்து இறக்கவேண்டும். இவ்வாறு நான் செய்யேனயின் பகை யரசரைப் போரில் ஒடுக்காது, குடிமக்களை ஒடுக்கிய கொடுங்கோல் அரசனுக்கு ஒப்பாவேன், எனக் கடுஞ்சினத்தில் பிறந்த வஞ்சினங்கள் (சபதம்) வியப்பையும், வீரத்தையும் உண்டாக்கின.

ஆசான் அரசனை நோக்கி எழுந்தான்: 'இமயவரம்ப! ஆத்திமாலை சூடிய சோழனையும், வேப்பமாலை சூடிய பாண்டியனையுமல்லவா இகழ்ந்ததாய்க் கூறப்பட்டது. உன்னை இகழ்ந்து அவர்கள் உயிர் வாழவும் ஒண்ணுமோ? சினம் தணிக!' என்றான். இங்ஙனம் அவனது பேராண்மை தோன்றப் பலர் புகழ்ந்து பேசினர். வடநாடு செல்லும் படைத் தலைவர்கட்குச் சேரன் விருந்து செய்தான். வஞ்சி

நாடாளும் சேரவேந்தர் வாகை சூடிவருக என அனைவரும் வாழ்த்தினர்.

வஞ்சி நகரத்தின் ஆடரங்குகளிலே வணங்கிய கையினராய் நிற்கும் நாடக மகளிர் ‘வேந்தே, வாகையும் தும்பையும், பனம்பூ மாலையும் சூடி நீ அரசயானையில்—அம்பாரி மீதிருந்து பவனி வரும் காட்சியில் – எம் வளையல்களைக் கவரும் இயல்பினையாகுக’ என வாழ்த்தினர். குல மகளிரல்லாது பொதுமகளிர் என்பது தோன்றக் கவி இங்கு இவ்வாறு கூறிச் செல்லும் இயல்பு காண வேண்டும்.

காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை ஆகிய நால்வகைப் படைகளையும் படைத் தலைவர்கள் தலைமை ஏற்று அணிவகுத்து நடத்திச் சென்றனர். வஞ்சிநகரை விட்டகன்று குடகடலின் வழியாக, நிலம் நடுங்க, மலைமுதுகு நெளியக் கடலெனத் திரண்டு, நீலகிரிச் சாரலை அனைவரும், அடைந்தனர். அரசயானையின் மீதமர்ந்த சேரன் அதைவிட்டுக் கீழிறங்கி நிலத்தில் கால் வைத்தான். மெய்க்காப்பாளர் அடியீடு ஏத்தப் பெருமிதமாய் நகர்ந்து கூடாரத்திலே பொருந்திய அமளி மீது வந்தமர்ந்தான் செங்குட்டுவன்.



# 20. வேந்தர் முன் நிகழ்ந்த ஆடல்

சேரவேந்தர் அமளிமீது அமர, அமைச்சரும் பிறரும் அமர்ந்தனர். 'நிலவுலகினையாளும் சேரர்பெருமான் நீடு வாழ்க' என்ற வாழ்த்தொலி ஏக காலத்தில் எதிர் எழுந்து வந்தது. வந்த வழியே கொங்கணக் கூத்தரும், கருநாடகரும் வந்து புகுந்தனர். வணங்கி நின்றனர். சேரவேந்தர் தலை யசைத்து வருகைக்கு உவந்தனர். அணியாலும், மணியாலும்—அன்றலர்ந்த மலராலும்—ஒப்பனை பூண்ட வனப்பினராய் வந்த ஆடவரைத் தொடர்ந்து—ஆடல் வல்ல மகளிரும் வந்தனர். 'வண்டு யாழென ஒலிக்க, குயில் கூவ அரும்பவிழ, இளவேனில் வந்தது. வாரார் நம் காதலர்' என்ற பொருளமைந்த வரிப்பாடலைப் பாடினர். பருந்தும் நிழலும் போல் — பாடலும் — ஆடலும் தொடர்ந்தன. ஆடவரை முன்விடுத்து ஆடவல்ல மகளிர் பாடி வந்தனர். மெல்ல ஆடி நகர்ந்தனர்.

தமிழ் இலக்கியம் கூறும் ஐம்பத்தாறு நாடுகளுள் 'கொங்கணமும்' 'கருநாடகமும்' அடங்கும். 'கருநாடர்' என்பவர்கள், தற்காலத்தில் மைசூர் நாட்டில் வாழும் கன்னடர்களேயாவர். 'கொங்கணர்' என்பார் மேற்கே-மேற்குத் தொடர்ச்சி மலையையும், கிழக்கே அரபிக்

கடலையும், தெற்கே கூர்ச்சரத்தையும், வடக்கே கோவாவையும் எல்லையாகக்கொண்ட நாட்டினர். இவர்கள் பாடியும் ஆடியும் வந்தது சேரர்களுக்குக் களிப்பை நல்கியது. காரணம் மகளிர்களைப் போலவே, ஆடவரும் ஆடல் வல்லவராய் அணி அணியாய்க் கலந்தும்- பிரிந்தும் பாடல் கருத்துக்கு ஏற்பத் தனித்தும்-ஆடல் புரிந்தமையே ஆகும். ஆடல் மகளிர்க்கு அவசியமான கட்டுடலும் கண்ணழகும் பொருந்தி இருப்பதை அடைமொழிகள் தெளிவாய்க் காட்டுகின்றன.

ஆடவரும் மகளிருமாய்க் கலந்து ஆடல் நிகழ்த்தியவர்கள், தலைவியும் தோழியுமாய்ப் பேசவேண்டிய சந்தர்ப்பம் வந்ததும், ஆடவரெல்லோரும் பிரிந்துபோக, மகளிரெல்லாம் தலைவியும் தோழியுமாய்த் தனித்தனியே கூடி நகர்ந்தனர். அப்போது தோழியை நோக்கிய தலைவி, ‘கார் காலம் வந்தது. அதைக் குயில் கூவிக் காட்டுகிறது. அரும்பு இதழ் மலர்ந்து காணுகிறது. காதலர் கடிதே வருவதாய்க் கூறிய காலமும் வந்தது. அவரோ வாரார்— அதுவோ வந்துவிட்டது?’ என்று சொல்லி வருந்துகிருள். இத்தகைய இளவேனிற்குரிய பாடலை இனிமையாய்ப் பாடி ஆடினர். ‘போர் முகம் நோக்கி அணி அணியாய்த் திரண்டு செல்லும் யானைகளைப்போல—கருமுகில்கள்வான வீதியில் சென்று கொண்டிருந்தன. சிறிது நேரத்தில்இடி இடித்து உறுமி ‘சோ’ எனமழையும் வந்தது. காதலர் தேரும் வந்தது. ஆதலால், நீ ஒப்பனை செய்துகொள்’ என்று தோழிமார் இன்னிசைபாடி அதற்கேற்ப அபிநயம் செய்து நகர்ந்தனர்.

இத்தகைய கார்காலக் குரவைப் பாடல்களைப் பாடியும் ஆடியும் உளமகிழ்வித்த மகளிர்க்கும், மற்றவர்களுக்

10

கும் அணிகளையும், அரிய பரிசுகளையும் ஆடலாசிரியன் கூறியவண்ணம் சேரன் நல்கினான்.

அதே சமயம் வந்து வணங்கிய வாயில்காப்போன் 'வேந்தே, தூதுவர் தலைவன் சஞ்சயன் வந்துள்ளான். அவனோடு நூற்றிரண்டு நாடக மகளிர்கள், இன்னிசை இயக்கும் இருநூற்று எட்டுக் குயிலுவர், தொண்ணூற்ருறு வகையினையுடைய சமய சாத்திரக் கலைவல்ல நகைவேளம்பர் (சிரிப்பூட்டுபவர்) நூறுபேர், சட்டையிட்ட தலைவர் ஆயிரவர்—இவர்கள் எல்லோரும் வந்துள்ளனர். நூறுதேர், ஐநூறு யானைகள், பதினுயிரம் புரவிகள், இன்ன இன்ன பொருள்கள் என்று எழுதிஒட்டப்பட்ட வடநாட்டுவளங்கள்—இவை நிறைந்த இருபதினுயிரம் சகடங்கள்—வாயிலருகே வந்து நிற்கின்றன என்று அறிவித்தான்.

வடநாட்டின் எல்லைக்கு வருமுன்னே, வடவர்வணங்கி அனுப்பிய, திறைப்பொருள் வாயிலருகே வந்து நின்றது. வாயில் காப்போன் கூறியதுகேட்ட மன்னன் சஞ்சயனை வரப் பணித்தான். சஞ்சயன் வந்து நின்று வணக்கங்கூறினன். இவன் கன்னரர் நூற்றுவரால் விடப்பட்ட வடநாட்டுத் தூதர் தலைவனுவான். எனவே அவன் வருகையும், வாய்மொழியும் அறியத்தக்க ஆர்வத்தையும் ஆவலையும் எல்லோருடைய உள்ளத்திலேயும் எழச்செய்தன. வந்த சஞ்சயன் இவ்வாறு பேசுகிறுன்: 'வேந்தே, உன்னோடு மாறுபாடு இல்லாது நட்புரிமை பாராட்டிவரும் மன்னவராகிய, கன்னரர் நூறு பேரும் சேரவேந்தர் வடக்கு நோக்கி, வருவது கண்ணகியார்க்குக் கற்கொண்டு வரத்தக்க ஒரு காரணம் பற்றியதேயானல் தாங்களே (கன்னரர்கள்) இமயத்தில் கல்லெடுத்து, அதைக் கங்கை

யில் நீராட்டிக் கொண்டுதரும் ஆற்றலுடையோம் என்ற னர்' என்று கூறினன்.

பேராற்றங்கரையில், சேரவேந்தர் கொண்ட ஒரு நோக்கம், கண்ணகியார்க்குக் கல்லெடுத்துக் கங்கையில் நீர்ப்படை செய்து கொண்டுவருவது என்பதாயிருந்தது. இமயமிருந்து குமரிவரும் முனிவர்கள் கூறிய செய்திக்குப் பிறகு, கண்ணகியாரின் நீராட்டிய படிமக்கல்லை கனக— விஜயர் முடிமீது சுமத்தி வருவது என மறுநோக்கம் உருக் கொண்டது. இவ்விருநோக்கங்களில் முதல் நோக்கம் ஒன்றே முரசு முழக்கி, அறிவிக்கப்பட்டது. எனவே, கன்னரர்க்கு இது தெரியக் காரணமில்லை. இதை மற்ற வர்கட்கு வெளிப்படையாய்ப் புலப்படுத்திக் கூறவேண் டிய சந்தர்ப்பம் இயல்பாகவே இப்பொழுது ஏற்பட்டுவிட் டது. அதைச் சேரவேந்தர் கூறுகிறார்: 'பால குமரன் மக்களாகிய நாவடக்க மில்லாத கனகனும் விஜயனும், தமிழரசர் வலிமையறியாத, புதிய அரசர்களுடன் கூடித் தமிழ் மன்னரை இகழ்ந்தனர் என்பதால், எமனே அழைத் துக் கொண்டு, இப்படை வடநாடு நோக்கி வருகிறது. கன்னரர் நூற்றுவர்க்கும் இதனைக் கூறிக் கங்கை நதி யைக் கடத்தற்கு வேண்டிய ஓடங்களை மிகுதியாக ஏற் பாடு செய்க' எனப் பணித்தான். சஞ்சயன் தலைமீது பணியேற்று விடைபெற்றுச் சென்றான்.

இங்கு சேரவேந்தர் பேசிய சொற்கள், சொற்செட் டிலும், ஆழ்ந்த பொருளிலும்—அடங்கிய சினத்திலும் பிறந்தவை. சொற்களிலே சூடு ஆறிவிடவில்லை. அதற் கான சமயமும் கடந்துவிடவில்லை. சினம் நீறுபூத்த நெருப்பாய் இருக்கிறது. அது பகை எழுந்தவுடனே அன லாய் எழுந்து—அலைவீசிச் சுட்டெரிக்கும் என்பதற்கான அறிகுறிகள் காணப்படுகின்றன. வள்ளுவர் கூறிய நாவ

டக்கத்தை வடவர் அறியவில்லை. அதன் விளைவைக் காட்டி, வரத்தக்க பயனை அநுபவிக்குமாறு சேரவேந்தரின் சொற்கள் எடுத்துக் காட்டுகின்றன. 'இப்படை எமனையும் உடனழைத்து வருகிறது' என்ற சொற்களிலே தான் எவ்வளவு அழுத்தமாய்—வெற்றியிலே ஐயமற விழுந்த நம்பிக்கை—வெளிப்பட்டு நிற்கிறது. இகழ்ந்த வடவர் இருவரை அடக்க வரும் படைகளுக்கு, ஓடமனுப்ப வடவருக்கே ஆணையிடப்படுவதும், அதை முடிமேல் ஏற்று அவர்கள் நடப்பதும் சேரனின் பேராற்றலுக்குப் பெரியதொரு எடுத்துக்காட்டாய் நிற்கக் காணுகிறோம்.

பாண்டிய மன்னன் தன்நாட்டின் அரிய பொருளாகிய முத்தையும் — சந்தனத்தையும் தன் நெஞ்சிலே பிறந்த அன்பிற்கு அடையாளமாகச் சட்டை அணிந்த தூதுவர் ஆயிரவர் மூலம் அனுப்பியிருந்தான். சஞ்சயன் வருகையாலும், பாண்டியன் அனுப்பிய பரிசாலும், சேரனுக்குத் தமிழ் நாட்டிலும் வடநாட்டிலும் இருந்துவரும் உயர்வை இளங்கோ நமக்குக் காட்டுகிறார். சேரன் தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கிறான் கடிதத்தின் மூலம். கடிதமெழுதுவோர் கண்ணெழுத்தாளர் என்று குறிக்கப்படுகின்றனர். அரசனுடைய அடையாள முத்திரையிட்டுக் கொடுத்த கடிதத்தைப் பாண்டியர் பெற்றுக்கொண்டனர். தற்கால அரசர், அமைச்சரிடம், காரியதரிசிகளும், அடையாள இலச்சினைகளும் இருப்பதுபோல—சேரர் ஆட்சியில் இருந்தமையை உணருகிறோம்.

நீலகிரியிலிருந்து வடநாடு நோக்கிக் கடலெனப் படைகள் புறப்பட்டன. அக் கடலிடை எழுந்துவரும் அலையெனக் கொடிகள் அசைந்து ஆடின.



## 21. கங்கை நோக்கிப் பொங்கிய தமிழ்ப்படை

கடலும், அலையும் போல்—படையும் கொடியும் காட்சி நல்கின. அவற்றினிடையே, வங்கமோ என எண்ணத்தக்க ஒரு யானை; அதன்மேல் அம்பாரி மேலமர்ந்து சேரவேந்தர் செல்லுகிறார். படர்ந்த நெற்றி; அடர்ந்த புருவம்; அதன் கீழ் சுழன்று திரும்பும் பெருமிதக் கண்கள்; அவை சினம் பெருகிச் சிவப்பேறிவிட்டால், அகப்பட்ட பகைவர் ஊதிய சாம்பலாய், உரு மறைந்துபோவர்.

கங்கைக்கரையிலே கடல் வந்து நிற்பதுபோல, சேரர் படை வந்து நின்றது. கன்னரர் அனுப்பிய தோணிகள், கரையிலே அணி அணியாய், ஆயிரமாயிரமாய் நின்றன. அவைகள் மூலமாய்த் தமிழ்ப் படை கங்கையைக் கடந்தது. வடகரையிலே, வடவராகிய கன்னரர் எதிர்கொண்டனர். எழுப்பிய வாழ்த்தொலி இமயம் வரை சென்று எதிரொலித்தது. தமிழ்ப்படை, கன்னரர் நாட்டையும் கடந்து பகைவர் நாட்டில் பாடிமனை கட்டிப் புகுந்தது— உத்தரன், உருத்திரன், சித்திரன், விசித்திரன், தனுத்

திரன், சிங்கன், சிவேதன் என்ற வடநாட்டரசர் எல்லோரும் ஒன்று கலந்து ஒருமுகப்பட்டு, தென்னுட்டவராகிய இத்தமிழரின் ஆற்றலைக் காண்போம்' என வீரம் பேசினர். கனக விஜயர் சேனையுடன் சேர்ந்து சேர வேந்தை எதிர்த்தனர். 'பசிகொண்டு இரை தேட எழுந்த சிங்கம்போல, செங்குட்டுவன் எழுந்தான். யானைக்கூட்டத்தைக் கண்டு, பிடரிமயிர் சிலிர்க்கச் சீறி எழும் சிங்கம் போல் பகைவர் படையில் கலந்தது தமிழ்ப்படை.'

'வலியவந்த பகைவரை முறியடிக்க வேண்டும். இதுவே சேரனது எண்ணம். எதிர்கொண்ட நூற்றுவர் கன்னரர் தவிரக் கனகவிஜயர்க்குத் துணையாக வடவரசர் அனைவருமே ஒன்று கூடிச் சேரனை எதிர்த்தனர். பகைவர் பலர் என்பதும் சேரன் ஒருவனே என்பதும் ஆசிரியர் காட்டும் உவமையால் நாம் மேலே உணர்ந்தோம். பகைவரது படை பலத்தை மதிப்பிடுவதிலே—உவமைகள் தக்க எண்ணத்தை உண்டுபண்ணுகின்றன. பகைவனை அலட்சியத்திலோ, இழிவிலோ வைத்து உவமை கூறினல், தம்மை எதிர்க்கத்தக்க தகுதியில்லாதவனோடு, பெற்ற வெற்றியாகிவிடும். அது பெருமை நல்கமாட்டாது. பகைத் தெழுந்த மாற்ருரைப் பல யானைகளாகக் காட்டி, எதிர்த் தெழுந்த சேரனை ஒரு சிங்கமாக்கி, மதிப்பிட வைத்த இளங்கோவின் புலமையை நாம் இங்கு உணருகிருேம்.

போர்க்களத்திலே சூரியனுடைய கிரணங்கள் படாதவாறு கொடிகள் பந்தலிட்டுப் பறந்தன. கொடிய ஓசையையுடைய பறைகள் கொட்டப்பட்டன. கொம்புகளும் சங்குகளும் ஊதப்பட்டன. இடிபோல் முரசம் முழங்கியது. பலி கொள்ளும் முரசு அதிர்ந்தது. திசைகள் நடுங்கின. வில்லேந்திய வீரர், வேலேந்திய மறவர்—அணிவகுத்துப் புகுந்தனர். பொருதனர். தேர்ப்படை,

யானைப்படை, குதிரைப்படை கலந்து எதிர்க்கப் பல்லாயிரம் வீரர் மடிந்தனர். தலை கால் இழந்த நிலையில், பெருகிய இரத்தம் வெள்ளமாய்ப் பரவியது.

வீரர் உடல்கள் மலைபோல் குவிந்தன. தலையிழந்து—கையிழந்துபோன கவந்தங்கள் பேய்கள் கொட்டிய தாளத்திற்கு ஏற்ப ஆடின. இவ்வாறு தமிழ் வீரர் பகைவர் படைகளைக் கொன்று குவித்தனர். ஆரிய அரசர் முன்பு அறியாத ஒன்றை—இப்பொழுது அறிந்தனர். 'எமன் ஒரு பகற்பொழுதிலே, பல்லாயிரம் வீரரது உயிரை உண்ண முடியும் என்பதை அவர்கள் தெள்ளத்தெளிய உணர்ந்தனர்'—இவ்வாறு அறிவித்தான் வீரக்கழல் புனைந்த சேரன். பல்லாயிரவரைப் பலிகொண்டது இப் போர். எஞ்சிய சிலருள் நாம் எதிர்பார்க்கும் கனகனும் விஜயனும் உயிர் பிழைத்து ஓடிவிட்டனர்.

சிலர் சடை புனைந்து, காவியணிந்து, நீறுபூசி, சைவத் துறவிகளாகி ஓடினர். இன்னும் சிலர் சமணத்துறவிகளாயினர். வேறு சிலர் பாணராய்ப் பாடி நகர்ந்தனர். ஆடும் கூத்தராய் வேடம்பூண்டு சிலர் அஞ்சி ஓடினர். எதிர்த்தெழுந்த வீரர்கள் நகைக்கத்தக்கவாறு கோலம் புனைந்து உயிர் தப்பினர்.

யானையை எருதாகப் பூட்டி—வாளைக் கோலாகக் கொண்டு, வாளேந்திய உழவனுகிய சேரன் செங்குட்டுவன்—பட்ட பகைமனிதராகிய நெற்போரிலே கடா விட்டான். வீரர் மறக்களம்பாடி அரசனை வாழ்த்தினர்.

இவ்வாறு போர் முடித்த செங்குட்டுவன் வந்த குறிக்கோளை எண்ணினுன். வில்லவன் கோதை என்ற அமைச்சனை ஏவி, பொன்மயமான கொடு முடியுடைய இமய மலையிலிருந்து இணையற்ற கண்ணகியார்க்கு, உரியதொரு

கல்லைக் கொண்டுவரப் பணித்தான். இமயம் நோக்கிச் சென்ற படையினர் கையிலே—மாறுவேடம் கலந்த கனக விஜயர் இருவரும் பிடிபட்டனர். அவர் முடித் தலைமீது, இமய மிருந்து எடுத்த கல்லை ஏற்றிக் கொணர்ந் தனர். சேரன், முறைப்படி கண்ணகியார்க் குரிய சிலை யைக் கங்கைப் புனலிலே நீராட்டிப் புனிதமாக்கினான். கங்கைக் கரையின் தென்புற வெளியிலே பாடி அமைத் துத் தங்கினான்.

வடபேர் இமயத்து வான்தரு சிறப்பில்
கடவுட் பத்தினி கற்கால் கொண்டபின்
சினவேள் முன்பில் செருவெங் கோலத்துக்
கனக விசயர் கதிர்முடி ஏற்றிச்
செறிகழல் வேந்தன் தென்தமிழ் ஆற்றல்
அறியாது மலைந்த ஆரிய மன்னரை

செங்குட்டுவன் கூறிய சபதப்படி வென்று வாகைசூடினான். 'யாகாவாராயினும் நாகாக்க, காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு' என்பதற்கொரு எடுத்துக்காட் டாய்க் கல்சுமந்து நிற்கும் கனகவிஜயர் நம் கண் முன் வருகின்றார்கள். அதே சமயத்தில் பவனி வருகின்றான் செங் குட்டுவன். இந்தக் காட்சியை எண்ணி வீரம் கொள்ளு மாறு இளங்கோ உணர்ச்சி மயமாய்ப் புலப்படுத்துகின்றார்.

போரிலே பட்ட வீரர்க்கு அவன் புகழ் நிற்கச் சேரன் ஆவன செய்தான். புண்பட்ட மறவர்க்கும் கருணைகாட்டி வாகை நல்கினான். ஏனைய வீரர்களையும் 'வருக வருக' என அழைத்து வாகை மலர் சூட்டினான். சேரனின் வீரத்தையும், வியத்தகு ஆற்றலையும்—புலவர்கள் கவி புனைந்து பாடினர். அதே சமயம் மாடலன் என்ற மறை யவன் வந்து புகுந்தான். வணக்கமும் வாழ்த்தும் கூறினான்.

மாதவி பாடிய கானல் வரிப்பாடல்—கனக விஜயரின் செறுக்கை-அழித்து அவர்களது முடித் தலையை நெறித்து விட்டது என்கிருன். சிலப்பதிகாரக் கதையின் விரிவு பிறந்த இடத்தை மாடலன் நயமாய்க் காட்டுகிருன். காதை காதையாய்ப் பெருகி, காண்டங்களாய் உருவாகக் காரணமான நிகழ்ச்சி—இதுவென உணருகிருேம். கதையின் பிற்பகுதி நிகழ்ச்சிகளுக்கெல்லாம் முன்னே, மாதவி கோவலன் கொண்ட இன்பக் களிப்பு-முற்றிலும் முடிக்கி விடப்பட்ட வீணைத் தந்தியில் விரல் பட்டால்—அறுந்து விடும் என்ற நிலையில்—மாதவி கானல்வரி பாடுகிருள். இணைந்த காதல் தந்திகள் அறுந்து விடுகின்றன. அதனுல் விளைந்த பிரிவே—கனக விஜயர் முடித் தலையிலே—கல்லை ஏற்றிவைத்தது எனச் சுருக்கமாய்க் கூறக் காணுகிருேம். இதன் மூலம் மாடலன் கதையின் உயிர் நாடியை உணர்த்தவும் செய்கிருன்.

இந்நிலையில் சேரன் மாடலனை நோக்கி 'பகையரசர் அறியாது, நகைக்கத் தக்க ஒன்றைக கூறினுய்—அதன் பொருள் என்ன' என்று கேட்கின்ருன்.

மலைவாழ் குறவர் கண்ணகியைத் தாம் கண்டது பற்றிக் கூறிய சமயத்தில்—அருகிருந்த சாத்தனுர் அவள் கதையை, மதுரையிலிருந்து தொடங்கித் தாம் கண்டதைச் சேரனுக்குக் கூறினுர். மதுரைக் காண்டத்தின் நடுவிலிருந்து தொடங்கிய கதையை, மாடலன் முதலிலிருந்து—முக்கியமான நிகழ்ச்சிகளைச் சில வரிகளில் நிரல்படக் கூறுகிருன்.

கானல் தண்டுறைக் கடல்விளை யாட்டினுள்
மாதவி மடந்தை வரிநவில் பாணியோடு
ஊடற் காலத்து ஊழ்வினை உருத்தெழக்

கூடாது பிரிந்த குலக்கொடி தன்னுடன்
மாட மூதூர் மதுரை புக்காங்(கு)
இலைத்தார் வேந்தன் எழில்வான் எய்தக்
கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி
குடவர் கோவே நின்னாடு புகுந்து
வடதிசை மன்னர் மணிமுடி ஏறினள்

புகார் நகரின் கடல் விளையாட்டிலே, மாதவி—கோவலன் கலந்து கூடியதும், அங்கே கானல்வரி பாடியதும், பின்னே ஊடியதும், ஒன்றுபட்ட உள்ளங்கள் அதனால் இரண்டு பட்டதும், கொண்ட கண்ணகியைக் கோவலன் கண்டதும், கண்ணகியுடன் சிலம்பு விற்கக் கோவலன் மதுரை வந்ததும் ஆகிய இவையெல்லாம் முதல் நான்கு வரிகளில் அடங்கி விடுகின்றன. ஆம். புகார்க் காண்டம் முடிந்து விடுகிறது. கோவலன் கொலைப்பட்டதும், பாண்டியன் உயிர் விட்டதும் பின் இரண்டு வரிகளில் கூறப்படுகின்றன. எனவே மதுரைக் காண்டமும் முடிந்து விடுகிறது. கண்ணகி, பின்னர் வஞ்சி புகுந்ததும் வடவரசர் முடி ஏறியதும் என்ற அளவில் வஞ்சிக்காண்டம் முற்றுப் பெறுகிறது. இவ்வாறு மாடலன் கண்ணகி கதையை அறியாத சேர வேந்தர்க்கு—அவர் திரு முன்பு சுருக்கமாய்ச் சொல்லி அரங்கேற்றி விடுகிறான்.

இனி இக்கதையிடையிலே வரும் ஏனைய நாடக மாந்தர் முடிவுகளையும் மாடலன் மூலமாகவே இங்கு, இளங்கோ நமக்குக் காட்டுகிறார். தொடர்ந்து பேசும் மாடலன் பொதியம் கண்டு—குமரிக்கடலாடி மதுரை திரும்பியதையும், அங்கே கண்ணகிக்கு அடைக்கலம் கொடுத்த மாதரி மதுரைத் தீயிலே விழுந்து மடிந்ததும், உண்ணா நோன்பிருந்து கவுந்தியடிகள் உயிர்விட்டதும்

ஆகிய மதுரை நிகழ்ச்சிகளைக் கூறுகிறான். அதன்பின், தான் காவிரிப்பூம்பட்டினம் அடைந்தபோது, அங்கே கோவலன் தந்தை மாசாத்துவான் கொடுந்துயர் அடைந்து —ஈட்டிய செல்வத்தை, ஏழை எளியவர்களுக்கு வழங்கித் தான் துறவு பூண்டதும், கோவலன் தாய் மகனை இழந்த வருத்தத்தால் மடிந்ததும், கண்ணகியின் தந்தை சமணத் துறவியானதும் 'இத்தனை துன்பத்திலும் இனி நான் வாழேன்' எனக் கண்ணகியின் தாய் உயிர்விட்டதுமாகிய—பின் நிகழ்ந்தனவற்றையும் எடுத்துப் பேசுகிறான். சிலப்பதிகாரத்தில் வரும் இத்தனை நாடகமாந்தர்களையும், அவர்கள் அடைந்த முடிவையும் கூறிய பிறகு, மாதவி யாதாயினாள் என்ற வினாவும், பரபரப்பும் எழுவது இயல்பேயாகும். இத்தனை பெயரோடு — ஆளோடு ஆளாய்ச் சொல்லிவிடக் கூடிய பாத்திரமா மாதவி? கண்ணகியை விட்டுக் கோவலன் பிரியவும், பின்பு கண்ணகியைக் கண்டு கோவலன் கூடவும் மாதவியே காரணமாகினாள். கண்ணகியின் வீர வாழ்விலே—எழுந்த நிகழ்ச்சிகளிலே—படிந்த நம் நினைவிலிருந்து மெல்ல நழுவி விட்ட மாதவியைப் பற்றி மீண்டும் மாடலன் பேசுவதை ஆவலோடு கேட்டறியத் துடிப்பது இயல்புதான்.

மாதவி எத்தகைய நிலையிலிருக்கிறாள்? கண்ணினும் அரிய காதலன் கொலைப்பட்டான். கணவன் கள்வனல்ல என உலகறியச் செய்த கண்ணகி வாழ்வின்பமறியாது மறைந்துபோகிறாள். கோவலனது தந்தையும் தாயும், அவ்வாறே கண்ணகியின் தந்தையும் தாயும் துறவிலும் பிரிவிலும் முடிந்தனர். கண்ணகி கோவலனோடு சிலநாள் பழகிய கவுந்தியும், மாதரியும் உயிர்விட்டனர். இத்தகைய சோக மயமான சூழ் நிலையில் இதற்கெல்லாம் காரணமான மாதவி இனி யாது செய்வது? சிலப்பதிகாரத்தை முடி

விட்டு ஒருகணம் நாம் சிந்தித்தோமானுல்—மாதவி இறப்பதைத் தவிர இருப்பதில் நியாயமில்லை என எண்ணத் தோன்றும். ஊராரின் பழிச்சொல்லுக்கு இனியும் இடமில்லாமல் மாதவி இறந்துவிட வேண்டும் என்ற முடிவே தோன்றும். அவள் முடிவை இதோ மாடலன் சொல்லுகிருன்.

மணிமே கலையை வான்துயர் உறுக்கும்
கணிகையர் கோலங் காணு தொழிகெனக்
கோதைத் தாமம் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்

'மிகவும் துன்பத்தைத் தரத்தக்க, கணிகையர் வாழ்விலே, மணிமேகலையைப் புகவிடமாட்டேன்; கணிகையர் கோலத்திற்குரிய அணிமணிகளையும் கோதையையும் கூந்தலையும் நீக்கித்துறவு பூண்பேன்; புத்தர் பெருமான் காட்டிய புனித நெறியிலே நிற்பேன்' என்று மாதவி கூறிய சொற்களால் மாடலன் முடிக்கிருன். நாமே மாதவி வாழ்வின் முடிவை மேற்குறித்தவாறு சிந்தித்தோமானுல்—அவள் இதுபற்றி ஆராயாமலா, இந்த முடிவுக்கு வருவாள்! அவசரப்படாமல் ஆழ்ந்து சிந்தித்தோமானுல் மாதவிகொண்ட முடிவே சரியானது என்று சொல்லவே தோன்றும். மாதவி இறந்து சாதிப்பதைவிட இருந்து சாதிக்க வேண்டியன பல உள்ளன. தான் இறந்து விட்டால், மணிமேகலை சித்திராபதியால் தூண்டப்பட்டு நாடகக் கணிகையாக்கப்பட்டு விடுவாள். தந்தை கொலைப் பட்டான். தாய் உயிர் விட்டாள். இந்நிலையில் மகள்மணிமேகலை கணிகையானுள் என்று உலகம் பழிக்கும். இறந்தும் பழிதுடைக்க முடியாமல்—மாருக—மேலும் பழிச்சொல்வளரவே—வழிபிறந்து விடுகிறது. மணிமேகலை தவருன வழியிலே போகாமலும்—போவாரை—அவள்

வாழ்வின் மூலம் திருப்பவும்—மாதவி உயிர் வாழ்ந்தே யாகவேண்டும். இத்தகைய எண்ணத்திலே மாதவி முடிவு காட்டப்படுகிறது.

இனி மாடலன் சேரவேந்தருக்குப் பாண்டிய நாட்டில் நெடுஞ்செழியன் பிரிவுக்குப் பிறகு, செங்கோல் ஏந்திய அவன் மகன் வெற்றிவேற் செழியன் புரிந்த செயல்களை யும் விரிவாகக் கூறினான். பொழுது சாய்ந்து கொண்டு வந்தது. அந்திவானத்தில் செக்கர் பரவியது. வெண் பிறையின் மங்கிய தோற்றத்தைச் சேரன் கண்டான். வானநூல் வல்லான் இதுதான் தக்க சமயமென வஞ்சி நகர் விட்டு வந்த நீண்ட நாட்களை நினைவுபடுத்தினான்.



## 22. வஞ்சி புகுந்தனர்

செங்குட்டுவன் மாடலனோடு உரையாடிய பிறகு, கன்னரராகிய அரசர் நூறுபேருக்கும் தம்நாடு செல்லக் கட்டளையிட்டான். தமிழரசரின் பேராண்மையை உணராது இகழ்ந்து—போரிலே வேடம் புனைந்து உயிர் தப்பிய கனக—விஜயரை, ஆரியப் பேடியோடு, சோழபாண்டியர்களிடம் அழைத்துச் சென்று காட்டி வருமாறு நீலன் முதலிய கஞ்சுக மாக்கள் ஆயிரவரை ஏவினான். தோற்ற அரசனைப் பேடியோடு அனுப்புவதன் மூலம் தோல்வியுற்று வீரமிழந்தவன் எனக்காட்டினர். இவ்வாறு செய்வது பழைய மரபு.

தன் ஆற்றலைக் காட்டவும்—தமிழ் அரசர்களை இகழ்ந்தாலும் அது தன்னையும் இகழ்ந்ததே எனத் தான் கொண்ட எண்ணத்திற்கு இச்செயல் பொருந்துமெனவும் சேரன் எண்ணினான். அதனாலேயே இவ்வாறு ஆணையிட்டான்.

இரவு கழிந்தது. பொழுது புலர்ந்தது. தாமரைப் பூம் படுக்கையில் துயின்ற இளம் வண்டுகள்—பகலவன் வருகையை மெல்லெனப் பாடி எழுந்தன. புள்ளினங்கள் இன்னிசை பாடி மாந்தரை எழுப்பின. வடதிசை

சென்று வாகை சூடிய, குடதிசை மன்னவன் சேனைகள்—வஞ்சிநகர் வந்த வண்ணமிருந்தன. பொன்மயமான சேரனது மாளிகையிலே கதிரவன் பாய்ச்சிய கிரணங்கள் பொன்மெருகிட்டுக் காட்சி நல்கின. சரஞ்சரமாய்த் தொங்கும் முத்துக் கொடிகள், காலை இளந்தென்றலின் அசைவிலே கண்ணுக்குப் புத்தழகு தந்து ஆடின. பன்னிறப் பூக்களை அள்ளி உதிர்த்ததுபோல—வேலைப்பாடமைந்த நீல விதானத்தின் கீழ், பொற்கால் அமளியில் அன்னத்தின் சிறகினும் மெல்லிய படுக்கையிலே, அரசி வேண்மாள் துயின்று கொண்டிருந்தாள். 'வேந்தன் வெற்றி சூடி வந்தான். துணைவன் உன் துயர் துடைக்க வந்தான்' எனப் பல கூறிச் செவிலித் தாயர் அவளைத் துயில் எழுப்பினர். அந்தப்புரத்திலுள்ள குள்ளனும் கூனனும் 'புதுமலர்க் கூந்தல் புதுமணம் பெறுக' எனக் கூறி வாழ்த்தினர்.

அந்தப்புரத்திலே, நிகழ்ந்தன கூறிய இளங்கோ, இனி வஞ்சிநகர் மக்களின் மகிழ்ச்சியைப் பலவாறு எடுத்துக் காட்டுகிறார். குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் நில மக்கள் வெற்றி புனைந்த வேந்தனைப் பாடிப் பாராட்டும் இயல்புகள் கூறப்படுகின்றன.

வானுற நிவந்த மலைகள். மலைசார்ந்த நிலமெல்லாம் தினைப் புனங்கள். கவண்வீசிப் புனங்காக்கும் கானக் குறவர்கள்—காவல் மறந்து மன்னனைக் காணச் சென்றனர். அதனால் புனம் புகுந்த யானைகள் தினை கவர்ந்து திரிந்தன. கானக் குறத்தியர் கவண் வீசிப் பார்த்தனர். அலுத்தனர். பண்ணிசைத்துப் பாடினர். பாடிய குறிஞ்சிப் பண்ணிலே, சொக்கிப்போன யானைகள், வந்த செயல் மறந்து நின்றவண்ணமே துயின்று விட்டன. பண் சுமந்த பாடலில் அரசனது புகழோடு, யானையைக் கடத்து

கின்ற எண்ணம்—பருந்தும் நிழலும்போல்—தொடர்ந்து வருகிறது. குறிஞ்சிக் குறமகள் பரணிருந்து பாடிய பண்—மலைமுகடெல்லாம் எதிரொலித்து எழுந்தது.

மருத நிலத்தில் உழவர்கள் ஏரிலே காளைகளைப் பூட்டி இனிமையாய்ப் பாடி உழுகின்றனர். வடநாட்டு அரசர்களின் மதில்களை அழித்து, வெள் வாகை விதைத்து அவர்களைச் சிறுமைப்படுத்தக் கழுதை பூட்டிய ஏரினை உழுபவனாகிய சேரன், வெற்றி புனைந்து வந்தான். அவன் புவிமிசைப் பிறந்த நன்னாள் நாளை வருகிறது. அந்த நாளணி விழாவில் நீயும் மகிழ்ந்து ஏர் நுகப்பூண்டு உழுவாய் என்று காளைகளை நோக்கி உழவன் பாடுகின்ற மருதப்பண் எங்கும் ஆர்கலித்தது.

முல்லை நிலத்திலே, ஓடிவரும் ஆன்பொருநை ஆற்றிலே, நீராடி எழும் மக்கள் சூடிக் கழித்த மலர்கள், பூசிக் கரைத்த பொற்சுண்ணங்கள்—பல நிறமாய், எங்கும் பரவி வளைந்தோடும் அலையிலே வானத்து (இந்திர) வில்லைப்போல் காட்சி தந்தன. தாமரைப் பூவையும், குவளை மலரையும் கோத்தெடுத்துத் தம் தலையிலே—லாவகமாய்ச் சூடிய ஆயர்கள், புனலிலே படிந்த தாழையின்கிளையிலே அமர்ந்து, 'இமயத்தினின்றும் பகைவரது பசுக் கூட்டங்களை நம் அரசன் கொண்டு வந்தான். அந்தப் பசுக்களுடன் நீங்களும் சேர்ந்து கொள்ளுங்கள் என்று வேய்ங் குழலிலே இன்னிசை எழுப்பி ஊதினர். உலக வழக்கில் ஒரு செயலில் வெற்றி கொள்பவனை 'வில்லன்' என்கிறோம். ஒரு பெரும் போரிலே வென்ற சேரனை 'வில்லவன்' என்று உயர்வு தோன்ற—சிறிது நீட்டிச் சொல்ல, ஆயர்கள் அறிந்திருக்கிறார்கள். அல்லாமலும் வில்லைக் கொடியிலே கொண்ட வீரனல்லவா சேரன்?

நெய்தல் நிலம். அலைமோதும் கடற்கரை. பசுமை கொழிக்கும் புன்னைமர நிழல். அங்கே வலம்புரிச் சங்கு

பெற்றெடுத்த முத்துக்கள். அவைகளைக் களங்காடு காய் களாய்க் கொண்ட இளம் பெண்கள் வேந்தன் சூடி வந்த வெற்றிகளைப் பாடி ஆடுகின்றனர்.

இவ்வாறு நான்கு நிலங்களிலிருந்தும் இனிதாகப் பிறந்த பாடல்களை, அரண்மனையின் அந்தப்புரத்திலிருந்து செவிகுளிரக் கேட்ட கோப்பெருந்தேவி சிந்தை மகிழ்ந் தாள். சேரனது வருகை எண்ணி உடல் பூரித்தாள். வலம்புரிச் சங்குகள் வெற்றி முழக்கம் செய்தன. மாலைப் பொழுதிலே, பட்டத்து யானையின் அம்பாரிமீது அமர்ந்த சேரன் அரச வீதியின் வழியே, பவனிவருகிருன். வஞ்சி நகர மக்கள், அவன் வருகையை எதிர்வந்து ஏற்று வான மும் அதிருமாறு வாழ்த்தெடுத்தனர். மகளிர்கள் அரிய நெல்லையும் அரும்பவிழ் மலரையும் தூவினர். மாதர்கள் மணிவிளக்கேற்றி வாழ்த்தினர். ஆடவர் பெரும்புகழ் கூறி ஏத்தினர். வணங்கினர். மன்னன் அரண்மனை புகுந்தான். வீரர்கள் தம்மனை புகுந்தனர். மனைவிமார் அகமலர முக மலர உபசரித்தனர். பகைவர் அழைத்த போர் முனை யிலே, வேலையும் அம்பையும் தாங்கி எதிர்த்து, அதனுல் நெஞ்சிலே ஏற்பட்ட புண்கள் மனைவிமாரின் இனிய அணைப்பிலே ஆறிவிடுகின்றன. பாசறையிலே வருத்தம் செய்து—நினைவிலே தோன்றிய கருங் கண்கள்—இப் பொழுது மருந்துமாயின என எண்ணினர். அவர்களது பவளக்கனிவாய் இதழ் விரிந்தன. பால் நிலவென ஒளி நிலவிய பற்கள் அரும்பின. அங்கே சுரந்த மூரல் விருந் தைத் தம் கணவர்க்கு அளித்தனர். காதல் தேன் பருகி மகிழ்ந்தனர். குலைந்த கருங்கூந்தலைக் கலைந்த அணிகளை— கண்ணுடி கண்டு திருத்தினர். யாழை எடுத்தனர். குறிஞ் சிப்பண் பாடினர்.

மலைபோல் நிமிர்ந்த அரண்மனையிலே, அரசி வேண் மாள் அணி அரங்கினின்றும் மெல்ல நகர்ந்து பால் நிலவு

11

காண, நிலாமுற்றம் நோக்கி வந்தாள். ஒருபால், மங்கல மங்கையர் பல்லாண்டு பாடித் திருவிளக்கேற்றி, அணியாய் நின்றனர். இன்னிசை யாழும் இணையிசை முழவும், பண்கனி யாடலும் ஒன்று கலந்து கூட்டிசை முழக்கின. பூவேந்தினர் சிலர், புகை ஏந்தினர் சிலர். ஆடை ஏந்தினர் சிலர். அங்கிருந்து வந்த அரசியுடன் செங்குட்டுவன் அணி அரங்கம் ஏறினன். ஏறி அமர்ந்த அதே சமயத்தில் 'கலீர் கலீர்' எனச் சதங்கை ஒலி எழுந்தது. பாலாவிபோன்ற மெல்லிய நுண் திரை சிறிது சிறிதாய் அகன்று 'உமையவள் ஒரு திறனுக வோங்கிய, இமை யவன் ஆடிய கொட்டிச் சேதம்'—என்னும் சிவபார்வதி நடனம் ஆரம்பமாகிவிட்டது. ஆடல் முடிவிலே அரசனை வாழ்த்தி முடித்தனர். இவ்வாடல் நிகழ்த்திய பரையூர்க் கூத்தச் சாக்கையனுக்கு அரசன் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தான்.

கனக விஜயரைச் சோழ பாண்டியர்க்குக் காட்டி வரச் சென்ற நீலன் முதலியோரும், மாடலமறையோனும் வாயில் வந்து காண நிற்பதாய் அரசனுக்கு அறிவித்து உள்ளே புகுந்தனர். அரசனை வணங்கி நீலன் கூறினன்:— வேந்தே, சோழனது பூம்புகார் நகரத்தை அடைந்தோம். போரிலே தோற்றேடிய கனக விஜயரோடு சென்று அவனடி வணங்கினேம். எங்களைக் கண்ட நிலையிலே சோழன் 'பெரும்போர் முனையிலே, தம் ஆண்மையை விட்டு, சொல்லக் கூடாத தவவேடம் புனைந்து, உயிர் பிழைத்து ஓடிய, இக்கனக விஜயரைப் பிடித்துக்கொண்டுவந்தல் வெற்றியுமல்ல. வீரமுமல்ல' என்று கூறினன். பின்னர் நாங்கள் விடைபெற்று, மதுரை மூதூர் வந்தடைந்தோம். பாண்டியனைக் கண்டோம். அவனே 'போர்க்களத்தை நும் அரசனுடையதாகவிட்டு, தவவேடங்கொண்டு ஓடிய இவர்கள் மீது கொதிசினம் கொண்ட சேரனது வெற்றி புதுமையாயிருக்கிறது' என்று கூறியதாக உரைத்தான்.

கேட்ட செங்குட்டுவனது கண்கள் தணல்போல் மாறின. வெகுண்டு நகைத்தான். அதன் விளைவுயாதாகுமோ என எல்லோரும் அஞ்சிய சமயத்திலே, மாடலன் எழுந்தான். சேரனது வெற்றிப் புயலிலே பகைவரது வீரமெல்லாம் பஞ்சுபோல் சுழன்ற பல சம்பவங்களை, அவன் சினம் தணியுமளவு இதமாய் எடுத்துக் கூறினான். 'போர் போர்' என்று நாளெல்லாம் போய்விட்டதை சிந்திக்குமாறு தூண்டினான். இந்நிலையில் இனிச் செய்யத் தக்கன எவை என எண்ணவைத்தான். எஞ்சிய வாழ்நாள் இனிமையாய், அறம்பல அமைந்த இயல்பினதாய்ச் செல்ல வேண்டும் எனவும், அழியும் இவ்வுடல் கொண்டு அழியாததைத் தேடவேண்டும் என்று பலவாறு நயமாய் எடுத்துக் கூறினான். இதைக் கேட்கக் கேட்கக் கொதி சினம் சிறிது சிறிதாய் ஆறி அடங்கியது.

ஆரிய மன்னரைச் சிறைவிடுத்துக் தம் நாடு செல்லக் கட்டளை இட்டான். சிறைக் கோட்டங்களைத் தூய்மையாக்கினான். கைதிகளை விடுத்தும், வரி மிகுந்த நாட்டினர்க்கு வரிவிலக்கியும் ஆயக்கணக்கருக்கு ஆணையிட்டான். அரசர் செங்கோல் வழுவாது நின்றால் மகளிர் கற்பு மாண்புடையதாகும் என்ற முன்னோர் எண்ணிய எண்ணத்தை நன்குணர்ந்தான். செங்கோல் மன்னர்க்குத் தன்னையொரு எடுத்துக் காட்டாகவும், கற்புடை மகளிர்க்குக் கண்ணகியாரை மேதக்க சான்றாகவும், உலகம் உள்ளளவும் நினைவு கொள்ளத் தக்கவாறு, கண்ணகியார்க்குச் சிலை அமைத்துக் கோயில் எழுப்ப ஆணையிட்டான். முன்னோர்வகுத்த சிற்ப விதிப்படி பத்தினிக்குக் கோயில் எழுந்தது. கைதேர்ந்த சிற்பிகள் கண்ணகியின் சிலையை நயமாய் உருவாக்கினர். அறவோர், காலம் கணிப்போர், நிமித்தம் கூறுவோர், கம்மியர் ஆகியவருடன் சென்று அணி பூட்டியும் மலர் சூட்டியும் விழா எடுத்தான்.

## 23. வாழ்த்துக்கள்

புகார் நகரில் வாழ்ந்த நாளில் கண்ணினும் இனியளாய்க் கண்ணகிக்கு வாய்த்த தோழி தேவந்தி. மதக் கோட்பாடுகளில் கண்ணகிக்கு இவள் மாறுபட்டவள். எனினும் மனத்தால் ஒன்றுபட்டவள். இவள் கண்ணகியின் முடிவு கேட்டாள். கண்ணீர்வார வாய்விட்டு அழுதாள். முன்பொருநாள் கண்ணகி தீய கனவொன்று கண்டு என்னிடம் சொன்னாளே! ஐயோ! அதை நினைக்கவும் என் நெஞ்சு அஞ்சிக் குமுறுகிறதே! கண்ட கனவு கண்ணகிக்குப் பலிக்குமென நான் நினைக்கவில்லை. அது என் பேதமையைக் காட்டுகிறது. பத்தினி கண்ட கனவு பலித்துவிட்டது. கணவனைத் தன்னிடமிருந்து பிரித்து நாளெல்லாம் கண்ணீர் பெருக வைத்த மாதவியின் செயலெதிலும் கண்ணகி சினம் கொண்டதில்லை. எத்தகைய மேலான உள்ளம். அதை ஒரு கணம் நினைத்துப் பார்த்தால் கண்ணகிக்கு இணை கண்ணகியேதான் என்று சொல்ல நேரும். கணப்பொழுதில் நிகழ்ந்த மனமாற்றம் கணவனை மாதவியிடமிருந்து கண்ணகியிடம் கொண்டு வந்து சேர்த்தது. அப்பொழுதும் மாதவியைப் பற்றியொருபழிச் சொல்லும் சொல்லவில்லை. இன்பத்தையும்,

இணைசொல்ல முடியாத துன்பத்தையும் கண்ணகி சமமாக நோக்கினாள். கணவன் மதுரை செல்ல 'எழுக' என்றதும் கடுங்கானில் அவன் கைபிடித்து நடந்தகன்றாள். பெற்ற தாய் தந்தையினும் உற்ற பெருந் தெய்வமாய், கண்ணகி கொண்டதெல்லாம் தன் கணவனொருவனைத் தான். இல்லையானால் புகாரைவிட்டுப் புறப்பட்ட சமயத்தில், இனிய தந்தையிடம்-ஈன்றெடுத்த தன் அன்னையிடம் இணைபிரியாத என்னிடம், சொல்லிப் போகலாமல்லா? தாமரைமேல் உள்ள நீர்த்துளிபோல, பற்றற்றுப் பழகினாள் கண்ணகி.

'மதுரையில் கோவலனுக்குக் கொடுமை விளைவித்த பாண்டியன் உயிர்விட்டான். புகாரில் மாசாத்துவானும் மாநாய்கனும், ஈட்டிய செல்வத்தை இரவலர்க்கு வழங்கிக் கோவலன் பிரிவால் துறவு பூண்டனர். கண்ணகியின் அன்னையும், மாமியும் உயிர்விட்டு உடல் மறைந்தனர். போதியின் கீழ் அமர்ந்த மாதவன் முன்னே, மாதவி துறவு பூண்டாள். மணிமேகலையையும் துறவு பூணச் செய்தாள் நானும் என் கண்ணகியைக் கண்டடைவேன்' என்று கூறியவளாய், காவற்பெண்டு, அடித்தோழி, இவர்களுடன் மதுரையை நோக்கிப் புறப்பட்டாள். ஆயர்பாடி வந்து சேர்ந்தாள். ஐயை என்பாளைக் கண்டாள். 'அடைக்கலமாகக் கவுந்தி தந்த கண்ணகியைக்காவாத பாவியானேன்' என்று சொல்லி மாதரி மடிந்த செய்தியை ஐயை சொல்ல அறிந்து, வைகைக்கரை வழியே கண்ணகி சென்றதையும் தெரிந்து கொண்டாள். ஐயையும் தேவந்தியைப் பின் தொடர்ந்தாள். இனி ஆயர்பாடியில் அவளுக்கு என்ன வேலை? இங்கே ஒன்றை நாம் அறிய வேண்டும். ஐயை ஆயர்பாடியில் கண்ணகி தங்கிய, சிலநாளில் அவளுக்குத் தோழியாய்ப் பழகியவள். சிலநாள் பழகிய அன்பே, ஐயை என்பாளை வைகை வழியே சென்று கண்ணகியைக் காணத் தூண்டியது என்றால், பல நாள் பழகிய தேவந்தி அவளை நாடிச் செல்வதில் வியப்பில்லை.

தேவந்தி முதலிய எல்லோரும் மலைநாட்டிலுள்ள திருச்செங்குன்றெனும் மலையின் உச்சிமீது ஏறிக் கண்ணகி கோட்டத்தை அடைந்தனர். கண்ணகிக்கு விழாவெடுக்கும் செங்குட்டுவனுக்குத் தேவந்தி தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளுகிருள். இதைக் கேட்டுக் கொண்டிருந்த செங்குட்டுவனின் கண்ணெதிரே, மின்னலென ஒரு உருவெளித் தோற்றம் தோன்றி மறைந்தது.

என்னே! இஃதென்னே! இஃதென்னே!
இஃதென்னே கொல்!
பொன்னஞ் சிலம்பில் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றேட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பில் தோன்றுமால்

"என்ன வியப்பு! பொன்னுலாகிய சிலம்பணிந்து, புனையப் பட்ட மேகலை பூண்டு - வளையலணிந்த கையோடு-வயிர மிழைத்த தோளணி பொருந்தி-பொற் கொடியொன்று வானத்தின் மீது தோன்றுகிறதே' என்று சேரன் வியப் படைகிருன். அதே சமயத்தில் 'தென்னவன் தீதிலன்' என்றும் தான் அவன் மகளென்றும், 'வெள்வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன், என்னேடும் தோழியீர் எல்லீரும் வம்மெல்லாம்' என்ற கண்ணகியின் வார்த்தை களும் சேரனின் செவியகம் புகுந்தன. உடனிருந்து கேட்ட வஞ்சி நகர மகளிரெல்லாம் கண்ணகியின் தோழியரா யினர். கூடிக்கைகோர்த்துக் குதூகலித்தனர்.

செங்கோல் வளைய உயிர்வாழார் பாண்டியரென் (று)
எங்கோ முறைநா இயம்பஇந் நாடடைந்த
பைந்தொடிப் பாவையைப் பாடுதும் வம்மெல்லாம்
பாண்டியன் தன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம்

என வஞ்சி நகர் பெற்ற வஞ்சியர் பாடினர். கைகொட்டி ஆடினர். பாட்டிசைத்துப் பாவையரை அழைத்தனர்.

அணி அணியாய்க் குதூகலித்துக்கூடிய மயிலனைய மாதரை நோக்கி — செழியனைச் சிலம்பால்வென்று, கூடலைத்தன் கொங்கையால் அழித்த பத்தினியைப் புகழ்ந்து பாடுவோம். தென்னவன் தன் மகளைப் பாடுவோம். செங்கோல் வளைய உயிர்வாழாப் பாண்டியரெனச் சேரரால் சிறப்பிக்கப்பட்டு வஞ்சிநாடடைடைந்த பாவையைப் பாடுவோம் என்றனர்.

கண்ணகியின் கொதி சினத்திலே, எழுந்த தீயிலே, மதுரையின் தீயசக்தியனைத்தும் சாம்பலாகி விடுகின்றன. புடம் போட்ட பொன்னைப்போல் மதுரை நகரம் சுடர் விட்டு இப்பொழுது விளங்குகிறது. அவ்வாறே செழியனை மன்னர்குல மாணிக்கமாய் என்றென்றும் நிலவச் செய்தது கண்ணகி கற்பு எனப் பெண்டிர் குலம் பேசுமாறு அமைந்து விட்டது. வஞ்சி மகளிர் வைகை நாடனைப் பல வாறு வாழ்த்தினர். அவன் மரபு வழிவழிச் சிறக்க ஏத் தினர். இமயம் பெற்ற கண்ணகியின் புகழ்ச் சிலையைத் தங்கள் வஞ்சி நாடாளும் சேர வேந்தர் நிலவரசர் முடி மீது சுமத்திய சிறப்பைப் பலவாறு பாராட்டினர்.

மகளிர் விளையாட்டில் அம்மானையென்பதொன் றுண்டு. இருவர் விளையாடும் பொழுது ஒரு பொருள் பற்றி ஒருவர் வினவுவதும், மற்றொருவர் அதற்கு விடை கூறுவதும் மரபாகும். வினவையடுத்து அம்மானை என்ற சொல்லும், அவ்வாறே விடையையடுத்து அம்மானை வரத்தொடுப்பதும் இயல்பு. ஆடிக்கொண்டே இங்ஙனம் பாடுவர். பாடுங்கால் தாமும் மகிழ்ந்து பிறரையும் மகிழ் விப்பர். காவிரி நாடனைப் பற்றி வஞ்சி மகளிர் இத் தகைய அம்மானைப் பாடல்களை இனிமையாய்ப் பாடுகிறார் கள். அந்தப் பாட்டில் பாண்டியனார் பழம்புகழும் மின்ன விட்டுப் பின்னி வருகிறது. இங்ஙனம் வஞ்சி நாடன் வைகைநாடன், காவிரி நாடன் (சேர, சோழ, பாண்டியர்) மூவருமே ஏற்றத்தாழ் வின்றி, வஞ்சிநகர் மகளிரால்

போற்றப்படுகின்றனர். அம்மானையாடியும், பந்தாடியும், ஊஞ்சல் ஆடியும் பிரிந்த மகளிர் எல்லோரும் ஒன்று கூடி வள்ளைப்பாட்டுப்பாடி வாழ்த்தி முடித்தனர். சேர வேந்தன் ஏராளமான நிலங்களை மானியமாகக் கண்ணகி கோட்டத்திற்கு வழங்குகிறான்.

இதன் பின்னர் - மணிமேகலையின் வரலாற்றை வினவிய சேர வேந்தர்க்குத் தேவந்தி எடுத்துக் கூறினாள். பின்னர் சேரனும் மாடலனும் ஏனையோரும் அங்கிருந்து நகர்ந்தனர். இளங்கோ அடிகளும் அவர்களைப் பின் தொடர்ந்தார். அப்பொழுது தேவந்தி ஆவேசமடைந்து, அடிகளை நோக்கினாள். வஞ்சி நகரத்து மணி மண்டபத்தில், தந்தை சேரலாதன் அரசு வீற்றிருக்க நீ செங்குட்டுவனுடன் வீற்றிருந்தாய். அப்பொழுது அரசனாதற்குரிய இயல்பனைத்தும் உன்னிடமே இருப்பதாய் நிமித்திகன் கூறினான். நீ சினந்து அவனை நோக்கி 'எனக்கு முன்னவன் (அண்ணன்) இருக்கையில் முறை பிறழ்ந்து கூறினாய்' என்று சொல்லி அவனை உறுத்து வெறுத்தாய்! அண்ணன் அரசாள, அன்றே நீ துறவு பூண்டாய். குணவாயில் கோட்டத்திலே துறவு பூண்டிருந்த துறவிகள் முன்னிலையில், அரசாளும் சுமை அகற்றிவிட்டு அவர்களுள் ஒருவனாகி விட்டாய். அந்தமில் இன்பத்தை ஆளும் துறவரசாகிச் சிறந்தாய் என்று கூறினாள்.

சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து
அந்தமில் இன்பத் தரசாள் வேந்தென்று
என் திறம் உரைத்த இமையோர் இளங்கொடி

எனக் கண்ணகியாரே தேவந்தி மீது ஆவேசம் பூண்டு தம் மெதிரே தம்மைப் பற்றிப் பேசியதாகக் கூறுகிறார் இளங்கோவடிகள். ஆகவே காவியக் கதையொடு அதன் கவிஞனின் வாழ்க்கையும் கலந்த உயர்தனிச் சிறப்பைச் சிலப்பதிகாரம் பெற்று நிலவுகிறது.

இனி உலகத்தவர்களுக்கு அரிய பல நீதிமொழிகளை அடிகள் கூறித் தமது ஒப்புயர்வற்ற காவியத்தை முடிக்கின்றார்.